5-2

வெளியீடு எண் 143.

# சிவப்பிரகாசம் - சீர்மைக்கட்டுரை

## மங்கலவாழ்த்துப்பகுதி



...துறை ஆதீனம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ ஆனந்தநடராஜப்பெருமான் புரட்டாசி அபிஷேக மலர்






திருவாவடுதுறை ஆதீனம்

3—10—1960

வெளியீடு எண் 143




உ
சிவமயம்

கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதிதேவநாயனுர்

அருளிச்செய்த

# சிவப்பிரகாசம் நூலின் சீர்மைக்கட்டுரை

## மங்கலவாழ்த்துப்பகுதி



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து

இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம்

1960

5-2 1.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானுவாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

## மெய்கண்டசாத்திரங்கள் பதினன்கு

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

உ

சிவமயம்

## ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் துதி

பண்இசைவெம் பரிதிமதி திலதயிலம்
தீஇரும்பு பாணி உப்பு
விண்அனிலம் உடலுயிர்நீர் நிழல்உச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பால்நீர்
கண்இரவி உணர்வொளிபோல் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனைஆண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

•

21-வது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகபரமாசாரியசுவாமிகள்

ஓங்கி எங்கும் நிறையொளியாய்
உலகம் உயிர்கள் உண்முகிழ்ப்பத்
தாங்கி நிற்கும் தனிப்பொருளே
தமியேற் காக்கத் தண்ணளியால்
தேங்கு கருணை வடிவாகித்
தென்பால் வயங்குந் துறைசைக்கண்
பாங்கு மிகுசுப் பிரமணியப்
பரம குருவாம் பதம்பணிவாம்.

— தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்**

உ

சிவமயம்

# நன்றியுரை

வாதவூட்டி வல்லிரும்பு செம்பொனுக்கும் வழியதாய்ப்
போத வூட்டி யறிவிலேனைச் சித்தியுள் பொருத்தியே
நாதவூட்டி நற்சிவப்ர காசமெய்த வைத்தருள்
பாதவூட்டு மைந்தெழுத் ததிபரைப் பணிகுவாம்.

ஒளியின் உதவிகொண்டே இருளில் இருப்போர் தாம் விரும்பும் பொருளைத் தேடி அனுபவிக்கின்றனர். நாம் இப்போது இருளில்தான் இருக்கின்றோம். அதாவது பிறப்புட்பட்டு ஆணவ வல்லிருளில் அகப்பட்டுக் கிடக்கின்றோம். படைப்பின் நோக்கமே முத்திப்பேறு அடையச் செய்தல்தான். ஆதலின், நாம் விரும்ப வேண்டிய பொருள் முத்திச்செல்வமே ஆகும். எந்த மதத்தின் கொள்கையும் இதுவே. இந்த அரும் பொருளை அடைவதற்கு நாம் நாடவேண்டுவது சாமானிய வெளிச்சமன்று. சகவிளக்கு முத்திச்செல்வத்தைக் காண உதவாது; அகவிளக்கே அதனைக் காட்டுவது. இந்த அகவிளக்கென்பது பதிஞானம் ஆகும். இப்படி ஒருவிளக்கிருத்தலை நமக்கு எடுத்துச் சொல்வன சாத்திரங்களாம். அவ்விளக்கினை நாம் அடையமுடியாதபடி நம்மிடமுள்ள குறையைப் போக்குபவரே ஆசாரியர். அவ்விளக்கொளியை நமதாக்கிக் கொண்ட பின்னர் முத்தியின்பாய் விளங்குபவரே இறைவர். ஆகவே, நாம் நம் பிறப்பின் நோக்கத்தினை ஈடேற்ற விரும்பினல் முதலில் தெரியவேண்டுவது சாத்திரமே ஆம்.

**சிவப்பிரகாசம் :** சாத்திரங்கள் பலப்பல உள. பதி - பசு - பாசம் என்னும் முப்பொருள்களைப் பற்றி ஐயமற எல்லாவற்றையும் அறிவிப்பனவே சாத்திரங்கள். அவை பதினான்கு. அவற்றுள் தலையாயது சிவஞானபோதம். இதுவே, இந்தச் சிவப்பிரகாசத்துக்கு முதல்நூலாகும். சிவஞானபோத நூலினை விரித்து உரைப்பது சிவஞானசித்தியார். இது வழிநூலாகும். ஆகவே, இச்சிவப்பிரகாசம் சார்புநூல் ஆகும். சிவஞானபோத நூலினை யாவரும் கற்றுத்தெளிதல் எளிதன்று. சிவஞானசித்தியார் மிக விரிந்தநூலாதலின் அது கூறும் விரிவினை உளங்கொள்ளல் எளிதன்று. இவ்வாறான நம்மனோர் நிலையை ஆசிரியர் ஸ்ரீ உமாபதி தேவநாயனார் நன்கு தெரிந்தே நம் உளங்கொள்ளும் வகையில் இந்த நூலை மிகச்சுருக்கமும் விரிவுமின்றி ஏற்படுத்தியுள்ளாராவர். பதிஞானப்பிரகாசம் எய்தப் பெறுவதே சித்தாந்தத்தால் ஆகும் பயன். இதனை இந்த நூல் தெரிவுறுத்துகிறது. இந்த நூல் மூன்று பகுப்புகளைக்கொண்டது. முதலில் இருப்பது பாயிரமாகிய மங்கலவாழ்த்துப்பகுதி. அடுத்து உள்ளது பொது அதிகாரப்பகுதி. இறுதியது உண்மை அதிகாரப்பகுதி. பாயிரத்தால் நூற்சிறப்பு விளங்கும். பொது அதிகாரப்பகுதியால் பதி - பசு - பாச இலக்கணங்களை அறியலாம். உண்மை அதிகாரப்பகுதியால், அநுபவமுறை அறியப்படும். இந்நூல் 101 திருவிருத்தங்களை உடையது. இந்நூல் கி. பி. 1306ல் இயற்றப்பட்டதென்பர். இந்த நூலொன்றைக் கற்றறிதலால் சித்தாந்தசைவ உண்மை நுண்மைகள் யாவற்றையும் நாமறியலாம். இந்தச் சார்புநூலைக் கற்றறிந்தபின்னர், முதனூல் வழிநூல்கள் கற்பது இயைபுடையதாகும்.

**நூலின் உரை :** இந்நூலுக்கு உரை செய்தார் இவ்வாதீனத்துத் திராவிடமாபாடிய கருத்தராகிய

ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள் மாணவர் பன்னிருவருள் ஒருவராகிய இலக்கணம் ஸ்ரீ சிதம்பரநாத முனிவர் ஆவர். இவர் உரை, பாடங்களைச் செம்மை செய்து உரைவகுக்கின்றது; இலக்கணக்குறிப்புக்களும் தருகின்றது. ஆதலின் போற்றத்தக்கதாகும். இவ்வுரை கி. பி. 1772 ஆம் ஆண்டளவில் ஏற்பட்டதாகலாம்.

இவ்வுரைக்கு முன்பே மதுரைச்சிவப்பிரகாசரால் விரிவான உரையொன்றியற்றப்பட்டுள்ளது. விரிவும் நுட்பமும் அகலமும் உடையது இவ்வுரை. இவ்வுரைகளிலும், பாடங்களிலும் பொருந்தா இடங்களை எடுத்துக்காட்டி உரைவகுப்பதே ஸ்ரீ சிதம்பரநாதர் உரை.

மேலும், மெய்கண்டசாத்திரங்கள் பதினான்குக்கும் ஸ்ரீ நமசிவாயத்தம்பிரான் என்பார் உரை இயற்றியுள்ளார் என்பர். அப்படியானால் இந்த நூலுக்கும் இவரது உரை இருந்திருத்தல் கூடும். ஆனால் இதுவரை அகப்பட்டிலது. இங்ஙனம், பலர் இந்நூலுக்கு உரைகண்டு உதவியிருப்பதுகொண்டே நாம் இந்த நூலின் பெருமையை அறியலாகும்.

இந்த வகையில் மெய்கண்டசாத்திரங்கள் இணையற்றவை ஆகும். இந்தச் சாத்திரங்களின் கருவூலமே திருவாவடுதுறைத் திருமடம். இச்சாத்திர வழியில் நம்மை நிறுத்தவல்ல ஆசாரியபீடமும் அதுவே. மண்ணுலகிற் சிவலோகம் என நாம் இவ்விடத்தை மதித்தல் தக்கதாம். இத்திருமடத்தே இதுபோது இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி அருட்செங்கோல் ஓச்சிவருபவர்கள், ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியசுவாமிகள் ஆவார்கள். உலகமக்கள் உய்தி கருதி இவர்கள் மெய்கண்டசாத்திரப் பனுவல்களைப் பலவகையாலும் வெளியிட்டருளிவருகின்றார்கள்.

இவர்கள் இந்தச் சிவப்பிரகாச நூலினுக்குச் சீர்மைக் கட்டுரை ஆக்குமாறு அடியேனை ஆணையிட்டருளினார்கள். அந்தத் திருவருளாணை இப்பணியைக் கைகூடச் செய்கின்றது அல்லால் அடியேன் முயல்வால் இஃது ஆயினதின்றாம்.

இதுபோழ்து இவர்கள் திருவருளாணையால் இச் சிவப்பிரகாச நூலின் பாயிரமாகிய மங்கலவாழ்த்துப் பகுதிக்கான சீர்மைக்கட்டுரை, நிகழும் சார்வரி ஆண்டு புரட்டாசித் திங்கள் ஸ்ரீ ஆனந்த நடராஜப்பெருமான் அபிஷேகமலராக வெளியாகின்றது; தொடர்ந்து பிற பகுதிகட்குரியனவும் வெளியாகும். இவர்கள் கருணையும் அருளாட்சியும் ஓங்குவன ஆகுக என நாம் என்றும் வழுத்துதல் நன்றாம்.

இங்ஙனம் அடியேனை இந்த நற்பணியிற்புகுத்தி ஆட்கொள்ளுகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பெருந்தகைமையினை மனம் மொழி மெய்களால் போற்றுகின்றேன். இந்தச்சீர்மைக்கட்டுரையில் காணப்படும் குறைகளைக் களைந்து திருத்திக் கண்டு கோடல்வேண்டி அறிஞராவரையும் பணிந்து கேட்டுக் கொள்ளுகின்றேன்.

நவப்பிர காச மாகி நானிலம் நடத்தும் தெய்வம்
தவப்பிர காசத் தோற்றத் தானுமா பதியாய் மேவிச்
சிவப்பிர காசம் செய்து செப்பிய சீர்மை கொண்டே
பவப்பிரகாசம்பண்ணிப் பவத்தொடக்கறுத்தல்செய்வாம்.

இங்ஙனம்,

கட்டுரை ஆசிரியன்,

21-G. துக்காராம்தெரு,
கடலூர் N. T.
1—10—60.

திருவாவடுதுறை ஆதீனப்புலவன்,
**தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.**

உ

சிவமயம்

## ஸ்ரீ உமாபதிதேவநாயனூர் துதி

அடியார்க் கெளியன் எனத்தில்லை
அண்ணல் அருளும் திருமுகத்தின்
படியே பெற்றுன் சாம்பாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலும் கரைவுற் றடைந்திடுவான்
உயர்திக் கையினை அருள்நோக்கால்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல்போற்றி.

— குருபரம்பரை விளக்கம்.

உ

சிவமயம்

செற்றங் குடிகொள் மனத்தரெலாம்
சீலம் முதலாம் நெறிநான்கும்
உற்றிங் குயர்ந்தே இறையடிசேர்
உண்மை முத்திப் பயன்பெறுவான்
மற்றிங் குணர்த்து மாண்புடைத்தாம்
மாசில் நூல்கள் எட்டருளும்
கொற்றங் குடியார் உமாபதியார்
குரைநற் கழலே குறுகுவமே.

— தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவப்பிரகாசம் - சீர்மைக்கட்டுரை

---

## காப்பு

### விநாயகர் வழிபாடு

(பொது - நிர்க்குணசொரூபம்)

[கலிவிருத்தம்]

ஒளியான திருமேனி உமிழ்தான(ம்) மிகமேவு
களிஆர வரும்யானை கழ(ல்)நாளும் மறவாமல்
அளிஆளு(ம்) மலர்தூவு(ம்) அடியார்கள் உளமான
வெளிஆகும்; வலி(து)ஆய வினைகூட நினையாவே.

### பொழிப்புரை

ஞானப்பிரகாசமான திருமேனியையும், கவுள் சுவடு உமிழாநின்ற மதம் மிகப் பெருகுகின்ற அருட் களிப்பினையும் உடைய (தியானிப்போர் கண்ணும் மனமும்) நிறைய வெளிப்படுகின்ற யானைமுகத்தனாகிய கணபதியினுடைய சீர்பாதங்களை நாள்தோறும் மறவாமல் (செவ்வியால்) வண்டுகளை ஆளாநின்ற மலர்களை இட்டு வழிபடுகின்ற அடியவர் உள்ளமானவைகள், (முன்பு உண்டான அஞ்ஞான இருள் நீங்கி ஞானப்) பிரகாசமாம். (பின்பு) வன்மையதான (மூவித) வினைகளும் (அவர்களைப்) பொருந்த விசாரியா.

### கருத்துரை

கணபதி வணக்கம், அஞ்ஞானத்தை நீக்கும்; வினை வலியைப் போக்கும்.

### விளக்கவுரை

**தொடக்கவுரை:** சிவப்பிரகாசம் என்னும் இந் நூல்வரலாறுபற்றி, 'நூலும் நூலாசிரியரும்' என்னும் தலைப்பின்கீழ் முன்னர்க் கூறப்பட்டுள்ளது. மக்கட் பிறப்பெடுத்துள்ள நாம் எல்லோரும், இப்பிறப்பெனப் படும் இருள் நீங்கப்பெற்றுச் சிவப்பொருளினது பிரகா சத்தே ஒன்றப்பெறுதல் வேண்டும். முடிந்த குறிக் கோள் (சித்தாந்தம்) இஃதேயாம். இக்குறிக்கோளினை அடைதற்கான உபாயங்களை நாம் அறியவேண்டும். இதனால் நமக்குச் சிவஞானபோத விளைவு ஏற்படும். இவ்விளைவுக்கான நெறிவகைகளைச் சிவஞானபோதம் என்னும் சாத்திரம் சாற்றுகின்றது. இங்ஙனம் எய்தப் பெற்ற போதம் நம்பால் நிலைபெறவேண்டும். இந்த நிலைபேற்று முறைகளை விளங்க உபதேசிப்பது சிவ ஞான சித்தியார். இவ்விதம் போதமும் சித்தியும் பெற்ற பின்னர் அடையப்படும் நற்பேறு சிவப்பிர காசம் ஆகும். இதுபற்றியே, சிவஞானபோதம் முதல் நூலெனவும், சித்தியார் வழிநூலெனவும், இச்சிவப்பிர காசம் சார்புநூல் எனவும் சாற்றப்படுகின்றது. சிவ ஞானபோதம் சுருக்கமுறையில் அமைந்திருப்பது. சித்தியார் விரிந்தமுறையில் இருப்பது. இவ்விரண்டு நூல்களின் செய்திகளையும் சிவப்பிரகாசம் பக்குவப் படுத்தி அளவானமுறையில் செப்புகின்றது. இதனில் குரவர் திருவருளும், ஆகம சாரங்களும் அடங்கி யுள்ளன. ஆதலின், சித்தாந்த சைவத் திறத்தினை

எளிதின் அறிய விரும்பும் நாம், இந்நூலினை ஓதுதல் இன்றியமையாததாகும். அங்ஙனம் ஓதி உணரப் பெறின் சிவம் பிரகாசமாகும் என்பது துணிபாம்.

இந்த நூலின் திருவிருத்தங்கட்குச் சம்பிரதாய மான உரை இன்னதெனத் தெரியும்பொருட்டு ஒவ்வொரு பாடலின் கீழும் அவ்வுரையின் பொழிப்புத் தரப்பட்டுள்ளது. அப்பொழிப்பின் விளக்கமே சொல்ல லுறுகின்றது இச்சீர்மைக் கட்டுரை நூல்.

மேலே உள்ள செய்யுள் இந்தச் சிவப்பிரகாச நூலின் காப்புச் செய்யுள் ஆகும். இது, சித்தாந்த சம்பிரதாயப்படிப் பொதுவானமுறையில் விநாயகர் வழிபாடு கூறுகின்றதாகும். ஜீவர்களின் துன்பம் போக்கி இன்பம் ஆக்கியுதவும்பொருட்டு இறைவரே விநாயகராகி விளங்குகின்றாராவர். 'தந்தையே மைந்த னாகிறான்' என்பது சுருதிமொழி. அப்படி ஆவது அருட்பெருக்கினால்தான். அருள் என்பது சக்தி என்று அழைக்கப்படும். ஆகவே, சிவமும் சத்தியுமான திரு வுருவே விநாயகக்கோலம் ஆம். "பெண்ணொருபாகம் வைத்த பிஞ்ஞகன் வடிவுகாட்டும் - அண்ணலம் களி நல்யானை" என்பது கூர்மபுராணம். ஜீவர்கள்மீதுள்ள அளவுகடந்த பேரருள் காரணமாகச் சிவம் மேற் கொள்ளும் முதற் சிறப்புருவம் கணபதியுருவாதலின், கணபதி வழிபாடு யாவரானும் முதற்கண் மேற் கொள்ளப்படவேண்டுவதாயிற்று. இதனால், அருளும் ஞானமும் ஆகிய இரண்டு அறிதரவாரா இயல்புகளின் ஒன்றுபட்ட அறிதரவரும் திருவுருவே விநாயகர் எனப்படும் உண்மையாகும் என்னலாம்.

அளவற்ற ஐசுவரியம் படைத்துள்ள பேரழகனை ஒரு செல்வந்தன் உள்ளான் என்று வைத்துக்கொள் வோம். இவன் எதும் குறைவற்றவனுதலால் மிக்க இன்புடன் இருக்கின்ருன். இவன், இவ்வாறிருக்கை யில், இவனுல் உதவி செய்யப்படுதற்கான உரிமை பூண்ட வறிஞன் ஒருவன் இவன்முன் வந்து துன்பத் தின் உருவம்போன்று தோற்றமளித்து நிற்கிருன். இவ்விதமான இருவர் எதிர்ப்பாட்டின்போது நிகழ்வ தென்ன என்று நாம் காணலாம். துன்பு ஒருசிறிதும் இல்லானுகிய செல்வந்தன், தன்முன் வந்து துயரத் தோடு நிற்கும் இன்பில்லாதவனேப் பார்க்கிருன். அதாவது, துன்புள்ளவன் நிலேயினே முதற்கண் அறி கிருன். இப்போது செல்வந்தனுடைய அறிவு, செய லில் இறங்குகிறது. சலனமற்றிருந்த செல்வந்தன், அறிவுச்சலனம் அடையப்பெறுகிருன். எதிரே உள்ள வறிஞன், செல்வந்தனின் அறிவுக்குக் காட்சியாகின் ருனேயன்றி, இன்னம் தன் வறுமைகூறத் துணிந்தா னிலன். ஆனுல், அச்செல்வந்தனின் இதய இரக்கத்துக் கான (அருளுக்குரிய) அறிகுறிகளின் வெளிப்பாட்டினே ஆவலுடன் கவனித்துக்கொண்டே நிற்கிருன். இதே நேரத்தில், செல்வந்தன் அறிவு, அருளே எழுப்பி வறிஞன்மீது இரக்கம்வைக்கத் தூண்டுகின்றது. இதனுல், செல்வந்தன் இப்போது அறிவுடன் கூடிய அருளுடையவனுகிருன். இப்படி ஆனதன் அடை யாளமாக அவனது கண்கள் கண்ணேட்டம் காட்டு கின்றன. முகம் இரக்கத்தை வெளிப்படுத்துகின்றது. இந்தக்குறிப்புக்களேக் கண்டதும் வறிஞன், செல்வந் தனே நெருங்கி முதலில் கும்பிட்டுப் புகழ்ந்துபேசித் தன் வறுமையை விளம்பி உதவி கேட்கிருன். அப் போது அறிவருள் வண்ணத்தானுகிய செல்வந்தன்

இருகைகளாலும், இன்பளிக்கவல்ல செல்வங்களை வாரி, வறிஞனுக்கு வழங்குகிறான். வறிஞன் உள்ளம், 'இனி இன்புற்று வாழலாம்' என்று களிப்பு அடைகிறது. வறிஞன் முகமும் இன்பக்காட்சிக்கு இலக்காகிறது. இந்த நிலையில், கொடுத்த செல்வந்தனும் மகிழ்கின்றான். வாங்கிக்கொண்ட வறிஞனும் மகிழ்கின்றான். ஈத்துவக்கும் இன்பமும், இரப்பகன்ற இன்பமும் ஒருங்கு குதுகலிக்கின்றன. பிறகு, வறிஞன், தன் வறுமைபோக்கும் வழிகளிலெல்லாம் பெற்ற பொருளைப் பயன்படுத்தி வாழலுறுகிறான். கொடுத்தவன், தன் உரிமையைச் செய்தோனாகத் தன்னைக் கருதுவதனால் தன்னைப் பாராட்டிக்கொள்ளல் இலன். வாங்கினவன், வறுமை ஒழியப்பெற்றவனாதலால், கொடுத்தோனை மறவாமல் பாராட்டக் கடமை பூணுகிறான். இரப்பாரை மிகுதியாகப் பெற்றுள்ள இந்த ஞாலத்தில் இந்தக் காட்சி மிகவும் இயற்கையானதாகும். வறிஞன் காட்சிப்படுமுன்பு, செல்வந்தனுடைய சலனமற்றிருந்த அறிவின்பத் தோற்றத்தையும், காட்சிப்பட்ட பின்பு சலனமுற்றிட்ட அறிவருளின்பத்தோற்றத்தையும் நாம் சிந்தித்தால், செல்வந்தன் ஒருவனுடைய இருவகை நிலைமையினையும் எளிதில் நாம் உணரலாம்.

இந்த உதாரணத்தை நாம் நினைவில்கொண்டு, சிவசீவர் விஷயத்தில் பொருத்திப் பார்க்கலாம்.

சீவர்கள் மலபந்தமுடையவர்கள்; வினைத்துயருற்றுத் தீரா இடும்பையால் வாடுபவர்கள். ஆனால், சிவ வியாபகத்துள்ளே தாமிருப்பது தெரியாமல் சீவிப்பவர்கள். ஆகவே, சிவ சந்நிதானத்திலே இருப்பவர்களே

ஆவர். இவர்களின் கேவல நிலையினை இறைவன், நிறைந்த அறிவினனாதலால் அறிந்துள்ளானுவன். அப்போது அவ்வறிவின் இயக்கத்தால் முதல்வனிடம் ஒருவித அசைவாற்றல் பிறக்கிறது. இதுவே அருள் எனப்படுவது. "ஒன்றவன் தானே; இரண்டவன் இன் அருள்" என்ற திருமந்திரவரியும் இதனைப் புலப் படுத்தும். இந்த அருள், தன்னை விளைத்திட்ட அறிவினை அகப்படுத்திக்கொண்டு ஜீவர்கள்பால் இரக்கம்காட்டத் தூண்டுகிறது. இந்த அருளொன்றிய அறிவுநிலை யானது சீவர்களின் துன்பத்தை நீக்கவும், இன்பத்தை ஆக்கவும் முந்துகிறது; அதற்கான ஆற்றலை வெளிப் படுத்துகிறது. இத்தகைய அறிவு அருள் ஆற்றல் ஒன்றிய நிலையே விநாயகர் தத்துவமாகும். ஆதலால், சீவர்களின் துன்பம் போக்கவும், இன்பம் ஆக்கவும் முந்துகின்ற தெய்வமாகக் கணபதி போற்றப்படுகின்ரு ராயினர். சிவத்தினது இந்த முதன்மை நிலையினை இறைஞ்சுவதே சீவர் யாவர் கடமையும் ஆகிறது. சிவமும் இக்கடமையை அனுட்டித்துக் காட்டுதல் புராணங்களில் கூறப்படுகின்றது. ஆதலால், விநாயகர் வணக்கம் யாவராலும் எத்தொழில் தொடக்கத்தும் செய்யப்படுதல் நியதியாகும் என்னலாம். அதன்படி, இந்நூலினை இயற்றப் புகுமுன்னர் இந்த நூலாசிரிய ரான ஸ்ரீ உமாபதிதேவநாயனுர், சம்பிரதாயமான நியதி யினை நமக்கு அறிவுறுத்தும்வகையில் இப்பொதுவான விநாயகவணக்கம் புரிந்தருளியுள்ளாராவர். இதனை, "ஆசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் தமக்கு இடையூறு சிறிதும் அணுகாமை அறிந்தாராயினும், ஆன்ருேராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணுக் கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும் முதற்கண் இடை யூறு நீக்குதற்குரிய, கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல

வாழ்த்துக் கூறுகின்றார்'' எனச் சிவஞானமாபாடியத் தொடக்கத்தே உள்ள வாசகத்தாலும் நாம் தெரியலாகும். இனி, நூலாசிரியர் கூறியுள்ளதான காப்புச் செய்யுட் கருத்துக்களை நோக்குவோம்.

ஒளியான திருமேனி (நிர்க்குணம்) :

சர்வ அண்டங்களும் வெம்மை, தண்மை என்ற இருவகைவல்லமைகளால் ஆவனவாம். வெம்மையை அதன் பண்புபற்றி 'ஆண்' என்பர். தண்மையை அங்ஙனமே 'பெண்' என்பர். ஆண்மையைச் சிவம் எனவும், பெண்மையைச் சத்தி எனவும் பேசுவர். ''ஆணெலாம் இறைவன் பெண்ணெலாம் தேவி'' என்பது சைவபுராணம். வெம்மையின் இயக்கம் தண்மையைத் தோற்றுவிக்கும். உயிரகம் என்னும் வாயு வெம்மை இயல்பினது. இவ்வாயுவின் கூட்டுறவால் நீரகம் தண்ணீராதல் விஞ்ஞானவழியால் அறியப்படும். பகல், வெம்மை நீர்மையது; இரவு, தண்மை நீர்மையது. இவ்விரண்டும் 'நாள்' என்னும் ஒன்றின் இருகூறுகளே. இவ்வாறே, வெம்மை தண்மைகளின் ஒன்றுபட்ட இயல்பு (அல்லது) மூல இயல்பு ஒளி ஆகும். காலம் செல்லச்செல்ல விஞ்ஞான ஆய்வாளர்கள், எல்லா . அணுக்களுக்கும் அண்டங்களுக்கும் ஆதியாய் ஒளி ஒன்றே நிலவுவதைக்காண்பர். இதனால் ஒளியே யாவற்றிற்கும் மூலமாம். இந்தஒளி ஒரு வரம்புடையதன்று. வரம்பற்ற பரப்பினது. இவ்வொளியே எவற்றையும் தோற்றுவிப்பது; பின் எவற்றையும் ஒடுக்கி மறைப்பது. ஒள் என்பது பகுதியாகக் கொள்ளப்படின், ஒளி என்னும் சொல் யாவற்றையும் ஆக்குவது (அல்லது)பிரகாசிப்பிப்பது என்று பொருள்

தரும். 'ஒளி' என்பதே பகுதியாகக் கொள்ளப்படுகை யில் யாவற்றையும் மறைப்பது (அல்லது) ஒடுக்குவது என்று பொருள்படும். எனவே, ஆக்கல் அழித்தல் களுக்கு மூலமாய்நிற்கும் பேரொளியே இறைமை யாகும். இதனை "அலகில் சோதியன்" எனவும், "நலஞ் சுடரே" எனவும், "பேரறியாத பெருஞ்சுடர்" எனவும், மெய்யறிவு படைத்தோர் பேசுவர். இந்த ஒளியே அகத்தும் புறத்தும் இருப்பது. எல்லாவற்றையும் தன் வெளியுள்ளே அடக்கி விளங்குவது. ஆதலினால் தான் பழமையான இருக்குவேதம் ஒளிவழிபாட்டைக் கூறிநிற்கிறது. காயத்திரிமறை இவ்வழிபாட்டினையே இயம்புகிறது.

இந்தப் பேரொளியை எவரும் உணர்ந்து ஓத இயலாது. ஓதற்கும் உணர்தற்கும் எட்டாதிருப்பது இப்பரஞ்சோதியின் இயல்பாகும். இப்பரஞ்சோதியின் ஒரொரு கூறே உயிர்களின் உள்நின்று அவைகளை உயர்த்துகிறது. ஆதலால், இவ்வொளியினைப் பரிபாக முற்ற உயிர்கள் அழுந்தி அனுபவிக்குமே அல்லாமல் தனித்துநின்று அறிந்து கூறுதற்கு ஒருபோதும் இயலா தென்பர். சுருக்கமாகச் சொன்னால், வானவெளியில் எல்லா நட்சத்திரங்களும் கிரகங்களும் அடங்கியுள் ளனவே யன்றி, அவ்வானவெளி முழுவதையும் எந்த நட்சத்திரமும் எந்தக் கிரகமும் தாம் எவ்வளவு பெரியவையாக இருப்பினும் அடக்கிக்கொள்ள முடி யாமைபோன்ற இயல்புடையது இப்பேரொளி என்ன லாம். இந்தப் பேரொளி, தன்னுள் இயக்கநிலையில் பசுமையை உட்கொண்ட செம்மைத்தன்மையதாக ஒளிர்வதாகும். "நீர்மலி வேணியன்" என்று இந்த நிலைமை கூறப்படுகின்றது. செம்மையே சிவம்;

பசுமையே அம்மை. அம்மையப்பரே முதல்வர். சடப் பொருளான ஒளி, காணும் கண்ணுக்குப் பொருளைக் காட்டும் இயல்புடையது. ஆனால், பொருளை அறியும் இயல்பினதன்று. ஆனால், மேலே விவரிக்கப்பட்ட ஒளியானது அறிவதும் அறிவிப்பதுமான இரண்டும் உடையது. ஆகையால், இவ்வொளியை ஞானமய மானது என்று கூறுவர். எனவே, இறைமையின் ஒருகூறுன வரம்பிலா ஞானமே விநாயகரின் திருமேனி யாகும். இதனாலேயே, ‘ஞானப்பிரகாசமான திரு மேனியையும்’ என்று உரை வகுக்கப்பட்டுள்ளது. இறையொளிக்கும் சடவொளிக்குமுள்ள வாசி இது கொண்டறியப்படும். இந்த இறையறிவு இருந்தாங்கு யாவற்றையும் எப்போதும் அறியும் இயல்பினதாகும். சாதாரண ஒளி இன்றிப் பொருட்காட்சி தற்காட்சி யனுபவங்கள் நிகழாமைபோலவே, இந்தப் பதிஞான அடைவு இன்றி எவ்வுயிர்க்கும் தற்காட்சியும் இறைக் காட்சியும் நிகழமாட்டா எனத் தெரியலாகும். சித் தாந்த சம்பிரதாயத்தில் ஞானத்தின் முக்கியத்துவம் இன்றியமையாதது என்பதை ஒளியான திருமேனி என்ற தொடக்கம் புலப்படுத்துவதாம். ஆகவே, ஞானமானது உயிர்கட்கு முத்திச் செல்வத்தை நல்கு தற்பொருட்டு உருவங்கொண்டாலொத்தது மூத்த பிள்ளையாரின் திருவுருவமாம் என்க.

### உமிழ் தானம் மிகமேவும் :

மேலே குறிக்கப்பட்ட ஞானத்திற்குப் பயனாக இருப்பது திருவருட்பெருக்கேயாகும். சாதாரண யானை யின் வலிமை அதன் மதப்பெருக்கால் உணரப்படும். ‘மும்மதமும் பொழி யானை’ என்று மதப் பெருக்குக்

கொண்டு கரியின் பெரிய வல்லமை உணர்த்தப்படும். அன்றியும், போரில் பகையைப் புறங்காண்பதற்கும் இந்த மதப்பெருக்குக் குறிக்கப்படுவது உண்டு. பகை தொலைத்து வெற்றி தருவிக்கும் ஆற்றல் யானைக் கிருத்தலால், பண்டைநாளில் சேனைச்சிறப்பு, யானைச் சிறப்பால் பேசப்பட்டது. ஆகவே சாதாரண யானை, தான் பழகிய அறிவுகொண்டு போர்க்களத்தே தன் ஆற்றலை வெளிப்படுத்தித் தோல்வியை, உடையா னுக்கு நிகழவொட்டாமல் போக்கி வெற்றியை ஆக்கி யுதவுகின்றமை தெரியலாம்.

இங்குக் குறிக்கப்பட்ட விநாயகராகிய மூத்த நாயனார் ஞானமயமான திருமேனியராதலால், தம்மைச் சிந்தித்து வந்திப்பவருக்கு அவருடைய பகையாகிய வினையைப்போக்கி, இறைமையின்பினை அடையுமாறு அருள்புரிகின்றார் ஆவர். சாதாரண யானையுடம்பு மதத்தை உமிழ்கிறது; ஆற்றலை வெளிப்படுத்திக் காட்டுகிறது; வெற்றிமகிழ்வைக் கூட்டுவிக்கிறது. இவ் வாறே விநாயகருடைய ஞானத்திருமேனி ஆற்றலை - ஆளுந்தன்மையை - வெளிப்படுத்தி, அருட்டகைமை யைப் புலப்படுத்தி உதவுகின்றதாகும். ஆற்றலில்லா அருளும், அருளில்லா ஆற்றலும் எவர்க்கும் இதம் பயக்கமாட்டா. ஆண்மையியல்புடன் கூடிய அருளே, அடைந்தார்க்குச் சுகம்செய்யும். ஆதலால், கணபதி யானவர், தம்மை உபாசிப்போர்க்கு ஆற்றலை அடை விக்கும் திருவருட்பெருக்கினை மிகவும் பொழிகின்று ராவர். இதனால், இறையருளினை எய்த விரும்புவோர் எவரும் அதற்குரிய வாயிலாகவுள்ள ஞானசொரூபி யாகிய ஆனைமுகவரைப் போற்றுதல் வேண்டுமெனத் தெரியலாகும். இறையருளையடையாமல் முத்திசாதித்

துக்கொள்ள முயலுதல், வித்தின்றி விண்ணிற்பயிரிடும் முயற்சிபோலாம். இதுகாறும் கூறியவாற்ருல் விநாயக ருடைய சொரூபம் ஞானமும் திருவருளும் கொண்ட தொன்ருகும் என நாம் அறியலாம். மேலும், உமிழ் என்னும் சொல்லாற்றலால், பிள்ளையார், தம்மை வேண்டுவோர்க்கு விரைந்தும் எப்போதும் அருளைப் பொழியும் இயல்பினர் என்பது பெறப்படும்.

**மிகமேவு களி ஆர வரும் யானை :**

இதுவரையில் ஞானமே உயர்ந்ததெனவும், அதன் பயன் திருவருளே எனவும் கண்டோம். இங்ஙனமாய ஞானமும் திருவருளும் எதனைப் பயனுக உதவுவன என்பதை இந்தத்தொடரினுல் அறியலாகும். அறிவின் பயன் இரக்கங்காட்டலும் அவ்விரண்டன் பயன் இன்பஞ் செய்தலுமேயாகும். அங்ஙனமே விநாயகர் ஆவார். தம்மை வழிபட்டாருக்குக் களிப்பினை - இன்பத்தினை - நுகருமாறு அளித்தருளுகின்ருராவர். ஆட்கொள்ளுதலே இன்பஞ்செய்தல் எனப்படும். குருடன்முன் அழகுடையாள் ஒருத்தியை நிறுத்து வதால் ஏதுபயன்? குருடனுக்குக் கண்ணைக்கொடுத்து உதவுதலே முதற்கண் செய்யப்படவேண்டும். அப் படியே, இன்பத்தை இறைவன் விளைத்தருளுமுன்பே, அவ்வின்பினை நாம் நுகரும் வண்ணம் பக்குவம் செய்தருளல்வேண்டியுள்ளது. இந்தப்பக்குவம் நமக்கு வருவிக்கப்படாவிடில் நாம் இன்பினைத் துய்க்க இய லாமற்போம். எனவே, பக்குவப்படுத்தி ஆனந்தானு பவத்தை நல்கும் உதவியை விநாயகப்பெருமான் நமக்குச் செய்கின்றமையினை ஆர என்ற சொல்லாட்சி யால் அறியலாம். ஆருபவர் நாம். அருளுபவர்

விநாயகர். விநாயகர் வரலாறுகள் யாவும் இப்பெரும் பேற்றினைப்பற்றியே பேசுவனவாம். மற்றும், 'ஆர' என்பதனால் நாம் குறை ஒரு சிறிதுமின்றி நிறைய அநுப விக்கலாம் என்பதும் தெரியலாம். களி என்பது இங்கு மட்டமான இன்பத்தை உணர்த்தாமல் தன்னை மறந்தின்புறுவதான பேரின்ப நுகர்வினை உணர்த்துவ தாகும். எனவே, ஆனந்தத்தை ஆனைமுகர் அருள, நாம் அதனை ஆர அநுபவிக்கலாம் என்று தெரியலாம். அன்றியும், ஒன்றை அடைய நயப்பவர், அதனைத்தர வல்லவரிடம் செல்லவேண்டும்; பிறகு புகழவேண்டும்; அப்பால் குறை உணர்த்திக் கேட்கவேண்டும். இங் ஙனம் சென்று, புகழ்ந்து, கேட்பினல்லது விரும்பிய ஒன்றை அளிப்பவரிடமிருந்து பெறுதல் அரிதாம். சில வள்ளல்கள், சென்று புகழ்ந்து கேட்பின் அளிப்பர்; மற்றும் சிலர், சென்று புகழ்ந்தாலே இரப்பினை உணர்ந்து தருவர்; வேறு சிலர், சென்றாலே ஈவர். இவர்கள் யாவரினும், இரப்பவர் இருக்குமிடம் தாமே தேடிச்சென்று கொடுப்பவரே சாலச் சிறந்தவராவர். அங்ஙனம் தந்துதவிய வள்ளல்களும் பண்டு உண்டு. இதை நோக்கியே, "சென்று பொருள்கொடுப்பர் தீதற் றோர்" என்றனர் நன்னெறி கூறவந்தார். இவ்வாறே நம் மூத்தநாயனார், தம்மை வழிபடுவோர் தம்மிடம் வரும்வரை பொறுத்திராமல், தாமே அவரிருக்குமிடம் எழுந்தருளி வேண்டுவன ஈந்தருளும் திறத்தராவர். இதுபற்றியே வரும் யானை என்று அருளியுள்ளார் ஆசிரியர். இக்கருத்தினை, "இப்பொழுது என்னை ஆட் கொள வேண்டித்—தாயாய் எனக்குத் தான் எழுந் தருளி ... ... வந்து என் உளந்தனில் புகுந்து" என் றுரைக்கும் விநாயகரகவல் அடிகளாலும் தெரியலாம். "யானாகிய என்னை விழுங்கி வெறுந் தானாய் நிலைநின்ற

தற்பரம்'' ஆதலின் யானை என்றார் ஆசிரியர். இது பெயரினகத்துள்ள நுட்பமாம். மறைவதும், மறைப்பதும் செய்யவல்லது யானை என்பது திருமந்திரம். வானப்பரப்பு முழுதும் காணும் கண்ணுக்குளடங்கா வண்ணம் நிறைந்து காண்பதுபோன்று, தியானம் செய்பவருடைய கண்ணுக்கும் மனத்துக்கும் அடங்கா வண்ணம் - கட்டுப்படாவண்ணம் - எங்கும் நிறைந்துள்ள பேருருவினராக விநாயகர் எழுந்தருளுவர் என்பதும் ஆரவரும் என்பதன் பொருளாதலும் பொருந்தும். வருதல் என்பது வெளிப்படுதல் ஆகும்.

யானை கழல் :

மேற்கூறப்பட்ட சிறப்பியல்புகளைக் கொண்ட விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை, அவர் அருள் பெற விரும்புவோர் வணங்கவேண்டியவராவர். உலகத்து யானையின் கால்கள் அடைந்தவரை உழக்கிக் கெடுப்பனவாகும். ''வாய்புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்'' என்பது புறம். அப்படிக் கெடுக்கும் இயல்புடையதன்று பிள்ளையார் திருவடிகள். போர்க்களத்திலே ஆபத்து வேளையிலே தானொருவனாக நின்று எதிர்த்துவரும் பகைவரனைவரையும் முன்வைத்த காலைப் பின்வைக்காமல் உறுதியாய் நின்று வென்றும் கொன்றும் உதவும் வீரனுக்கு அவன் திறத்தினை மெச்சி அரசர், தம் கையால் அவ்வீரன் காலில் கழல் அணிந்து சிறப்பிப்பர். எனவே, வீரக்கழல், அணிந்திருப்பாருடைய உதவும் உறுதியைத் தெரிவிக்கும் சின்னமாம். அங்ஙனமே, விநாயகர் ஆருயிர்கட்குப் பெரும்பகையாக உள்ள ஆணவம், கன்மம், மாயை என்கிற மலங்களை ஓட்டி உதவும் உறுதிப்பாடு

உடையவராதலை நமக்கறிவிக்கும்பொருட்டே ஆசிரியர் திருவடி என்னுமல் கழல் என்று குறித்தாராயினர். எனவே, கழல், திருவடியை உணர்த்தும் சொல்லாகி நிற்பதாம். மேலும், உலகத்து யானைகூடத் தன்னிடம் பழகியவரை மேலேற்றும் பொருட்டுக் கால்காட்டி உதவுவதைக் காண்கிறோம். அங்ஙனமே கணபதியின் திருப்பதமும் வழிபடும் அடியவரை மேலேற்ற உதவுவதாகும் என்னலாம். இதனால், கணபதியின் திருவடிகள், வழிபடும் நமக்கு ஞானத்தை உதவும் பெற்றியன என அறியலாகும்.

இனிக் கணபதியின் திருவடிகளை அடைய விரும்புவோர் எவ்வண்ணம் பூசிக்கவேண்டும் என்பதை ஆசிரியர், நமக்கறிவிக்கலுறுகின்றமை காணலாம்.

**நாளும் மறவாமல் அளி ஆளும் மலர் தூவும் அடியார்கள் :**

மங்கலத்தைத் தாம் அடைய விரும்பும் எவரும் மங்கலப்பொருள்களில் முற்பட்டதாகிற மலர்கொண்டு இறைவனை வழிபடவேண்டும். ஆவிற்குப் புல் எப்படி விருப்பம் செய்யுமோ அப்படியே இறைவற்கு மலர் விருப்பம் செய்யும். மலர் கிடைத்தலரிதாங்காலையும் இலைகொண்டு வழிபடலாகும் என்பர் "இறைவற்கு ஒரு பச்சிலை" என்னும் பாட்டில் திருமூலர். உள்ளத்துள்ளிருந்து எழும் அன்பின் கசிவினைத் தேன் பொசியும் மலரருச்சனை தெரிவிப்பதாகும். பச்சிலையிற் பசுமை இதனை உணர்த்துவதாம். இவ்வாறு புறத்தே சோலையிலே உள்ள மலர்கொண்டு பூசிப்பது ஒருவகை.

இனி, அகத்தே இதயமாகிய சோலையிலே ஒரெட்டு மலர்கள் உண்டு. அவை உயிர்க்கொலை செய்யாமை முதலனவாகும். இந்த எட்டுக் குணங்களும் இதயம் பெற்றிருந்தொழுகப் புறத்தே மலர்கொண்டு அருச்சிப்பது சிறப்புடைத்தாம். இந்த இருவகையான மலர்களையும் இங்குள்ள மலர் என்ற சொல் குறிப்பதாகும். அன்றியும், புறத்துமலர்கள் வண்டுகளைச் செவ்வியால் ஆளுந்தகையனவாயிருத்தல் வேண்டும்; அதாவது நறிய புதிய புனிதமான மலர்களாக இருத்தல் வேண்டும் என்பதாம். எனவே, வண்டுகளும் முகராதமுன் பறித்திடும் மலர்களாக இருக்கவேண்டும் என்பது பெறப்படும். இதனால், இறை பூசனைக்கான மலர்களை நாமும் முகரலாகாதென்பது தெரியலாகும். மேலும், வண்டுகளின் ரீங்காரநாதம் கூறப்பட்டுள்ளமை கொண்டு மந்திரநாதத்தோடும் மலர் அருச்சிக்கப்படல்வேண்டு மென்பதும் புலப்படும். இவ்வெல்லாம் அளி ஆளும் மலர் என்ற தொடரால் நாம் கொள்ளலாகும்.

இனி, மலரருச்சனை, இதய சமர்ப்பணத்தைப் பலனாக உடைமையின், ஒவ்வொன்றாக எடுத்தணியும் நிலைகடந்து மெய்ம்மறந்த பாவனையில் மலர்கள் தூவப்படும் நிலையினை எய்தலுறும், ஆதலால், அருச்சிப்பின் முடிந்த நிலையினைத் தூவும் என்ற சொல் குறிப்பதாகலாம். அன்றியும், ஜீவகருணை முதலான எண் குணங்களும் நிறையப்பெற்ற பத்திமான்கள் மலர்களைத் தூவுதலே அமையும் என இச்சொல் குறிப்பதும் கூடும். திருக்கண்ணப்பதேவர் புரிந்த அருச்சனையையும், சிவகோசரியார் புரிந்த அருச்சனை முறையினையும் இங்கு நாம் சிந்தித்தல் பொருந்தும். மேலும், மனத்துக்கு மறத்தலும் நினைத்தலும் பண்பாம். மறத்தலும்

நினைத்தலுமில்லாத பண்புடையது புந்தி. அறிவுக்கு மறதி என்னும் அவத்தை இலது. ஆதலால், மனத்தால் மறந்தும் எண்ணியும் கணக்கிட்டு அருச்சிப்பதைவிடப் புந்திக்குள் எப்போதும் இறையடிகளை அமர்த்திடுதல் அமைவுடையதாகும். இது அனவரத சிந்தனை எனப் படும். "புந்தியில்வைத்து அடி போற்றுகின்றேனே" என்பது திருமந்திரம். இதுவே மறவாப் பூசனை ஆம். இதனை, நாளும் மறவாமல் தூவும் என்ற தொடர் தெரிவிப்பதாம்.

'நம:' என்று சொல்லிச் சொல்லி அருச்சிப்ப தெல்லாம், அருச்சிப்பவர் யான் எனது என்னும் இரண்டு செருக்குக்களும் அறப்பெற்றவரென்பதை உணர்த்திடும். அதாவது, தமது சுதந்தரவினத்தை அறிந்து, இறைவனுடைய சுதந்தரத் தகைமையை அவர்கள் அறியப்பெற்றவர் என்பதைத் தெரியச் செய்வதாம். தமது சுதந்தரமின்மையை உணரப் பெறுதலே அருச்சிப்போரியல்பாகும். இங்ஙனம் உணரப்பெற்றவரே தொண்டர்களாவர். இதனையே அடியார்கள் என்ற சொல் உணர்த்துவதாம்.

இவற்றால், நாம் நாடோறும் விநாயகரடியினைப் புந்தியுள் வைத்து, இதயசமர்ப்பண பூர்வகமான எண் குணமலர்களாலே தம்மை மறந்து பூசித்துத் தற் சுதந்தரவினத்தை உணரப்பெற்றவர்களாகி, இறை வனுடைய பரிபூரண சுதந்தரத்துள் அடங்கிநிற்கப் பெறவேண்டும் எனத் தெரிதல் தக்கதாம். இம் முறையே உண்மைவழிபாடெனப்படுவதாம். இதுவே மறையாகமபூசனை முறையாம் என்பர். அளி - வண்டு; அன்பு என்னும் இருபொருட்கும் உரித்தாம்.

இனி, இதன்மேல் ஆசிரியர் இவ்வகை வழிபாட்டின் பயன் உணர்த்துகின்றுராவர். இவர் இங்கு உணர்த்தும் இப்பூசனைப்பயன்கள் இரண்டாம். அவை ஞானேதயமும் மலநீக்கமும் ஆம்; இவற்றைப் பாச நீக்கமும் சிவப்பேறும் எனவும் ஞான நூல்கள் இயம்பும். இதன்விரிவை இனிவரும் தொடர்கள்கொண்டு காண்போமாக.

உளமான வெளி ஆகும் :

யானை, ஒரு காட்டுக்குள்ளே புகுமாயின், அங்கு உள்ள செடி கொடிகளை மிதித்தும், மரங்களை ஒடித்தும், பெயர்த்தும், தள்ளியும் முன்பு அடர்ந்த இருண்டகாடாக இருந்த அவ்விடத்தை வெட்டவெளியாக்கிவிடும். நம்முடைய உள்ளமும், காமம் வெகுளி முதலான பாசங்கள் எனப்படும் மரஞ்செடிகொடிகள் அடர்ந்து அஞ்ஞானமெனப்படும் இருள் பொருந்திய காடுபோல்வதாகும். இந்தக் காட்டினை அழிப்பதற்கு விநாயகராகிய யானை துணைபுரிகின்றதாகும். நாளும் மறவாமல், தம்முடைய திருவடியையே அடியார்களானவர்கள் நினையாமல் நினைந்திருப்பதனுல் அவர்களுள்ளத்தை, பாசமற்றதான நேசமொன்றே உற்றதான வெளியாக்கி உதவுவர் விநாயகர். அதாவது, அஞ்ஞானகன்மங்கள் தொலைவுற்று மெய்ஞ்ஞானம் நிலைபெற்று விளங்கும் என்பதாம். மெய்ஞ்ஞானத்தை வெளி என்றல் மரபு ஆம். காட்டின் அடர்த்தியால் இருள் இருந்தது. காடு கெடுத்ததும் இருள் நீங்கி ஒளி பெருகியது. அவ்வாறே பாச உண்மையால் அஞ்ஞானம் நிலவியது. பாசம் நீக்கமுற்றதும் மெய்ஞ்ஞானம் துலங்கலுற்றது ஆன்மாவினிடத்தில் என்பது

தெரியப்படவேண்டும். 360 ஆம் திருக்குறளின் பரி மேலழகர் உரை ஈண்டுப் பார்த்தல் நன்றும். இதனுல் மெய்யுணர்வின் தோற்றம் புலப்படுத்தப்பட்டது என்க. ஆகவே, உயிர் ஞானப்பிரகாசம் எய்தும் எனப்பட்டது. 'ஒளியான திருமேனி' எனத்தொடங்கி, 'உளமான வெளி ஆகும்' என்று முடித்துக்காட்டு தலால் சுத்தாத்துவித இயல்பு உரைக்கப்பட்டதாகும். இது சிவப்பேறு செப்பியவாறும்.

**வலிதாய வினை கூட நினையாவே :**

**வினை** என்பது சாதி ஒருமையாய் நின்று ஐங்குற்றங்களையும் - பஞ்சமலங்களையும் உணர்த்தும் சொல்லாம். இங்ஙனம் வினை என்னும் சொல் பஞ்ச மலங்களையும் குறித்தலை இவ்வாசிரியர் இயற்றியுள்ள நெஞ்சுவிடுதூது நூலில் "பழையவினைப் பஞ்சமலக் கொத்து" என்னும் இடத்தே காணலாகும். உயிரை இன்புறவொட்டாமல் தடுப்பன மலங்களே. எனவே உயிரின் குற்றம் மலம். உயிரின் குணம் ஞானம். ஞானம் தோன்றுதல், 'உளமான வெளி ஆகும்' என்பதனுல் கூறப்பட்டது. இனிக் குற்றக்கேடு இத் தொடரால் கூறப்படுகின்றது. உயிரின் வல்லமை - அதாவது சிற்றுணர்வும் சுட்டுணர்வும் - கொண்டு மலம் நீக்கப்படும் தகையதன்று. இறையருள் கூடப் பெற்றே நீக்கமுறுவது மலம். இத்தகைய வலிமை மலத்திற்கு இருத்தலின் வலிதுஆய என்ருர். இதனுல் இறையருளை நாம் நாடியேதீரவேண்டுமென்பது தெரி விக்கப்பட்டது. மற்றும், எடுத்துள்ள இந்த உடம்பால் முகந்துகொள்ளப்பட்ட பிராரத்தம், உடனூழாய்க் கழியுமே அன்றி, ஆன்மாவினைப் பந்தித்து ஆகாமியத்

துக்கு விளைவு உண்டாக்கும் வல்லமையுடையது ஆகாது என்பதும் தெரியப்படுதல் நன்றும். ''ஏன்ற வினை உடலோடு ஏகும்'' என்பது திருவருட்பயன். மேலும், பிராரத்தவினையனுபவமும் ஆன்மாவின் உணர்ச்சிக்கு வாராவிதம் ஜிவன்முத்தநிலை எய்தும் எனவும் தெரியலாம். நினையாவே என்ற சொல்லால் இந்நிலை உணர்த்தப்பட்டது என்னலாம்.

இனி, இந்தக் காப்புச் செய்யுளில் நிர்க்குண விநாயகர் வழிபாடு கூறுமுகமாக நாம் அறிய வேண்டுவனவாகிய எல்லா உண்மைகளும் - சித்தாந்தங்களும் - ஆசிரியரால் கூறப்பட்டுள்ளன என்னலாம். எனவே, சொல்லப்புகின், இந்நூலின் சாரம் இப்பாடற்கண் உள்ளதாகும். காப்பு என்னும் தலைப்பினுல் பிரமாண இயற்செய்திகளும், 'ஒளியான ...... ஆணை' என்னும் தொடரினுல் இலக்கண இயற்செய்திகளும், 'கழல் நாளும் மறவாமல் ... ... தூவும்' என்பதனுல் சாதன இயற்செய்திகளும், 'உளமான ... நினையாவே' என்பதனுல் பயனியற்செய்திகளும் சூக்குமமாகச் சொல்லப்பட்டிருத்தல் தெரியலாம். மேலும், 'அடியார்கள்' என்ற சொற்பிரயோகத்தால் பிரமாண இயற்செய்திகள் புலப்படுத்தப்பட்டிருத்தலும் காணலாகும்.

நாமும் இக்காப்புச் செய்யுளை நியமத்துடன் ஓதி, அருட்கணபதியின் உதவியால் பாசநீக்கமும் சிவப்பேறும் கூறும் இந்தச் சிவப்பிரகாச நூலின் நுட்பங்களை அறியப்பெறுவோம்.

காப்புச் செய்யுள் விளக்கம் முற்றும்.

# மங்கல வாழ்த்துப்பகுதி

இதுவரையில் அருட்பிள்ளையாரைப்பற்றிய காப்புச் செய்யுள் விளக்கம் பார்த்தோம். இனி, அந்தக் காப்புச் செய்யுளை அடுத்துப் பன்னிரண்டு திருவிருத்தங்கள் மங்கலவாழ்த்து எனப்படும் பாயிரப்பகுதியாக ஆசிரியர் இயற்றியுள்ளார். "பாயிரம் ஈராறு" என்பது ஒரு நாலடைவுப்பாடல். இதனில் நிஷ்களபரசிவ வாழ்த்து முதலாக அவையடக்கச் செய்யுள் ஈருகப் பன்னிரண்டு பாடல்கள் உள்ளனவாகும். இனி, அந்த அந்தச் செய்யுட்கும் தலைப்பு ஆங்காங்குத் தரப்படும். இந்த முறையில் இங்குக் கூறப்படுவது மங்கலவாழ்த்துப்பகுதியின் முதற் பாட்டு ஆகும்.

## 1. நிஷ்களபரமசிவனை வழுத்துதல்

(நடராசர்)

[எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

ஓங்(கு)ஒளிஆய் அருள்ஞான மூர்த்தி ஆகி
  உலகம்எலாம் அளித்தருளும் உமைஅம்மை காணத்
தேம்கமழும் மலர்இதழி திங்கள் கங்கை
  திகழ்அரவம் வளர்சடைமேல் சேர வைத்து
நீங்கல்அரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
  நின்(று)இமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமலம் மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
  புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம்.

## பொழிப்புரை

அநாதியான மலஇருளை நீக்குவதனாலே எல்லா ஒளிகளினும் உயர்ந்த ஒளியாய், அநாதி மலமுத்தனாதலினாலே கருணையாகிய ஞானமே திருமேனியாக

உடைய நிட்களசிவனுனவன், பிரபஞ்சத்தையெல்லாம் உண்டாக்காநின்ற கிரியாசத்தியான உமை என்னும் திருநாமத்தைப்பெற்ற எல்லா உயிர்கட்கும் தாயானவள் காண, மணம் வீசுகின்ற விரிந்த கொன்றை மாலையினையும் ஞானசந்திர கலையினையும் கங்கா நதியினையும் விளங்காநின்ற பாம்பினையும் நீண்ட சடைமேலே பொருந்தவைத்து, விட்டு நீங்குதற்கு அரிய பிறவித் தொடர்ச்சியானது, தன் ஆடல் கண்டோரை விட்டு நீங்கும்படிச் சிற்றம்பலத்துள்ளே நிலைபெற்றுத் தேவர்கள் துதிப்ப ஞானக்கூத்தை ஆடியருளும் பொலிவினை உடைய தாமரை மலர் போன்ற சீர்பாதங்கள் எம்முடைய தலைமேலும் இதயத்துள்ளும் பொருந்தும்படி, யாம் வணக்கம் செய்து துதிப்பாம்.

### கருத்துரை

நிஷ்கள சிவம் உயிர்களின் ஈடேற்றம் காரணமாக ஞானசபையிலே ஐந்தொழிலாடலை அனவரதமும் செய்தலை வணங்கித் துதிப்பது இச்செய்யுட்கருத்தாம்.

### விளக்கவுரை

**ஓங்கு ஒளி ஆய் :**

ஒளியைப்பற்றிக் காப்புச் செய்யுளின் விளக்கவுரையிலே ஒரு சிறிது கூறப்பட்டது. அங்கு விநாயக மூர்த்தியை 'ஒளியான திருமேனி' உடையவர் என ஆசிரியர் கூறினர். இங்கு, விநாயகருக்கு ஒளியான திருமேனியை உதவக்கூடியவருக்குத் திருமேனி எத்தகையதாக இருக்கும் என்ற ஐயத்தினைக் களைதற்கு 'ஓங்கு ஒளியாய்' என்றுர் ஆசிரியர். தனது ஒளி

வெளியிலே விநாயகரை வெளிப்படுத்த வல்லவர் சிவபரம்பொருள் ஆவர். எனவே, கணபதியின் ஒளி மேனியினைத் தன்வியாபகத்துள்ளே அடக்கியுள்ளவர், எல்லையற்றதாய்ப் போக்குவரவற்றதாய் விளங்கும் பேரொளி வெளியாக உள்ள தன்மையரேயாவர் என நாம் தெரியலாம். இது, காப்புச்செய்யுள் தொடக்கத்துக்கும், இந்தச் செய்யுள் தொடக்கத்துக்கும் உள்ள தொடர்பு குறித்த விளக்கமாகும்.

இனி, உலகின் புறவிருளை நீக்கவல்லனவாகிய சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய எல்லா ஒளிகளுக்கும் மேலானதாய், இவ்வொளிகளைத் தன் ஒரு சிறுகூற்றிலே அடங்கச்செய்வதாய், இவ்வொளிகளுக்கெல்லாம் ஒளிரும் தன்மையை உதவுவதாய்ச் சிவ ஒளி இருத்தலின் **ஓங்கு ஒளி ஆய்** என்றுர் ஆசிரியர் எனலும் ஆம். 'மெய்ச்சுடருக்கெல்லாம் ஒளிவந்த' என்ற திருவாசகக்கூற்று இதனை உணர்த்துவதாகும். அன்றியும், 'தேயமார் ஒளிகளெல்லாம் சிவனுருத் தேசதென்னுர்' என்னும் சித்தியார் வாக்கும் இங்கு நோக்குதற்குரியதாம். அன்றியும், இறைப் பொருளைக் குறித்துக் கூறவந்த நூல்கள் யாவும் இவ்வொளிவண்ணம் அன்றி, வேறு வண்ணங்கூறி அறிமுகப்படுத்துவதில. அருச்சுனன் கண்ட இறைவனின் பெருநிறைத் தோற்றத்தினைப் பகவற்கீதை, "திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா । யதிபா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மன: ॥" எனவும், "ஸர்வ ஆஸ்சர்ய மயம் தேவம் அனந்தம்" எனவும் கூறுதல் காணலாம். பிரமத்தின் ஸ்வரூபம் கூறவந்தாரும் தமிழில், "அமலன் அவியாத சுடர் அளவில்லா ஆரமுதம்" என்றுரைத்தல் நோக்குதற்குரித்து.

"God is light" என்பதும் இறைவன் ஜோதிமயன் என்பதைக் காட்டும் கோட்பாடு ஆகும். மற்றும் திருமந்திரம், "சுடர்உற ஓங்கிய ஒள் ஒளி ஆங்கே-படருறு காட்சிப் பகலவன் ஈசன்" என்றுரைப்பதும் இக்கருத்தை வலியுறுத்தும். "சேண் விளங்கு அவிர் ஒளி" என்பது திருமுருகாற்றுப்படை. இவ்வாறுய ஒளிப்பொருளை "ஸச்சிதானந்தம்" என்கிற நிகரற்ற சொல் குறிப்பதாகும்.

பரம்பொருளின் சொருபத்தை இப்படிக்குறித்து விளக்கினுலல்லது வேறுவிதமாகக் கூறவோ அறிவிக்கவோ இயலாது. ஆதலின் இஃது இறையின் சொருப இலக்கணம் எனப்படும். அதாவது, வடமொழியில் 'ஸ்வரூப நிருபக விசேஷணம்' எனப்படுவதாம். ஆதலின், இங்கு ஆசிரியர் கூறியுள்ள 'ஓங்கு ஒளி ஆய்' என்னும் தொடர் இத்தகைய விசேஷணத்தைக் குறிப்பதென்று கொள்ளப்படும். பூத ஒளியினிடம் உயிர்த்தன்மை இலது; ஆதலின் அறிவுத் தன்மையும் இல்லை. எனவே மகிழ்வுப்பொருளன்று சட ஒளி எனத் தெரியலாம். ஆனுல், மேலே கூறப்பட்ட ஒளியானது காலம், இடம், செயல், உவமை கடந்து நித்தியமாய் இருப்பது; ஞானமயமானது; ஆனந்தத்தின் உறைவிடமானது. ஆதலால், இதனின் மேற்பட்டதொரு பொருளோ அன்றி ஈடாயதொரு பொருளோ ஏதும் இன்ரும். சமுத்திரத்துக்குள் வாழும் எந்தப் பெரிய ஜலப்பிராணியும், சமுத்திரத்தை விடப் பெரியதாக இருக்கமுடியாது. குமாரனுக இருப்பவன் ஒருபோதும், தந்தையினும் ஆண்டிற் பெரியவனுக இருக்கமுடியாது. இத்தகையவாம் இயல்புடையதே மேல் கூறப்பட்ட ஒளிப்பொருள்.

சூரியன், காலையில் உதயமாகிறது. அவ்வுதயத்தினின்றும் ஒளி எழுகிறது. இந்த ஒளியானது உலகத்திலுள்ள ஜீவராசிகளுக்கு விழிப்பைத்தந்து உணர்வை உசுப்பிச் செயல் முயற்சியை உண்டாக்குகின்றது. இருளில் ஜீவராசிகள், தம்மையும் அறியாமல் உறங்குகின்றன; உணர்வு ஓய்ந்து கிடக்கின்றன; செயலற்றுக் கிடக்கின்றன. ஒளியிலும், இருளிலும் ஜீவராசிகள் இவ்விதமான அனுபவத்தை அடைவதை நாம் காண்கிறோம். இதனால், ஒளிதான் ஜீவராசிகளை இச்சையறிவு செயல்களில் பிரவேசிக்கப் பண்ணுகின்றதெனத் தெரியலாம். இங்ஙனமாய இச்சை அறிவு செயலியல்பினைத் தனக்குள் அடக்கிக்கொண்டிருப்பதாய் ஜீவராசிகட்கும் அவ்வியல்பினை எழச்செய்வதாய் உள்ளது மேலே குறிக்கப்பட்ட இறையொளி. ஆகவே, இந்த ஒளியின் ஆக்கப்பாடுதான் ஜீவராசிகளின் விளக்கத்திற்கு முதன்மை பூண்டுள்ளதாகும். இத்தகைய சந்நிதி வைபவத்தினை விளக்கி நிற்பதாகும் ஆய் என்னும் சொல் என்னலாம். இதுகாறும் கூறியவாற்றால் இறைநிலை நம்மனோரால் விளக்கத்தக்கதன்றென்பது தேறப்படும். இத்தன்மைகொண்டது உயர்மறை புகழ் சிவம் என்பதைப் பின்வரும் அடிகளால் அறியலாம். ''நிகழ் சிவம் பராபரம் சூக்குமம் நித்தியம் - எங்கும் பூரணம் நாசமில்லாதது - நின்மல அனுபவம் நிகழ்பிரமாணம் - தன்னில் உணர்ந்திடுதற்கரிதானது-கொன்நவில் குணங்களும் கூடாததுவே'' என்னும் இவ்வடிகள், இறையின் வடிவிலா நிலைபற்றி இவ்வாதீனத்து 85-ஆம் வெளியீட்டினகத்துள்ளனவாகும்.

'ஓங்கு ஒளி ஆய்' என்ற தொடரின் ஆய் என்ற சொல்லால், ஜீவராசிகளின் ஆணவ வல்லிருளைப்

போக்குவதே தன்னியல்பாகக்கொண்டது இவ் ஒளி எனவும் நாம் தெரிதல் தகும். இதனை "அடருறு மாயையின் ஆரிருள் விசில் - உடலுறு ஞானத் துறவிய ருமே" என்னும் திருமந்திர வரியும் புலப்படுத்தும். ஆதலால், நாம், மேற்சொல்லப்பட்ட ஒளிவெளியிலே உள்ளவர்களாவோம் எனவும், அவ்வொளியுதவியாலே இருள் ஒழியப்பெற உள்ளோம் எனவும், இருளொழி தரப்பட்ட பின்னர் அவ்வொளியுளே அடங்கி அழுந்து கிறோம் எனவும் தெரிதல் ஏற்புடைத்தாம்.

அருள்ஞான மூர்த்தியாகி :

வயலில் இருப்பது பயிர். அதற்கு வளர்ச்சிப் பொருட்டாக வேண்டுவது தண்ணீர். அந்தத் தண்ணீரை அளவறப் பெற்றிருப்பது ஆறு அல்லது ஏரி என்பதாம் நீர்நிலை. இந்த நீர்நிலையில் இருக்கும் தண்ணீரே பயிருக்கு வளர்ச்சியுதவிக் காக்கவல்ல நீர்மை கொண்டது. அப்படி இருப்பினும், அந்த நீர்நிலையிலுள்ள தண்ணீர் முழுவதும் அணையை உடைத்துக்கொண்டு ஒருமுகமாய் வெள்ளமெடுத்து வயலுட்புகுந்து பாயுமானல் பயிர் பாழாய்விடுமே யல்லாமல் வளரமாட்டாது. அதற்குப்பதிலாக, வயலில் உள்ள பயிர்களினுடைய வேர்களின் மென்மைக்குத் தக்கபடிப் பொசியும்நிலையிலே நீர்த்தேக்கத்திலிருக்கும் தண்ணீர் பையப்பையக் காலம் அளவு முதலியவை களுக்குத் தன்னை உளப்படுத்திக்கொண்டு பாய்ந்து உதவவேண்டியுள்ளது. இவ்வாறான கட்டுப்பாட்டுக் குத் தன்னைத் தண்ணீர் உட்படுத்திக் கொள்ளா விட்டால், அத்தண்ணீர் இருந்தும் பயனில்லையாம். ஆகவே, பயிருக்குப்பயன்படும் நீர்நிலை, தன் வரம்பற்ற

நிலையினின்று தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளவும், அளவுட்படுத்திக்கொள்ளவும், வேண்டியுள்ளமை இதனுல் விளங்குகின்றதாகும். தன்னிர் சடப்பொருளாதலின், மேற்கூறப்பட்ட கட்டுப்பாடுகளைப் பயிரை வளர்ப்பவர்கள் ஆக்கித்தரல்வேண்டியுள்ளது. சித்துப் பொருளுக்குப் பிறர் துணை வேண்டுவதில்லை. சச்சிதானந்தப்பொருளுக்கு அவரின் அயலதாம் பொருளின் துணை சற்றும் தேவையில்லை. அயலதாம் பொருளும் இருத்தற்கு இடம் இல்லை. ஆதலால், அந்தப் பரம் பொருளே சிருட்டியுன்முகப்பட வேண்டியுள்ளது. அங்ஙனம் சிருட்டியுன்முகமாகும்போது என்ன என்ன இயல்புகளை அப்பொருள் வெளியிடுகிறது; என்ன என்ன கட்டுப்பாடுகட்குத் தான் உட்படுகிறது என்பதையே இந்தச் செய்யுளின் 'ஓங்கொளியாய்' என்னும் தொடருக்குப் பின் உள்ள சொற்ருெடர்கள் தெரிவிக்கின்றன. இவ்விதமான கட்டுப்பாட்டியல்புகளையெல்லாம் சாத்திர நூலோர், சிவத்தின் உபசாரத் திருமேனிகள் என்ற பெயரிட்டு உரைப்பர்.

இனிப் பேரறிவுப் பெரும்பொருளாய நிஷ்கள சிவமானது, தனக்கென்று ஏதும் ஆக்கிக்கொள்ள வேண்டிய அவசியமில்லாத தொன்ரும். இப்படித் தனக்கென்று ஏதும் ஆக்கிக்கொள்ள வேண்டாததாக இப்பொருள் இருக்கும் இயல்புடையதாயிருத்தலாலே தான், தான் யாவற்றினும் மேம்பட்டதான பரம் பொருளாக விளங்கலுறுகின்றது. தனக்கென்று ஒரு சிறிது நன்மையேனும் ஆக்கிக் கொள்ளவேண்டிய அவசியமுள்ள எந்த உயிரும், மேற்கூறப்பட்ட பரம் பொருளின் கீழ்ப்பட்டவையே ஆகும். அதாவது, பரம் பொருள் அநாதிமலமுத்தமுடையது எனவும், ஏனைய

எவ்வுயிரும் மலபந்தம் உடையன எனவும் இதனுல் அறியப்படவேண்டும் என்பதாம்.

இயல்பாகவே மலமில்லாததான பரம்பொருளி னிடம் எல்லா மங்கலங்களும் இருந்தேதீரும். மல பந்தம் உடைய உயிர்கள், தத்தம் மலநீக்கத்தின் அளவுக்கேற்ற நலங்களே பெற்றுத்துலங்கும். இதனைக் கருத்துட்கொண்டு பார்த்தால், அநாதியாகவே மல மற்றதொரு பரம்பொருள் உண்டு எனவும், அநாதி யாகவே மலபந்தமுற்ற ஏனை உயிர்வருக்கம் அதனின் வேருக உண்டு எனவும் நாம் தெரியலாகும். இப்படி யிருக்க நேர்ந்துள்ளமையால், மலரகிதமான சித்துப் பொருள், மலசகிதமான சித்துப் பொருளுக்குச் சித்துத் தன்மையில் உள்ளதோர் ஒற்றுமை காரணமாக மல நீக்கத்தின்பொருட்டு உதவும் பொறுப்பு உடையதாக உள்ளது. இந்தப் பெரும் பொறுப்பின் பயனுகவே படைப்பு முதலான காரியங்கள் நடைபெறுகின்றன ஆகும். இத்தகைய காரியங்களின் நடைபேற்றுக்கு மலரகிதமான பரம்பொருளே முதன்மை வகிக்கின்ற தாகும். இந்த முதன்மை அதனிடம் இருத்தலால், அப் பொருள்-பரசிவம்-உயிர்கள்பால் முதற்கண் திருவருள் கூரவேண்டியுள்ளது. பேரறிவுக்கு வெளிப்படையான அடையாளம் அருளுடைமையே ஆகும்.

அறிவு எந்த அளவுக்கு ஒருவரிடம் உள்ளதோ அந்த அளவுக்குத்தான் அவரிடம் அருள்தன்மை இருக்கும். பரசிவத்திடம் பேரறிவிருத்தலால் அதனி டம் பேரருள் இருந்தேதீரும். இந்தப் பேரருளே முதற் கண் பரசிவத்திடம் வெளிப்படலுறுகின்றதாகும். இந்த அருளியல்பு பரசிவத்திடமிருந்து பிரிவுபடாதது.

மரத்தின் வயிரம்போன்று ஒன்றியிருப்பது. குணம், குணியிடமிருந்து பிரிவுபடாத தன்மையதாதலால் இவ்வருள்குணம் பரசிவத்திடம் எப்போதும் மன்னி இருப்பதாகும். இத்தகைய மூல அருளை நூல்கள், அதன் வன்மையால் அகிலாண்டங்கள் யாவும் நடைபெறுதலை நமக்கு அறிவிக்கக் கருதிச் சத்தி - அருட் சத்தி - சிற்சத்தி - என்று செப்புகின்றன. ஆகவே, இறைவனுக்கும் சிற்சத்திக்கும் உள்ள சம்பந்தம் சமவாயம் எனப்படும். இறைவனின் சமவாய சம்பந்தத்தால் சிற்சத்தி இருக்கின்றதல்லால், சிற்சத்தியின் சமவாய சம்பந்தத்தால் இறைவன் இரான். ஆகையால், இறைவனிற் சிற்சத்தி சமவேதம் எனப்படுகின்றது. இந்தச் சிற்சத்தியிற் பிரிப்பின்றிச் சமவேதமாயிருப்பதைத் திரோதானசத்தி என்பர். எனவே, பரசிவத்தினது பிரிப்பற்ற அருள்வெளியே அகிலாண்டங்கட்கும் ஆதாரமாக உள்ளதாகும் என்பது தெரியப்படும். "தன்னருள் வெளிக்குளே அகிலாண்டகோடி எல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து" என்பது தாயுமானுர் தரும் விளக்கமாகும். "அருளுரு உயிருக்கென்றே ஆக்குவன் அமலன்தானே" என்பது சித்தியார்.

சூரியன், தன்கிரணங்களால் இருளை ஓட்டுகிறுன். அவ்வாறே, இறைவனும், தன்அருளாலே ஆன்மாக்களின் மலஇருளை அகற்றுகின்றுனுவன். இந்தமுறையிலே பார்த்தால், நமக்கெல்லாம் பேருதவி புரிவது அருளே என்று தெரிதல் கூடும். இந்த அருள்துணையன்றி உய்தி எய்துதற்கு வேறுதுணை நமக்கில்லை என்பது உறுதியாம். "நின்னினும் நல்ல நின்இணையடி அவை" என்ற இடத்தும் இக்கருத்திருத்தல் காணப்படும். இறைவன், ஒன்றினும் தோய்வின்றிச் சுயம்

பிரகாசமாய் நிற்கும் தன்னுண்மையில் சிவன் எனப் படுவன். இத்தகையவன், உயிர்களைக் கரையேற்றுதற் கருணையினால் அவ்வுயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் மன்னும் தன்மையில் சத்தி எனப்படுவன் என்பர். இந்தச் செய்திகளை, "ஒன்றாய்ப் பரமாய் நிருமலமாய் ஒளியாம் பரமசிவன் தனக்கு........... தழற்கு வெம்மைபோல் அவினாபாவியாய்த் துணை ஒன்றின்றாய் அவ்வாறபிமுகமாய் இயற்றுமியல்பொன் றுடையதாய்த் - தளையதிலதாய்ச் சமவேத சத்தியாய் வேறில்லாததாய் இளிவில் சத்தி சத்திமான் எனலால் பரனில்வேறுமாய் உளதென் அளவாய்ப் பொருண்மை யாய் ஒப்பிலவற்கு மூர்த்தியாய் விளிவதிலதாய் நுண்ணிதாய் மேலாய் நிறைவாய்ச் சாந்தமாய் - அந்த மாதியிலாது இவ்வாறமைந்த அமலசத்தி" என்னும் சிவப்பிரகாச விகாசக்கூற்றாலும் தெரியலாகும். இங்ஙனம் உளதாம் சிவத்திற்கும் சத்திக்கும் இயல்பி னமைந்துள்ள ஒருமைத்தன்மைக்கு "இராகுவின்தலை" என்ற ஒற்றுமைக்கிழமைச் சொற்றொடர் உதாரண மாகக் காட்டப்படுகின்றதாகும். இதுகாறும் கூறிய வாற்றால் 'தன்னுயிரஞ்சும் வினை'யிலாதானது அரு ளியல்பு காட்டப்பட்டதாகும் என்க. "அருளது சத்தி யாகும் அரன்தனக்கு" என்னும் சித்தியார்ச்செய்யுள் ஈண்டுப் பார்த்தல் நன்றாம். இதனால், இறைவனுக்கு அருட்குணம் மேம்படுதல் இயற்கை என்பது தெரியப் படவேண்டும்.

இறைவன் பேரறிவும் பேரருளும் உடையவன் என்பது இதுகாறும் பேசப்பட்டது. இனி, இப் பேரறிவும் பேரருளும் நமக்கு எந்த விதத்தில் உதவு கின்றன என்பது தெரியத்தக்கதாகும். அவ்வுதவி

யாவது, நமக்கு அறிவித்தல் என்பதாகும். அதாவது, நம்முடைய அஞ்ஞானநீக்கத்துக்கு ஆவனவெல்லாம் ஆற்றி மெய்ஞ்ஞானப்பேற்றுக்கு உதவிசெய்தலே யாகும். இந்தவகையில், நம் அறிவை விளக்குவதற்கு இறைவனுடைய அனந்தமான தன்மைகளில் ஞான மென்பது துணைபுரிகின்றதாகும். இந்த ஞானமும் சத்தி என்றே பேசப்படும். இதனைத் தடையிலா ஞானம் எனவும் கூறுவதுண்டு. இந்த ஞானமானது அனுக்கிரகம் குறிப்பது. இதனைப் பராசத்தி எனவும் பகருவர். இது உயிர்கட்கு மலபரிபாகம் வருதல் பொருட்டாக ஐந்தொழில் ஆற்றுதலைக் குறித்துச் சிறப்பு வகையாக வியாபரிக்கும் இயல்புடையது. ''சத்திதன் வடிவேது என்னில் தடையிலா ஞான மாகும்'' என்னும் சித்தியார்ச்செய்யுள் ஈண்டு ஓதுதற் குரியதாகும். இந்தச் சத்திசொரூபமே இறைவற்குத் திருமேனியாவதாம். இங்ஙனம் ஞானமே - அருளே - திருமேனியாகக்கொள்ளுவன் நிட்களசிவன். ''அரு ளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்தன்'' என்பது சித்தியார். இதனை மூர்த்தி ஆகி என்ற இடம் தெரிவிப்பதாம். ஆகி என்பதைப் பெயராகக்கொள் ளுதலும், வினையாகக்கொள்ளுதலும் உண்டு. வினை யாகக்கொள்ளும்போது ஒளி எழுவாயாகும்.

இனி, நிட்களசிவம், பரமசிவத்தில் ஆயிரத்து ஒரு கூருய் நிற்பது என்பர். பரமசிவனைப் பிரியாத அருட் சத்தியானது பரசிவத்தில் ஆயிரத்து ஒருகூருன நிட் கள சிவனுடனே கூடுதலால் கிருத்தியம் திருவுள்ளத் தடைக்கப்படுகிறதெனவும், அங்ஙனம் திருவுள்ளத் தடைப்பது பராசத்தி எனவும் செப்புவர்.

இப்பால், பராசத்தியில் ஆயிரத்து ஒருகூறு வலி உடையதாய்ப் பெத்தத்தும் முத்தியிலும் வியாபிப்பது ஆதிசத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியை உடையதாய் வடிவத்தைப் பிரேரிப்பது இச்சாசத்தி எனப்படும். அதில் ஆயிரத்தில் ஒருபங்கு வலியுடையதாய் அறிவை விளக்குவது ஞானசத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியை உடைத்தாய், ஐந்தொழிலை நடத்துவது கிரியாசத்தி எனப்படும். இப்பஞ்ச சத்திகளும் பரமசிவனுடைய பிரேரகம் ஆம்; நிட்களம் ஆம். அவிகாரமான நிட்களத்திலே சத்தி விகற்பமான கலைகளாலே மூர்த்தித்துவம் விளைகின்றதாகும். இத்துணையும் மூர்த்தியாகி என்ற தொடரில் அடங்கியதாகவும் கொள்ளல் பொருந்துவதாகும். இச்செய்தியெல்லாம், ''அன்ன சிவம் ஆயிரமாய் அதிலொன்று உன்னியபரை'' எனத் தொடங்கிக்கூறும் 'சதாசிவரூபம்' எனப்படும் நூலாலும் தெரியலாம்.

**உலகம் எலாம் அளித்தருளும் உமைஅம்மைகாண:**

நாம் பலகோடி எண்ணங்களை மனத்தால் நினைக்கலாம். ஆனால் அவ்வளவையும் சொல்லால் பேச முடியாது. எண்ணத்தின் அளவைவிடப் பேசும் பேச்சினளவு குறைபடுகின்றது. பேசும் அவ்வளவையும் நாம் செய்துவிடவும் முடிவதில்லை. பேச்சின் அளவைக்காட்டிலும் நம் செய்கையின் அளவு மிகவும் குறைவுபடுகிறது. இதனால், நம் எண்ணத்துக்கும் செயலுக்கும் நெடுவாசியுள்ளது எனத் தெரிகிறோம். இப்படியான வன்மைக்குறைவு நமக்கு ஏற்பட்டது நமது தடைபடும் ஞானத்தினால்தான். இறைவனது

ஞானம் தடைபடாதது என்பது முன்னரே கூறப்பட்டது. ஆதலால், இறைவனின் சங்கற்பங்கள் யாவும் குறைவறச் செயல்களாகின்றன. ஆனால், செயல்கள் பலவற்றையும், அறிஞர்கள் ஒரு வரையறை செய்து ஐந்தொழில்கள் என்று வகுத்துரைத்துள்ளார்கள். இவ்வைந்தொழில்களையும் செயற்படுத்துவது கிரியாசத்தி எனப்படும். இந்தக் கிரியாசத்தியை உமை என்பர். இறைவன் இரக்கத்தெழும் சங்கற்பம் செயலாகிறபோது அண்டங்கள் யாவும் முகிழ்க்கின்றனவாம். ஒருவனுக்கு ஒரு பொருளைக் 'கொடுப்பேன்' என்று ஒருவன் எண்ணுவதினும், 'கொடுப்பேன்' எனச் சொல்லுவது இரப்போன் செவிக்கு மகிழ்வூட்டும். ஆனால் அவன் இதயங்களிக்கச்செய்வது 'கொடுப்பேன்' என்று சொன்னதற்கிணங்க ஒன்றைக் கொடுத்தலாகிய செயலேயாகும். ஆதலால், இரப்பாளனுக்கு இன்பூட்டுவது செயலே ஆகும்.

இவ்வாறே ஆன்மகோடிகட்கு மகிழ்வளிப்பது இறைவனுடைய செயலேயாதலால் கிரியாசத்தி நமக்கு நேரே பயனளிப்பவளாகிறாள் எனத் தெரியலாம். ஒரு குடும்பத்திலே, மக்களைப்பெறுவது வளர்ப்பது ஆகிய செயல்களை எல்லாம் பார்த்துக்கொள்ளுபவள் அக் குடும்பத் தலைவியாகிய தாய் ஆகிறாள். எனவே, தாயின் செயல் குடும்பத்தைக் கண்ணும் கருத்துமாய்ப் பார்த்துக் கொள்வதாகும். ஆனால், அவளுடைய இந்தக் கண்காணிப்புக்கு ஏதும் குறைவு நிகழாவண்ணம் அதிகரித்துதவுவது தந்தையின் கடமையாகிறது. எனவே, தந்தையானவன் குடும்பப் பாதுகாப்புக்கு ஏற்றவண்ணமெல்லாம் ஓடி ஆட, தாயானவள் குடும்பத்தைப் பார்த்துக்கொள்ளுகிறாளாவள். நிலத்திலுள்ள

உஷ்ணம் வித்தினை முளைக்கச் செய்கிறது. சூரியனுடைய உஷ்ணம் அச்செடிக்குவேண்டும் நிறமும் உரமும் கொடுத்து வளர்க்கிறது. அக்கினியின் உஷ்ணம் செடியைப் படச்செய்து சாம்பராக்குகிறது. செடிக்குள்ளே உள்ள உஷ்ணம் அச்செடிக்குள்ள வன்மையை மறைக்கிறது. நீரிலுள்ள பிராணனென்னும் உஷ்ணம் செடியை நிலைத்து நின்று தழைக்கச் செய்கிறது. உஷ்ணம் என்கிற ஒன்றே வெவ்வேறு வகையாய்க் காரியப்பட்டு ஐந்தொழில் ஆற்றுகின்றமை இதனாலறியப்படும். இப்படித்தான், இறைவனுடைய சத்தியே நம் ஆக்கப்பாட்டுக்குரிய ஐந்தொழிலும் ஆற்றுகின்றதாகும்.

உயிரைச் சத்தி படைப்பதில்லை; உயிருக்கான உடம்பு முதலனவற்றைப் படைக்கின்றது ஆகும். ஏனெனில், உயிர் நித்தியப்பொருளாம் என்க. "தாம் ஏவு தொழிலைந்தும் பரை இயற்ற" என்பது நூற்றுணிபாம். மற்றும், ஞானமானது, உயிர்களுக்கு மலபரிபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்புவகையால் வியாபரிக்கும்போது, ஒரு கூற்றாலே திரோதானசத்தி என நின்று இச்சாஞானக் கிரியை என முத்திறப்பட்டுத் தொழிற்படும். ஞானம் எவ்வாறுளதோ அவ்வாறே இச்சை கிரியைகள் நடைபெறும். ஆதலால் இச்சை கிரியைகள் ஞானத்தின் வியாபார விசேடங்களேயன்றி வேறு தோன்றுவனவல்லவாம். இவையெல்லாம் கருதியே **அளித்தருளும்** எனவும், **உமையம்மை** எனவும், **காண** எனவும் ஆசிரியர் கூறியுள்ளாராவர். "அண்டங்கள் ஏழினுக்கு" என்னும் திருமந்திரப்பாடல் இங்குக் காண்க. இதுவரை கூறியவற்றால், சிவத்தின் சங்கற்ப

மானது கிரியையாகி உலகமெலாம் அளித்தல் செய்கின்றதென்பது தெரியப்படும். இங்ஙனம் சூக்குமமாக நடைபெறும் இந்த விஷயத்தையே நாம் கண்ணுற் கண்டறிந்து கொள்ளும்படிச் சிற்றம்பலத்து நட்டம் காட்டுகின்றதாகும். இதனை ஆசிரியர் கீழ்வருமாறு கூறியுள்ளமைகொண்டு தெரியலாகும்.

**தேம் கமழும் மலர் (1) இதழி (2) திங்கள் (3) கங்கை (4) திகழ் அரவம் (5) வளர் சடை மேல் சேர வைத்து :**

சிவபரம்பொருளின் திருமுடியிலே உள்ள வஸ்துக்களை இவ்வரிகளிலே ஆசிரியர் குறிக்கின்றார். அவற்றில் ஒன்று கொன்றைமலர். ''கண்ணி கார் நறுங்கொன்றை - வண்ணமார்பில் தாருங்கொன்றை'' என்பது புறம். கொன்றை பிரணவபுட்பம் என்பர். அது தன்னுளே பிரணவவடிவத்தை அடக்கிக்கொண்டிருத்தல் யாவரும் அறிவதே. சகலமறைகளையும் பிரணவம் அடக்கிக்கொண்டிருக்கிறது. அப்பிரணவத்தைப் பெருமான் தனக்குள்ளே அடக்கிக்கொண்டிருப்பவனுவன். அதாவது, பரஞானச் சொரூபியாகிய பரமனிடம் எல்லா அபரஞானங்களும் அடங்கிக் கிடப்பனவாம் எனப்படும். இப்படிப்பிரணவத்தைத் தன்னுள்ளே அடக்கியிருப்பதே அல்லால், அப்பிரணவத்தைத் தியானிப்பவர்களுக்கு அருள் சுரக்கும் பொருட்டுப் பசுவினுள்ளே பால் அடங்கியிருப்பது போன்று தான் அப்பிரணவப்பொருளாகி அதனுள்ளே அடங்கியுமிருக்கின்றுனுவன். இதழ்களுள், பிரணவத்தண்டு அடங்கியிருக்கும் நிலை இங்கு உவமைப்படும்.

இக்கொன்றைமலர், தேனைக்கொண்டது; வாசனை வீசுவது; மலர்ந்திருப்பது; (ஐந்து) இதழ்களை உடையது. இதனைத் தேம் - கமழும் - மலர் - இதழி என்ற சொற்கள் உணர்த்துவன. தன்னில் வந்து வீழ்ந்த வண்டினங்கட்கு அவை குடித்துச் சொக்கிக் கிடக்கும் வண்ணம் தேனை உதவுவது இம்மலர். அவ்வாறன்றி விடாயுற்றுத் தேடித்திரியும் வண்டுகளை இருப்பிடம் உணர்த்தி அழைப்பதன்பொருட்டாக வாசனை வீசுவது இம்மலர். வெறித்தலையும் வண்டு கட்குப் பஞ்ச இதழ்விரித்து மலர்ந்து நிறம்காட்டிக் கவர்வதைச் செய்வது இம்மலர். முன்னைய பழக்கத் தாலே தன்னிருப்பை வண்டுகட்கு அறிவிக்கும் பக்குவமுற்றிருப்பது இம்மலர். இங்ஙனமே, பழைய புண்ணியத்தாலே சரியை நெறியில் பற்றிக்கொண்டு, கிரியை நெறியில் நின்று, யோகநெறியில் சேர்ந்திருப் பாரை - ஆச்ரிதர்களை - ஆனந்தானுபவம் தந்து ஆதரிப் பவன் இப்பரமன் என்பதை இவ்வடைச் சொற் களால் ஒருவாறு அறியவும் கூடும். மேலும், "ஆநிரைபுரக்கும் அருங்கடன் மேற்கொள் - தானுறு கொழுநன் ஆகியும் தாங்குதல் - தாரணி தெரிப்பான் தனக்கென அமைந்த - ஏரணி முல்லை இரும்புனத் தரிவைகொண்டு - உறுந்தீங்கொன்றையும் உருவகை தொடுத்தணி - நறுந்தீங்கொன்றையின் நகுதார் மார் பினன்" என்ற வரிகளில் உள்ள அர்த்தத்தையும் இங்குப் பார்த்திடல் நன்றாம். அன்றியும், பொன்னிறம் கொண்ட இம்மலர், அந்நிறம்கொண்ட உலோகம் - தங்கம் - ஏனை உலோகங்கட்கெல்லாம் உயர்வுடையது போல - இப்பரமன் எல்லாத் தேவர்கட்கும் மேலான வன் என்பதை உணர்த்தி நிற்பதாகும் எனவும் கொள்ளலாகும். மேலும், இம்மலர் ஐந்து இதழ்

உடைமையாலும் ஓங்கார வடிவுடைய கிலத்தண்டு உடைமையாலும், பிரணவத்துக்கும் பஞ்சாக்கரத் துக்குமுள்ள தொடர்பினையும் நன்கு புலப்படுத்து கின்றது என்னலாம். ஞானநெறியாளர்க்கு அருளும் இயல்பு இதனால் புலப்படுத்தவாருயிற்று என்க.

மேற்கூறிய வண்ணம் சிவபூசனைநெறியில் நில்லா மல், அவமான காமநெறியிற் படர்ந்து சிவதூஷணை செய்வோர் கூட்டத்துட்பட்டாரையும் இப்பரமன், தனது கருணையால் வளர்த்தி ஆட்கொள்ளும் பேரருளினன் என்பதை, பிறையைத் திங்கள் எனக் கூறியிருக்கும் சொற்போக்கினால் நாம் உணரல் கூடும். சந்திரனைப்பற்றிய கதை வரலாறு தெரிந்த செய்தியாம். எனவே, 'சிவபரம்பொருள், ஆச்ரிதர்களை ஆதரித்து அருள்பவனாகமட்டில் இராமல், வைதாரையும் வாழ வைக்கும் தன்மையுடையவன் என நாம் தெரிதல் கூடும். அன்றியும் யோகநெறியில் நிற்பார் அனுபவம் சந்திரகலாமுதம் பருகிக் கிடப்பதாகும் என்பதையும் இவ்விடம் உணர்த்துவதாகலாம்.

ஆணவம் கொண்டார் ஆணாயினும் பெண்ணா யினும் சிவத்தருளால் அடக்கி ஆட்கொள்ளப்பெறு வர் என்பதை முடியிலுள்ள கங்கை காட்டுவதாகும். கங்கைபற்றிய வரலாறு தெரிந்த செய்தியேயாகும். "நீர் மிகின் சிறையுமில்லை" என்ற கூற்று கங்கை விஷயத்தில் பரமனால் பொய்யாக்கப் பட்டமை காணலாம். அன்றியும், தாமே பூசிக்கும் கிரியாநெறி யில் நிற்பார், உடம்பெலாம் நனையக் கண்ணீர் ஊற் றெனப் பெருகி வழியப்பெற்றவராவர் என்பதையும் அவர்கட்கு இத்தகை மெய்ப்பாடாகிய இன்பினை

அருளுபவன் இறைவன் என்பதையும் இவ்விடம் உணர்த்தும் என்னலாம். திங்களைச் சார்ந்த கங்கை பொங்கிவழிதல் இயல்பாம் என்க.

சிவத்துவேஷிகளாயினும் அவர் வசப்பட்டவராயினும், அவர்களையும் நெஞ்சு மாறவைத்து ஆட்கொள்பவன் பரமன் என்பதைத் திகழ் அரவம் சேர வைத்து என்ற இடம் தெரிவிப்பதாம். திகழ் என்ற அடைமொழி நஞ்சுமாறியதகைமை புலப்படுத்துவதாம். இதனால் நாத்திகரும் இறுதியில் சிவத்துக்கு ஆட்பட்டவரே யாவர் என்பது துணியப்படும். அரவம் அணிந்த கதையும் எவரும் அறிந்ததே. சரியை நெறியில் தலைப்பட்டார், பையப்பையப் புண்ணிய முதிர்ச்சியுடையராகிச் சிவத்தைப் பற்றிக்கிடக்கும் சிந்தையராக்கப்பெறுவர் பரமனால் என்பதை இச் சொற்றொடர் சொல்லிற்றாகலும் கூடும்.

இங்ஙனமாக இவ்வெல்லாப்பொருள்களையும் ஒருசேர அடக்கியும் தாங்கியும் ஓங்கியிருப்பது சடை ஆகும். வேதம் பிரணவத்தில் முடிவு பெற்றாலும், அவ் வேத சிகைகளால் உணர்த்தப்படும் பரமன் எல்லையற்றவனுவன் என்பதை வளர் என்றசொல் காட்டும். யாவர்க்கும் யாவற்றிற்கும் இறைவன் ஆதாரமானவன் என்பதை மேல் என்ற சொல் குறிக்கும். சிவத்தை அடைதற்கு முன்பு தம்முட் பகை பூண்டுகிடந்தார் எல்லாரும் உண்மை உணர்வு எய்திச் சிவத்தை அடையப் பெற்றபின்னர் அப் பகைமை ஒழியப் பெற்று ஒருநிலையான நட்பு உடையவராய்க் கூடி உவந்து வாழ்வார் என்பதைச் சேர என்ற பதம் பகரும். தேவாரம் “பாம்பொடு திங்கள் பகைதீர்த்து

ஆண்டாய்'' என்பது இங்குக் கருதத்தக்கதாம். வைத்து என்பதனுல் சிவத்தையன்றி வேறு வைப்பிடம் நமக்கு இல்லை என்பதை நாம் தெரியலாகும். எனவே, ஆகமாந்தங்களாலே அறிவிக்கப்படுபவனுகிய பரமன், சரியையாதி நெறிநின்ருர்க்கு அவ்வழிவகையில் அருளியும், அந்நெறி நில்லாதாரை அகப்படுத்தி அருளியும் செய்யவல்லானுவன் என்பது இதுகாறும் கூறிவந்ததனுல் போந்த பயனும் என்க.

**நீங்கல் அரும் பவம் தொடர்ச்சி நீங்க :**

ஆன்மாக்களின் எண்ணிக்கை அளவில்லாதது. அவைகள் மலப்பிணிப்புடையன. அம்மலப்பிணிப்புடைமையில் அவை மூவகைப்படும். ஒருமலம் உடையன, ஆணவம் மட்டில் உடையன. ஆணவம், கன்மம் என்னும் இருமலமுடையன ஒருவகையின. பிருகிருதிமாயையுட்பட்டுக் கிடக்கும் நாமெல்லாம் மும்மலம் - ஆணவம் - கன்மம் - மாயை - உடைய உயிர்வருக்கம் ஆவோம். நமக்குச் சகலர் என்பது சாத்திரம் வழங்கும் பெயராம். நாம் அறிவு மறைபட்டுச் சடம்போலக் கிடந்தபோது கேவலநிலையில் இருந்தோம். இருட்டான ஒர் அறையில் கண்ணில்லாத ஒரு குழந்தை, கைகால்கள் கட்டுண்டு கிடந்தால் எப்படிக்கிடக்குமோ அப்படி நாம் இருந்தநிலையே கேவலநிலை எனப்படும். இப்படி எத்தனையோ ஆன்மாக்கள் இருந்து வருகின்றன. இந்தக் கேவலநிலையில் நம் அறிவு செம்போடு களிம்பு கலந்திருப்பதுபோன்று ஆணவத்தோடு சரிக்குச்சரி கலந்து அணுத்தன்மைப் பட்டு ஆற்றலற்றுள்ளது. எனினும், இந்த நிலையிலே விருப்பு வெறுப்புக்கு ஏதுவான மூலகன்மம் உள்ளது.

இவ்வளவு தடைகள் கேவலநிலையில் இருந்து நம் ஆன்மாவினைத் தகைவதை இறைவன், தன்னுடைய காரணங்கருதாத கருணையினாலே விடுவிக்கச் சங்கல்பம் கொண்டு தனு கரண புவன போகங்களை வினைக் கேற்ப அளித்துதவுகின்றான். இப்படி உடம்போடு கூடிய நம் நிலைக்கே சகலநிலை என்பது பெயராம். இந்தச் சகலநிலையினை அடையப்பெற்ற நாம், இரும்பைக்கொண்டு இரும்பை வெட்டுவதுபோலப் பிறப்பைக்கொண்டு பிறப்பைப் போக்கிக்கொள்ள வழி தேடாமல் ஆகாமிய வினைகளை ஈட்டிச் சஞ்சிதத்தைப் பெரிதாக்கிப் பிராரத்துவத்தை முகந்து எடுத்துக் கொண்டு, அந்தப் பிராரத்துவ அனுபவத்துக்கு ஏற்றபடியான பிறப்பும் சூழ்நிலையும் எய்தித் திரும்பவும் ஆகாமியத்தையே தேடி வினை பெருக்கும் வேலையிலேயே ஈடுபட்டு இறந்தும் திரும்பவும் பிறந்தும் இப்படியே உழன்றுகொண்டு கிடக்கிறோம். இதனால் நாம் எடுக்கும் பிறப்புக்கள் எண்ணற்றவையாகின்றன. ஒருவன், தன் ஆயுட்காலத்தில் எத்தனையோமுறை தூங்குகிறான்; பிறகு விழிக்கிறான்; மறுபடியும் தூங்குகிறான். இதைப்போல எத்தனையோ முறை எத்தனையோ பிறப்புக்களில் பிறக்கிறோம்; சாகிறோம்; திரும்பவும் பிறக்கிறோம். இப்படி எத்தனை பிறப்புக்களை இதுகாறும் எடுத்தோம்? எத்தனை வகையாக எத்தனை தடவைகளில் எடுத்தோம்? என்பதையெல்லாம் நாம் அறியோம். இந்த அளவுக்குள்ள நம் அறியாமையினால் எடுத்துள்ள இந்த ஒரு பிறப்பே நம் பிறப்பு; இனி மறு பிறப்பும் இல்லை; என்றெல்லாம் எண்ணி வேதாகமங்களை மதியாமல் மனம்போன வழியெல்லாம் சென்று நரகம் அடைகிறோம். இந்த விவரங்களெல்லாம் இதர சாத்திர நூல் விரிவுகளினாலும்,

புராணங்களினுலும் அறியலாகும். சில மதங்கள் மறு பிறப்பே இல்லை என்றும் கூறும்; முன்பிறப்பில்லை என்னும்; கண்டதே காட்சி; கொண்டதே கோலம் என்னும்; கடவுளே இல்லை என்னும்; எல்லாம் இயற்கையே என்னும். இன்னவாறெல்லாம் நம் அறிவைக் குழப்பும் சூழ்நிலைகள் இவ்வுலகில் மாயையாலும், திரோதையாலும் அளவற உள்ளன. இவற்றின் உண்மையெல்லாம் தருக்கமுறையிலே ஆராய்ந்து ஐயமகற்றி அறிவுபுகட்டிச் சித்தாந்தம் செய்வதே சைவசமயத்தின் கோட்பாடாகும். இந்தக் கோட்பாட்டினை அறிந்து, இறைவனருளுக்கு இலக்காகி இன்பநிலையின் அனுபவமுறையை அறிந்த பெரியோர்கள் யாவரும் நம் பிறப்புக்களைப்பற்றி எடுத்தோதி அறிவுபதேசம் செய்திருக்கின்றார்கள், மணிமேகலை இலக்கியம், திருவாசகத் தோத்திரம், புராண வரலாறுகள், சாத்திர நூல்கள், வேதாகமங்கள், இசைப்பாடல்கள், பத்திப்பாடல்கள் ஆகிய இத்திறத்துப் புத்தகங்கள் யாவும் நம் பிறப்புப்பற்றி எத்தனையோவிதமாக எடுத்துரைத்துக் காட்டுகின்றன. "எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனதிடர் பிறவி அவதாரம்" என்கிறார் ஓர் அநுபூதிமான். "எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" என்கிறார் மற்றொருவர்.

வித்தும் மரமும் ஒன்றுக்கொன்று காரணகாரியமாக மாறிமாறி வருதல்போலவும்,கடலலைகள் ஒன்றன்பின் ஒன்று எழுந்துவருதல் போலவும் பிறப்புக்கள் வினையினுலும், வினையினுல் பிறப்புக்களும் ஒன்றின் பயனுக மற்றொன்று தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். கடவுள், ஆன்மாக்கட்குக் கேவல நிலையிலே, அவ்வான்மாக்கள் அறியாமையுட்பட்டு வருந்து

வதைக்கண்டு குருடனுக்குக் கோல் கொடுத்துதவுவது போலச் சூக்கும உடம்பைக் கருணையினால் கொடுப்பன். ஆகவே, சூக்கும உடம்பு, வினைகாரணமாயதன்று. இந்தச் சூக்குமதேகம் எல்லா உயிர்க்கும் ஒருதன்மையதே. மற்றும் முத்தியடையும் வரையில் எத்தனை பிறவிகளை எடுப்பினும் ஒன்றாகவே இருந்து முத்தியில் நீங்கும். சூக்குமத்திலிருந்து தூல உடம்பும், தூல உடம்பால் வினையும் மாறிமாறி வரும். ஆதலின், ஆன்மாக்களின் அறியாமை காரணமாக இறைவனால் உதவப்பட்ட சூக்குமதேகம் நீங்குவதே, பவப்பிணி நீங்குவதற்குக் காரணமாம். இப்படிக் கூடுவிட்டுக் கூடுபாய்தல் போல்வதாகத் தொடரும் பிறப்பு, இறைவன் அருட்கிருத்தியத்தாலே நீங்குமேயன்றி ஆன்மா, தானாகவே நீக்கிக்கொள்ளத் தக்கதொன்றன்று. ஆதலின், **நீங்கல் அரும் பவத்தொடர்ச்சி நீங்க** என்று கூறி, இறைவன் கருணையினை ஆசிரியர் புலப்படுத்தியுள்ளாராவர். எனவே, இறைவன் திருக்கூத்தின் இயல்பினை உள்ளவாறு உணரப்பெற்றாலல்லது பிறப்பு நீங்குதல் அரிதாம் என்க.

**மன்றுள் நின்று :**

ஆன்ம கோடிகளை உய்விக்கும் ஒன்றே பொறுப்பாகக் கொண்ட இறைவன், அதற்காக ஐந்தொழில்களை நடைபெறச் செய்கிறான். இந்த ஐந்தொழில்களும் சூக்குமம் தூலம் அதிசூக்குமம் என்ற மூவகையால் நடத்தப்படும். அவற்றுள் சூக்கும ஐந்தொழில் கேவலாவத்தையில் அறிதல் வகையில் நடைபெறுவது. அறிதல் செய்யுமதற்கு வேண்டும் விஷயத்தைத் தோற்றுவிக்கும் முறையில் சகலாவத்தையில் சிருட்டி

முதலிய ஐந்தொழில் நடத்தப்படுகின்றது. இனிச் சகலாவத்தையிலேயே சாக்கிரத்திலே இன்பதுன்பப் பலனை ஊட்டுவிக்குமுறையில் அதிசூக்கும ஐந்தொழில் நிகழ்த்தப்படுகின்றது. இவற்றுள் சூக்கும ஐந்தொழில் உயிர்களின்பொருட்டு இறைவன்பால் நிகழ்வது. தூல ஐந்தொழில் உயிர்களின்பொருட்டு, உயிர்களினிடமாக வும் உடல் உலகம் ஆகிய பாசத்தினிடமாகவும் நிகழ் வது. அதிசூக்கும ஐந்தொழில் உயிர்களின்பொருட்டு உயிர்களினிடமாக நிழ்வது. இம்மூவகையானவற்றை யும் தொகுத்துக் காணில் உயிர்களுக்கு ஞானமுண் டாதற்பொருட்டும் ஆனந்தம் விளைதற்பொருட்டுமே என்பது போதரும். எனவே, நமக்குத் தேவையாய் இருப்பன ஞானமும் ஆனந்தமுமேயாகும். இவ் விஷயங்களை, "கருவியும் பொருளும்" என்னும் சித்தியார்ப் பாடலகத்தே காணலாகும்.

இனி, நடனம் இருதிறப்படுவதாகும். அவை ஞான நடனம் எனவும், ஊனநடனம் எனவும் கூறப்படும். ஐந்தொழில்களுள் படைத்தல் - காத்தல் - அழித்தல் - அருளல் என்ற நான்கும் உயிர்களின் அறிவைப் படிப் படியாகப் பெருநிலை எய்த வைப்பனவாம். இன்ப துன்ப அனுபவம் நிகழ்ந்தாலல்லது அறிவு உறுதி படாது. ஆதலின் திரோபவம் எனப்படும் மறைப்புத் தொழில் வேண்டுவதாயிற்று. ஆகவே, முற்கூறப்பட்ட நான்கும் ஞானநடனம் எனப்படும். பிற்கூறப்பட்ட தொன்று ஊனநடனம் எனப்படும். இவ்விருவகை நடனத்தாலும் முடிந்தபயனாகி உயிர்கட்கு விளைவது ஆனந்தமே. ஆதலால் இக் கூத்தினை ஆனந்தக் கூத் தென்றே கூறிவிடலாகும். இந்த ஆனந்தக் கூத்தினை நிகழ்த்துதற் பொருட்டு அருவனாகிய இறைவன்

உருவனுகவேண்டியுள்ளான். இதனை, "மேனிதொடக் கானேல் சொல்லொணுதே" என்னும் சித்தியார். ஆனந்தம் பயன். ஆனந்தகாரணம் ஞானம். ஆனந்தம் என்பது புலன்களில் உணர்வில் உள்ளத்தில் விளைந்து இருந்து நீங்கும் இயல்பினதன்று. இதுவெறுங்களிப்பு எனப்படும். இடையருக்களிப்பே - அதாவது அறிவி னில் விளைவதே ஆனந்தமாகும். வெற்றுக்களிப்பு எனப்படுவது அறிவினை மறைப்பதாலாவது. கள்குடித் தவன் ஆனந்தம் அறிவின் மறைப்பாலானது ஆதலால், அது நிலைத்திருப்பதில்லை. நாம் அனுபவிக்கும் எல்லா விதமான சிற்றின்பங்களும் நம் உண்மையறிவால் விளையாமையால் நிலைத்திருப்பதில்லை. பேரானந்தம் பேரறிவிடை ஊறி எழுவதால் அது மறைப்புப் பெரு மலும் இடைநீக்கம் எய்தாமலும் தொடர்ந்து நிற்ப தாகும். இந்தப் பேரறிவுநிலை நமக்கு வேண்டும் என்ற நினைப்பை எழுப்பி உபகரிப்பதே சிதம்பர விஷயமாகும். இந்தச் சிதம்பரத்தையே **மன்று** என்று கூறுவர். எனவே, மன்று என்பது இறைவன் ஆடரங்கு ஆகும். இறைவனுக்கான ஆடரங்கம், சாதாரணமான கல், மண், தூண், கூரை, தரைகளாலான மேடை அன்று. இறைவனுக்கான ஆடரங்கு ஞானமே ஆம். ஞானம் ஆடரங்காக இருப்பதனுலேதான் காண்பவர்க்கு ஞானம் விளையலுறுகிறது. ஆகவே, நாம் மன்றினை, மண் எனவும் கல் எனவும் மனத்துக்கருதாமல் ஞான மெனவே அறிவாலறியவேண்டும். அப்போதுதான் ஐந்து சிற்றுணர்வும் பேரறிவாக மாறலுறும். எனவே, அம்பலம் என்பது ஞானமாகிய அரங்கமே ஆகும். இதனை ஞானசம்பந்தப்பெருமான், கூத்தப்பெருமானைக் கண்டு கும்பிட்ட வரலாற்றினைச் சேக்கிழாரடிகள் புலப்படுத்திக் கூறும் செய்யுளடிகளால் நன்குணர

லாகும். அந்தச் செய்யுள், ''அண்ணலார் தமக்களித்த மெய்ஞ்ஞானமே ஆன அம்பலமும் தம் உள்நிறைந்த ஞானத்தெழு ஆனந்த ஒரு பெருந் தனிக்கூத்தும்'' என்று கூறிக் காட்டுதல் காணத்தக்கதாம்.

நம், உடம்பிலே, உயிர் இதயத்தே நின்று ஆடுவதனால் நம் அறிவு வளர்கிறது. இதய ஆட்டம் நின்றுபோனால் அறிவும் நின்றுபோகிறது. ஞானம் என்பதைப் பரமாகாசம் என்றும், சத்திவெளி என்றும், தகராகாசம் என்றும் ஞானநூல்கள் பேசும். ஆகவே, உயிர்களுக்குப் பதியறிவு நிலைபெறுதற் பொருட்டு நடிக்கும் பரமன், பரமஞானத்தையே அரங்காகக்கொண்டு நடிக்கின்றான் என்பது நம்மால் உணரப்படவேண்டும். நம் உடம்பினகத்தே நிகழும் இதய ஆட்டம் நின்றுபோகிறது. அது மரணம் எனப் படுகிறது. ஆனால், இறைவன் புரிகிற இந்த ஞான அரங்கின் ஆட்டம் மேற்கூறப்பட்ட சூக்குமமாதி மூன்று விதங்களாலும் இடையறாது நிகழ்ந்து கொண்டே இருப்பதாகும். ஆதலால், அது நித்தியம் எனப்படும். இதனை, ''தானந்தமில்லாச் சதானந்த சத்திமேல்'' என்னும் திருமந்திரப்பாடலிலும் கண்டுணரலாம். ''சத்தி சதாசிவத்து உச்சிமேல் - கண்டங் கரியான் கருணை திருவுருக்கொண்டு அங்கு உமை காணக் கூத்துகந்தானே'' என்னும் திருமந்திரமும் இஃதுணர்த்தும். இதுகாறும் கூறிவந்த விஷயங் களால், மன்று என்பது ஞானமே எனவும், அந்த ஞான அரங்கில் நடைபெறுங்கூத்து இறைவனால் நிகழ்த்தப்படுவதெனவும், அக்கூத்து இடையறாது நிகழ்வதெனவும் - அதாவது படைப்பினும் துடைப் பினும் நிகழ்வதெனவும் நாம் தெரிதல் நன்றாம்.

இனி நின்று என்பதனுல் ஆனந்தமாகியிருந்து என்றும் பொருள்கொள்ளப்படும். ஞானத்தினின் றெழுவது திருவருள். அத்திருவருளே சத்தி. அத் திருவருளின் பயனுவது ஆனந்தம். ஆதலால், இறைவனே ஆனந்தமயனுவன். எனவே, அம்பலமே ஞானம் எனவும், ஆடலே திருவருள் எனவும், இறைவனே ஆனந்தம் எனவும் நாம் அறிவாலறிய வேண்டுமெனத் தெரியலாம். இதனை, "உணர்வின் நேர்பெற வரும் சிவபோகத்தை ஒழிவின்றி உருவின் கண் - அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை" என்பதனுல் கொள்ளலாம். இந்த நிலையில் காண்போரறிவு பேரறிவாகி ஆனந்தத்தில் அழுந்து மாயின் அதுவே முத்திப்பேரும். இதனுலேயே "தரி சிக்க முத்திதரும் தலம் தில்லை" என்றனர் பெரியோர்.

**இமையோர் துதிசெய்ய நிருத்தம்செய்யும் பூங்கமல மலர்த்தாள்கள் :**

ஞானக் கூத்தனுகவும், ஆனந்தக் கூத்தனுகவும் உள்ளான் அருளுருவாகிய ஈசன் என்பது சாமானிய ருக்கு ஒருவேளை விளங்காமற்போயினும், இமை யோர்க்கு இவ்வுண்மை ஓரளவு விளங்குகின்றது. இமையோர்கள் நம்மினும் புண்ணிய மிகுதியுடைய ராதலாலும் ஒளி பொருந்தியவராதலாலும் தத்தம் அதி கார மல பக்குவ விசேடத்தால் இங்ஙனம் விளக்கம் எய்தலுறுகின்றனர். இமையோர்கள், தம் புண்ணிய விசேடத்தால் இன்பமே அனுபவிக்கின்றவர்களாவர். என்றுலும், அவர்கள் இன்பத்தின் அளவு அறிவின் அளவுக்குத் தக்கவாறே அமைவது. புண்ணியத் தேய் வின்போது அவர்கள் தம் இன்பத்தினை விட்டுவிட

நேருகிறது. அத்தகைய தேவர்கள், தம்முடைய இன்பானுபவம் சிறிதென உணரப் பெற்றவராகிப் பேரானந்தப் பெருவாழ்வு பெறும் பொருட்டாக எப்போதும், நம் ஊனக் கண்களுக்குப் புலனாகாத வடிவோடும் இறைவனைத் துதித்து வழிபாடியற்றுகின்றனர். இவர்கள், இமையோராதலால், உறக்கமும், கண்ணிமைத்தலும் இல்லாமல் எப்போதும் துதித்து வழிபாடு செய்யும் பேறுடையவராவர். இமையோர்களே துதி செய்கின்றனராதலால், நாமும் துதிசெய்ய வேண்டியவர்களாவோம் என்பது இதனால் பெறப்படும் கருத்தாகும். ''தேவரசுரர் நரர் சித்தர் வித்தியாதரர்'' எனவும், ''இருவரும் காணா'' எனவும் உள்ள துவக்கமுடைத் திருமந்திரப் பாடல்கள் இங்கு ஒப்புக் காணத் தக்கனவாகும்.

நிருத்தம் என்பது ஐந்தொழில் ஆடல் ஆகும். இந்த ஆடல் காரணமாகவே எல்லாச் செயல்களும் நிகழ்கின்றனவாகும். ''தத்துவம் ஆடச் சதாசிவம் தானாட'' என்னும் மந்திர மறைப்பாடல் ஈண்டுக் கான்டல் தக்கதாகும். மற்றும், இந்த ஆடலின் முக்கியத்துவத்தை, உவமையில் வைத்து உரைக்கிற ''இருதயந் தன்னில் எழுந்த பிராணன் - கரசரணாதி கலக்கும்படியே - அரதன மன்றினில் மாணிக்கக் கூத்தன் - குரவனாய் எங்கணும் கூத்துகந்தானே'' என்னும் திருமந்திரப்பாடலாலும் அறியலாம். மேலும், தில்லையிற் கூத்து உலக நடைபேற்றுக்கான திருக் கூத்தாகும். கொடுகொட்டி, பாண்டரங்கம் முதலான வேறு பல கூத்துக்களும் உண்டு. அவற்றைக் கலித் தொகை, சிலப்பதிகாரமுதலான நூல்களால் அறியலாகும்.

இங்ஙனமெல்லாம் நிருத்தம் நமக்காகப்புரிபவர் இறைவர் எனினும், அவரது திருப்பாதமே இக் கூத்தினை நிகழ்த்துகின்றதாகும். தலையிலே தரிக்கத் தக்க மலர்போல்வது இறைவன் திருப்பதம். ஆதலின் பூ என்றார். மங்கலம் விளைப்பதும் செந்நிறம் உடைத் தாயிருப்பதும், ஒற்றைத்தாளில் நிற்பதும், குளிர்ச்சி பயப்பதும், தேனை ஊட்டுவதுமாகிய பலவிதமான உயர்வுகள் உடைமைபற்றிக் **கமலமலர்** என்றார். ஒருவருடைய அவயவங்களில், ஓடிவந்தும், வெளிப் பட்டும் உதவுதற் கருத்துக்கு முதல் உபகாரியாய் நிற்கும் உறுப்பு பாதங்களே ஆகும். ஆதலின் தாள்கள் என்றார். மற்றும் **தாள்கள்** என்ற சொல்லுக்கான பொருள் நயங்களை ஒழிவிலொடுக்க நூலுரையால்தெரி தல் நன்றாம். ''பரமாண்டத்தூடே பராசத்தி பாதம்'' என்பதனால் இந்தத் திருப்பாதங்களே யாவற்றிற்கும் ஆதாரமாகவும் அணைப்பாகவும் உள்ளன என்பது கருதப்படும். தாள் என்பது தாங்கு என்னும் பொருள் தரும் சொல்லாம். ''நோன் தாள்'' என்பது திருக் குறள். ''மலர் சிலம்படி'' என்பது பெரியபுராணம். இவற்றாலெல்லாம் திருவடி மகத்துவம் தெரிவித்தா ராயினர் ஆசிரியர். ''திருவடிப் புகழ்ச்சி''யிலே மற்றும் உள்ள விரிவுகள் யாவும் கூறப்படுதல் காணலாம்.

சிரத்தின்மேலும் புந்தியினும் உற :

இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவராவர். அதாவது, உள்ளும் புறம்பும் உள்ளவர் என்பது கருத் தாம். அதனை நாம் ஏற்றுக்கொண்டே தீரவேண்டும். ஆனால், இறைவன், புறத்தேமட்டில் இருப்பதாகத் தான் சாதாரணமாகக் கருதுகிறோம். அதற்கு அடை

யாளமாகப் புறத்து வழிபாடுமட்டில் செய்கின்றோம். இதனால், வழிபடுகிற நம்மை இறைவனின் வேறாக வைத்தே எண்ணிப் பழகிவிடுகிறோம். புறத்து வழிபாடென்பது அகத்து வழிபாட்டுக்கு வழிகோலித் தருவதாகும். இங்ஙனம் அகத்து வழிபாட்டுக்குப் புற வழிபாடு தேவைப்படுவதுபற்றியே சரியை முதலாக நான்கு மார்க்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் சரியை கிரியைகள் புறத்து வழிபாட்டுக்கான நெறிகளாக உள்ளன. யோகம், புறத்தோடு அகத்தும் வழிபடுவதற்கான முறையை ஏற்படுத்தும் நெறியாம். இங்ஙனம், இம்மூன்று வழிபாடுகளும் படிப்படியாக ஒன்றின் ஒன்று மேம்பட்டதாகி வழிபாட்டுமுறையினைப் புறத்தினின்றும் அகத்துக்கு ஆக்கிக்கொள்ள உதவுகின்றனவாகும்.

ஞானமே முத்திக்கு நேர்ச்சாதனம் ஆகின்றது. அதுவே அறிவாற் பூசித்தல் எனப்படும். ஆனது பற்றியே, சரியை முதல் மூன்றும் ஞானத்துக்கு ஏது என்றியம்பப்படுகின்றது. இறைவன், நம்மின் வேறாய் இருந்து நம்மை நடத்துகிறான் என்கிற எண்ணத்தைக் காட்டிலும், நம்முள் இருந்து - உடனாய் மன்னியிருந்து - நடத்துகிறான் என்ற எண்ணமே திடப்பட வேண்டும். சித்தாந்த மார்க்கத்தின் சிறந்ததொரு போதனையும் சாதனையும் இதுவே ஆகும். நம்முள் இருந்து இறைவனே நம்மை நடத்துகிறான் என்கிற அறிவு நம்பால் உண்மையாக உண்டாகிவிட்டால் நாம், இறைவனே சுதரந்தரமுடையவன்; நாம் பரதந்தரமுடையோம் என்னும் ஆண்டான் அடிமைப் பக்குவத்தை அடைந்து விட்டவராவோம்: 'உன் அடிமை அல்லவோ' என்ற வாக்கினுள் காணப்படும்

உண்மை இதுவேயாகும். 'ஞானத்தின் ஞானமே நான் எனது என்னுமை' என்பது திருமந்திரம். மற்றும், ''சாத்தியும் வைத்தும் சயம்பு என்றேத்தியும் - ஏத்தியும் நாளும் இறையை அறிகிலார் - ஆத்தி மலக் கிட் டகத்திழுக் கற்றக்கால் - மாத்திக்கே செல்லும் வழியதுவாமே'' என்னும் திருமூலர் கூற்றாலும் தெரியலாம். மேலும், 'காயமே கோயிலாக'; 'உடம்பெனும் மனையகத்து' என்னும் தமிழ்மறை வாக்குகளையும் இங்குக் கருதிப்பார்த்தல் நன்றாம்.

அல்லாமலும், சிவபிரானுடைய சகளம்-நிட்களம் என்னும் இரண்டையும் ஒன்றாக உட்கொள்ளவேண்டும். இவற்றுள் சகளமாவது ஆசாரிய மூர்த்தியாகித் தீட்சித்துத் திருவடியை முடிமேல்வைத்தருளும் அவதரமாகும். நிட்களமாவது, உயிர்க்குயிராய் நின்று அறிவிப்பதாகும். அங்ஙனம் அறிவிப்பதே பேரறிவு எனப்படுவதாகும். இதுவே தியானத்துக்குரியதாம். 'என் சித்தத்தே தன்னைவைத்தருளினாலே தாளிணை தலைமேல் சூட்டும்' என்பது சித்தியார். இதனையே 'சிந்தையினும் என்தன் சிரத்தினிலும் சேரும்வகை வந்தவனை' என்றுரைப்பது திருக்களிற்றுப்படியார் நூல். ஆசாரியரும் இறைவரும் ஒருவரே என்பது சித்தாந்தம். ஆகவே, ஆசாரிய முகமாகப் புறத்தே திருவடியைச் சிரத்தேசூடிப் புனிதமுற்று, இறைவனை அகத்தே தியானித்து அறிவாற்கலத்தற்பொருட்டுப் புந்தியிலும் வழிபடவேண்டும் என்பதாயிற்று. இதனை நாம் அறிந்து வழிபாட்டுண்மை கடைப்பிடித்தற் பொருட்டாகவே, ஆசிரியர் இருவகை வழிபாடும் அடங்குமாறு சிரத்தின்மேலும், புந்தியினும் உற என லானார். உற என்றசொல்லானது, இல்லாததொன்றைப்

புதிதாக உண்டாக்குதல் அன்று இந்தச் செய்கை; இருப்பதை வெளிப்படச் செய்தலேயாம் என்பதை உணர்த்தி நிற்பதாகும். உண்மையை உணரவைப்பது ஒன்றே மதங்களின் குறிக்கோளாகும். இந்தவகையில் சித்தாந்தம் சிறந்ததாயிற்றென்க.

**வணங்கிப் போற்றல்செய்வாம் :**

மேற்கூறப்பட்ட இருவகை வழிபாடுகளையும் நாம் ஏற்றுக்கொண்டதற்குச் செய்கைமுறையில் நாம் மேற்கொள்வன இரண்டே காரியங்களாகும். அவை, ஒன்று வணங்குதல்; மற்றொன்று போற்றுதல் ஆகும். இவற்றுள், இறைவன் சகளத் திருமேனியிலே எல்லாப் பொருளும் அடங்கியிருக்குமாதலின் அவன் திருவடியிலே நம் திருமுடியைத் தாழ்த்திவைத்து வணங்க வேண்டுவது அவசியமாயிற்று. "கண்டன எலாம் மோன உருவெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம்" என்பதன் கருத்து இதுதாம். இதன்மூலம் உடம்பால் அமைந்துள்ள நம் தாழ்வினை நாம் ஒப்புக் கொண்டவர்களாகிறோம். இச்செயல் காயத்தின் பகுதியதாம். இனி, நிட்களமாக அகத்தே நிலவியுள்ள அவ்விறைவனை நாம், அவன் நிறைவினுள் நம் ஆன்மா அடங்கிக் கிடப்பதென்பதை ஒப்புக் கொண்டதற்கறிகுறியாகச் சிந்தையால் - அறிவால் - தியானிக்க வேண்டியவர்களாகிறோம். அதாவது, சீவபோதம் சிறிதும் சிவித்தலின்றிச் சிவபோதத்திலே கரைந்திடுவதாகும். இங்ஙனமாய நிலையில் சிவனைப் போற்றும் பொறுப்பு சிவனுடையதாகிறது. இங்ஙனம் அறிவால் ஒன்றுபட்ட நிலையில் ஆனந்தப்பூரிப்பு விளையும். அவ்விளைவு நம் இத்தகைய அனுபவத்தை வாயினாலும்

நம்மையறியாமலே சொல்லச்செய்யும். இவ்வாறு அறிவால் ஒன்றுபட்டு வாக்கிறைற் பாடிக்கிடக்கும் நிலையே போற்றுதல் எனப்படுவது. இதனால், வாக்கும் மனமும் அடங்கியதன்மை தெரியப்படும். இந்த நிலைமைகளை நாமுணரச்செய்தற்பொருட்டே ஆசிரியர், வணங்கி எனவும் போற்றல் செய்வாம் எனவும் புகன்றுள்ளாராவர். செய்வாம் என்றமையால், ஆசிரியர் நம்மையும் உளப்படுத்திக் கூறுதலையும், நம்பொருட்டாகக் கூறி வைத்தலையும் நாம் தெரியலாம். ஆகவே, சிவம் பிரகாசிப்பதற்கான எல்லா முறைகளையும் ஒவ்வொரு தோத்திரத்திலும் [illegible] கூறிச் செல்லுதல் கருதத்தக்கதாகும்.



எங்கும் நிறைந்தது பரம்பொருள். அது பேரருள் உடையது. ஞானமே திருமேனியாக உடையது. கிரியாசத்தியால் அகிலாண்டங்களையும் ஆக்கியளிக்கின்றது. வேதசிரசு எனப்படும் பிரணவ மந்திரச் சொருபமாயிருப்பது. தண்ணளி சான்றது. அடக்கும் ஆற்றலுடையது. தீங்ககற்றிப் பாங்குறுத்தும் திறத்தது. நம் பவப்பிணிக்கு மருந்தாயிருப்பது. நம் பவம் நீங்குவதற்காகவே அம்பலத்தில் நிலையாக எழுந்தருளி வெளிப்படையாக உணரும் வண்ணம் ஐந்தொழில் ஆடல் புரிகின்றது. தேவர்கட்கெல்லாம் சிறந்த மேலான தெய்வமாக உள்ளது. ஞானனந்தமயமானது. இத்தகைய பரம்பொருளே எங்கும் நிறைவது. ஆதலால், இப்பொருளை ஆசாரிய மூர்த்தமாக வெளியே தரிசித்து வணங்கியும், பேரறிவொளியாக அகத்தே தியானத்தால் ஒன்றுபட்டுப் போற்றியும் நாம் சிவப்பிரகாச விளக்கம்அடைதல் வேண்டியுள்ளோம். இவ்விஷயங்கள் யாவும் இப்பாடலின் கருத்துக்களாகும்.

## 2. பராசத்தியைத் துதித்தல்

(சிவகாமி அம்மையார்)

*பரந்தபரா பரைஆதி பரன(து) இச்சை*
*பரஞானம் கிரியைபர போக ரூபம்*
*தரும்கருணை உருவாகி, விசுத்தா சுத்தத்*
*தனுகரண புவனபோ கங்கள் தாங்க*
*விரிந்தஉபா தானங்கள் மேவி, ஒன்றாய்,*
*விமலமாய், ஐந்தொழிற்கும் வித்தாய், ஞாலத்(து)*
*அரந்தைகெட, மன்றுள் ஆடல் காணும்,*
*அன்னை அருட்பாதமலர் சென்னி வைப்பாம்.*

### பொழிப்புரை

எங்கும் வியாபகமான மேலான பராசத்தி, திரோதான சத்தி - பரமசிவனுடைய இச்சாசத்தி - மேலான ஞானசத்தி - கிரியாசத்தி - ஆன்மாக்களுக்கு அநாதியில் உண்டான மேலான அநுபவ சொரூபத்தைக்கொடுக்கின்ற கருணை வடிவாய், சுத்த அசுத்தங்களான தனு கரண புவன போகங்களைத் தரித்தற்கு விரிந்த முதற்காரணங்களாகிற விந்து - மோகினி - மான் மூன்றையும் பொருந்தி எவற்றிற்கும் ஒரு முதலாய் நின்மலமாய்ப் பஞ்சகிருத்தியங்களுக்கும் காரணமாய், பூலோகத்தில் உள்ளவர்களுடைய பிறவித்துயர்கெட, அழகிய திருச்சிற்றம்பலத்துள் ஆடுதலைக் கண்டருளும் எவ்வுயிர்க்கும் தாயானவள் (ஆவாள்). அவளுடைய கிருபையாகிய சீர்பாதமலர்களைச் சென்னிமேல் வைத்து யாம் வணங்குவாம்.

### கருத்துரை

பரமசிவன் புரிகின்ற பஞ்ச கிருத்தியங்கட்கெல்லாம் உடனாள பராசத்தியைத் துதித்தல் கூறுவது இப்பாடல்.

## விளக்கவுரை

பரந்த பராபரை :

பரம் இன்னதன்மையது எனவும், அதன் ஆற்றலெனப்படும் சத்தி இன்னதன்மையது எனவும், இதுகாறும் கூறப்பட்ட பாடல் விளக்கங்களில் ஒரு சிறிது பேசப்பட்டது. பரமன், உலகுயிர்கட்கு உபகாரப்படுவதற்கு அவன் திருவருளே காரணம் என்பது தெரியப்படும். திருவருள் எனினும் சத்தி எனினும் ஞானம் எனினும் ஒன்றே. ஆற்றல் - அருள் - ஞானம் எனப்படும் அனைத்தொருமையே சித்சத்தி எனப்படும். அருட்சத்தி எனினும், சிற்சத்தி எனினும், பராசத்தி எனினும் ஒன்றே. நூல்களில் பெயர்கள் ஆங்காங்கு இடத்திற்கேற்ப வழங்கப்படுதல்கொண்டு மயக்கம் எய்துதல் வேண்டுவதில்லை.

உலகிலே, சூரியன் தன்னையும் விளக்குகிறது; விடயங்களையும் விளக்குகிறது. விடயங்களை விளக்கும்போது ஒளி எனப்படும். தன்னை விளக்கும்போது சூரியன் எனப்படும். எனவே, கதிரோன், கதிர் எனவும் கதிரோன் எனவும் தாதான்மியமாய் ஒருவனே இரு திறப்பட்டு நிற்றலை அறிவோம். அவ்வாறே, புறப்பொருளை நோக்காது, அறிவு மாத்திரையாய்த் தன் இயல்பில் நிற்பதுவும், புறப்பொருளாகிய பசுக்களை நோக்கி நின்று அறிவிப்பதுவும் ஆகிய இவ்விருதன்மையை உடைய பேரறிவாகிய சைதன்யம் ஒன்றே, மேலே சொன்னபடிப் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் சத்தி எனவும், புறப்பொருளை நோக்காது

அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையில் சிவம் எனவும் இருதிறப்பட்டு நிற்பது தெரியப்படவேண்டும். இதனால், பிரிக்கமுடியாதபடி கலந்திருப்பது தாதான்மிய மான சத்தி என்பது பெறப்படும். இந்தச் சிவசத்தியே பரை என்று இயம்பப்படும். எனவே, சிவம், உயிர்களைநோக்கி நிற்கும் நிலையே பராபரை ஆம். சூரியனிடமிருந்து அதன் ஒளி பிரியாமைபோலச் சிவத்தினின்றும் சிவப்பிரகாசமான பரை பிரிவதில்லை என்று நாம் இதனால் உணரலாகும். ஆகவே, சிவ வியாபக மளவும் அதன் அருள் வியாபகம் நீக்கலாகாது நிறைந்திருப்பதாதலால் பரந்த பராபரை எனலானார் ஆசிரியர்.

திருட்டாந்தப்படுத்தித் தெரிவிக்க வேண்டுமானால், ஒருதுளசிச்செடியில், அத்துளசியின் வாசனை, அச்செடியின் எந்தப் பாகத்திலும் அதன் வேர்முதல் உச்சிக் கொழுந்து அளவும் வியாபித்திருப்பதைக் காணலாம். சிவ வியாபகத்தின் விஞ்சியதன்று சத்தி வியாபகம். "அருளது சத்தியாகும் அரன் தனக்கு அருளை இன்றித் தெருள் சிவமில்லை அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை" எனவும், "எத்திறன் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்" எனவும் பரந்த பராபரை இயல்பு சித்தியாரில் கூறப்படுவதுகொண்டும் நன்கு தெரியலாகும்.

இதுபற்றியே "பூரணி" என்பது சிற்சத்தியின் திருநாமங்களுள் ஒன்றாக வழங்கப்படுகின்றது. முதல் வனைப்பற்றி முதல்விக்கு இப்பெயர் வழங்கப்படுவது தெரியும்பொருட்டே பரந்த பராபரை எனப்பட்டது. எனவே, இறைவியும் சர்வவியாபி ஆம். "பொன் ஒளி போல் ஈசன்" என்பது சூத்திர உதாரணம்.

**ஆதி பரனது இச்சை பரஞானம் கிரியை :**

இனி, அத்தகைய பராபரை உலகுயிர்கட்கு உபகாரப்படுவதன் நிமித்தம் என்ன ஆகின்றதென்பது கூறப்படும். இதனால் சத்தியின் விருத்திபேதம் கூறப்படுகின்றதாகும். தீயின் சத்தி உஷ்ணம் ஆகும். இந்த நெருப்பினின்றும் பிரியாத உஷ்ணசத்தி ஒன்றே தொழில்வேறுபாட்டினால், எழுப்புதல், பாகம்பண்ணுதல், சுடுதல், மாற்றுதல், தன்வயப்படுத்தல் என்கிற காரியங்களைச் செய்கின்றமைபோலச் சிவசத்தி ஒன்றே தொழில் வேறுபாட்டால் பரை - ஆதி - இச்சை - ஞானம் - கிரியை என ஐவகைச் சத்திகளாகும். இன்னம் பற்பல வகைகளான சத்திகளாகவும் ஆகும். இவற்றின் விரிவுகள் ஆகமங்களால் அறியப்படலாகும்.

அருட் சத்தி என்பது - பராசத்தி - திரோதான சத்தி - இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தி என ஐவகைப்படும். அருட்சத்தியே சிற்சத்தி அல்லது பராபரை என்று அழைக்கப்படும். இனி, பராசத்தி எனப்படுவது உயிர்களுக்குக் கிருபைசெய்யவேண்டும் என நிற்பதாகும். திரோதானம் அல்லது ஆதிசத்தி என்பது மலம் பக்குவமாதற்பொருட்டுப் பஞ்சகிருத்தியம் செய்யவேண்டும் என நிற்பதாம். இச்சாசத்தியாவது சிறப்பாக உயிர்களுக்குக் கருணை செய்ய வேண்டும் என நிற்பதாகும். அதாவது பக்குவமான உயிரை அறிந்து கிருபை செய்ய எண்ணுவதாகும். ஞானசத்தியாவது செய்யவேண்டுவனவற்றை அறிவது ஆகும். கிரியாசத்தியாவது செய்யவேண்டுவனவற்றைச் செய்வது ஆகும். இவ்வைந்து சத்திகளும் இறைவனுக்குப் பிரிப்பில்லாத சத்திகளே ஆகும்.

இவற்றுள் பராசத்தியே சொருபம் ஆம். ஏனைய எல்லாம் அப்பராசத்தியின் வியாபாரபேதமான தடத்தம் ஆம். சுடுதற்சத்தியொன்றே அக்கினியிடத்துள்ள சொருபம் ஆம். அதுவே வியாபார வேறுபாடுகளால் நீறுசெய்தல், பாகம் செய்தல், சுவறச்செய்தல் முதலான தடத்தமாகின்றதென்க. இனிப் பரனது என்பதனால் பரம் ஒன்றே வடிவு விசேடம், குண விசேடம் பற்றிச் சிவபேத சத்திபேதங்களாகின்றது என்பது பெறப்படும். அக்கினி, பொருளால் ஒன்றாயிருப்பினும் வடிவால் செம்மை என்றும், குணத்தால் சூடு என்றும் பிரித்து எண்ணப்படும். அவ்வாறே பரம் பொருள் ஒன்றேயாயினும் எவற்றையும் கடந்து நிற்கும் வெளியாகிய வடிவால் சிவம் எனவும், எவற்றுடனும் கலந்து எவற்றையும் தன்பால் இழுக்கும் வலிமையாகிய குணத்தால் சத்தி எனவும் பிரித்துக் கூறப்படும் என்பது தெரியலாம். மற்றும், இச்சை ஞானம் கிரியை என்னும் மூன்று சக்திகளும் சீவனுக்கும் உளவாதல்பற்றிச் சீவனை ஈண்டுக் குறித்துக்கொள்ளாதிருத்தற்பொருட்டுக் கூறப்பட்டது எனலுமாம். சீவனுடைய இச்சத்திகள் கேவலத்தில் ஆணவத்தால் மறைப்புறும். சகலத்தில் ஏகதேசப்பட்டுப் போகங்களை அனுபவிக்கும். ஆதலால் இவ்வேறுபாடு தோன்றக் கூறப்பட்டதென்க. 'ஒன்றதாய் இச்சாஞானக்கிரியை' என்னும் சித்தியார்ப்பாடல் உரை ஈண்டைக்கு ஒப்புக் காண்டல் நன்றாம். இனிப் பராபரை என்ற சொல்லுடன் ஆதி என்பதைத் தொடர்த்திக்கூறியிருப்பதனால், சிற்சத்தியே ஆன்மாக்கட்கு வினைப்பயனை ஊட்டும் அவதரத்தே திரோதானசத்தி எனப்படுவது என்று தெரிதல் வேண்டும். குண தோஷங்களை மறைத்து ஊட்டினாலல்லது ஆன்மா அனுபவித்துத் திருந்தாது

ஆகையால் திரோதை வேண்டுவதாயிற்று. எனவே, ஆணையாகிய சிற்சத்தியிற்பிரிப்பின்றிச் சமவேதமாகிய வடிவதே திரோதானசத்தியாம். இதனால், இறைவன் உயிர்களின்பொருட்டுத் திரோதானசத்தி வடிவாகச் சிற்சத்தியிற் பிரிப்பின்றி வெளிப்படாது நிற்பானும், இந்த உண்மையை நாம் அறியும்பொருட்டாகவே ஆலயங்களில் இறைவன் அம்பிகை வடிவமாகத் திருமேனிகொண்டு எழுந்தருளியுள்ளமை காட்டப்படுகின்றதாகும் என்பர். இதனால் சிற்சத்தியின் கூருவதே திரோதானம் எனப்படும் ஆதிசத்திஆகும் எனத்தெரிதல் தகும். இதுகாறும் துணைக்காரணங்களுள் ஒன்ரும் சத்திப்பகுதி கூறப்பட்டதாகும் என்னலாம். துணைக்காரணங்களுள் மற்றென்ருயிருப்பது வினைப்பகுதியாகும். இவற்ருல், துணைக்காரணத்தின் இன்றியமையாமை தேறப்படும்.

## பரபோக ரூபம் தரும் கருணை உரு ஆகி :

மேற்கூறியவிதமாகச் சிவமும் சத்தியுமாகிய பொருளால் ஏதுபயன் என்பதே இவ்வரியில் எடுத்துரைக்கப்படுகின்றது. மேருமலையில் அமர்ந்திருப்பவனுக்குத் தங்கத்தின் தேவை எற்றுக்கு? அம்மலையே பொன்மயமானது. வறிஞனுக்குத் தங்கம் தேவையே. ஆதலால், வறிஞனுவான் மேருமலைக்கு உடையானை அணுகி இரந்து பொன்னைப் பெறுவானுயின் வறுமை நீங்கி வளமாக வாழலாம். அதுபோலவே, சிவம் ஐந்தொழிலாற்றற்கான தன்மையை அடைவதனுல் சிவத்திற்கு ஏதும் பயனில்லை. ஏனெனில், சிவம் எந்தக் குறையும் இல்லா நிறைவுடையதாகும். ஞானுனந்தமயதேவனுக உள்ள இறைவன், ஆன்மாக்களின் துயர

நிலையினைக்கண்டு இரக்கம்கொண்டு தனது பரபோகத்தினை அவ்வான்மாக்கள் துய்த்திருக்கத் திருவுள்ளங்கொள்ளுகின்ருன். ஆன்மாக்கள் கேவல நிலையில் அறிவு தொழிற்படாமல் இருக்கின்றன; சகல நிலையிலோ மல வேகத்தாலும், மாயை மயக்காலும், திரோதையின் செயலாலும், தத்தம் கருமப்பயனாலும் இன்ப துன்பங்கட்கு ஆளாகி நிலையில்லாச் சுவர்க்க போகமும் அன்றி நரக வேதனையும் அனுபவிக்கலுற்று அவதிபுறுகின்றன. ஆகவே, அவ்வுயிர்களின் அறிவு மறைப்பும், சுட்டுணர்வும், சிற்றுணர்வும் நீங்கினலல்லது அவ்வுயிர்கள் பேரறிவும், பெரும்போகமும் எய்தலாகாது. மேலே கூறப்பட்ட குறைபாடுகளை ஆன்மாக்கள் தாமாக நீக்கிக்கொள்ளும் சுதந்திரமும் ஆற்றலும் உடையன அல்ல. ஆதலால், இறைவன், ஐந்தொழிலாற்றற்கண் தான் பதியாய்நின்று இறைவியால், வினைப்போகங்களைத் துய்ப்பித்து, அறக்கருணையாலும், மறக்கருணையாலும் படிப்படியாகத் தத்துவ விளக்கமுறுவித்து, இருவினையொப்பு மலபரிபாகம் திருவருள் வீழ்ச்சிகளை உயிர்கள் அடையச் செய்கிருனவன். எனவே, உயிர்களுக்கு இறைவன், ஆன்மாவுக்கே உரிய குற்றமற்றதான ஞானசொரூபத்தை அடைய வழிசெய்து, சிவபோகத்தில் உயிர்களை அழுந்தச் செய்வதற்காக அருளே திருமேனியாக விளங்கும் ஞான குருவின் வடிவமாகவும் காட்சியளித்து ஆட்கொள்கின்ருனவன். இறைவனுல் நாம் பெறும் நன்மை, நம் சொரூபத்தை அறிந்து சிவபோகத்தில் அழுந்தி அனுபவிப்பதே ஆதலின் பரபோக ரூபம் தரும் என்ருர் ஆசிரியர். இதனை விளப்பதற்கு அறக்கருணையும் மறக்கருணையும் தனது அருளினுலே அவ்வப்போது பாலித்து இறுதியில் பக்குவம் உற்றபின்னர்

ஆன்மாவுக்குச் சிவகுரு தரிசனம் அளித்து ஈடேற்று கின்றனன் இறைவன் என்பதைக் கருணை உரு ஆகி என்ற இடம் புலப்படுத்துவதாம்.

இவ்வெல்லாக்காரியங்களும் சிவத்தை உள்ளிட்ட சத்தியின் செயல்களாகும். இவ் எல்லா விஷயங்களை யும் பின்வரும் திருமந்திரப்பாடல்களால் நாமறிதல் கூடும். அவை; 1'' வெளிப்படுவித்து வினைவறிவித்துத்-தெளிப்படுவித்து என் சிந்தையினுள்ளே - களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதி - ஒளிப்படுவித்து என்னை உய்யக்கொண்டாளே''. 2 "இருளது சத்தி வெளிய தெம் அண்ணல் - பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம் - தெருளது சிந்தையைத் தெய்வமென்றெண் ணில் - அருளது செய்யும் எம் ஆதிப் பிரானே''. 3 ''ஆவின்கிழத்தி நல் ஆவடுதண்டுறை - நாவின்கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடும் - தேவின் கிழத்தி திருவாம் சிவமங்கை - மேவும்கிழத்தி வினைகடிந்தாளே''. 4 ''நின்றபராசக்தி நீள்பரன்தன்னொடு-நின்றறிஞானமும் இச்சையுமாய் நிற்கும் நன்றறியும் கிரியாசத்தி நண் ணவே-மன்றனவற்றுள் மருவிடுந்தானே.'' 5 ''தொடி யார் தடக்கைச் சுகோதய சுந்தரி - வடிவார் திரிபுரை யாமங்கை சங்கைச்-செடியார் வினைகெடச் சேர்வரை என்றென் - அடியார் வினைகெடுத்து ஆதியும்ஆமே.'' ஆகவே, கருணை - சத்தி - உருஆகிப் பரபோகரூபம் தரும் என்பது பெறப்படும்.

**விசுத்த அசுத்ததனுகரணபுவனபோகங்கள் தாங்க:**

இறைவனுடைய அருளெனப்படும் இறைவி துணையில்லையானால் எவ்வுயிரும் உய்தி அடைய இய லாமற்போம். இறைமைக்குத் தன்னின் இழிந்தவற்றை

உயர்ந்துவதே இலக்கணமாகும். ஆகையினுலேதான் இறைவனும், கருணை எனப்படும் இறைவியுருவு மேற்கொண்டதன் பயனுகை எல்லாவகையான உயிர்களுக்கும், அவ்வவற்றிற்கு ஏற்ற வண்ணம் உய்தி முறைகளைச்செய்தருளுகின்ருன். உயிர்கள் எண்ணில்லாதனவாம். அவ்வெல்லா உயிர்களும் மூன்றுவகைப்படும். அவை ஆணவமலத்தின் சத்திபேதத்தால் அமைகின்றன. எந்த உயிரும் அநாதிகேவலத்தில் ஆணவமலத்தால் மறைப்புண்டே கிடக்கும் இயல்புடையதே. ஆனுல் அந்த மறைப்பு பல வேறுபட உள்ளது. இந்த வேறு பாட்டினை அடைந்துள்ள விஞ்ஞானுகலர், பிரளயாகலர், சகலர் என்கிற மூவகை உயிர்களையும் இறையருளே மல நீக்கம் செய்து ஈடேற்றுகின்றது. இவ்வுயிர்களுள், விஞ்ஞானத்தால் கலையற்றவர் எனப்படும் ஒருமலம் உடையோரை அதாவது விஞ்ஞானுகலரை விஞ்ஞானத்தாலேஆணவ மலம் நீங்கச்செய்வன் இறைவன். மலம் என்பது உயிரிடமிருந்து நீக்கப்படவேண்டுவதாகிய அழுக்காகும். இந்த அழுக்கு பிறிதோர் அழுக்குக்கொண்டே நீக்கப்படுகிறது. அங்ஙனம் நீக்குவதற்கு உபகாரப்பட்டு நிற்பதே மாயை எனப்படும்.

இந்த மாயை, இரண்டு வகைப்படும். அவை சுத்த மாயையும் அசுத்த மாயையும் ஆம். இந்த இரு வகை மாயைகளால் இயன்ற தத்துவங்களாகிய தனு முதலியவற்றைக் கொடுத்துத்தான் உயிர்களுடைய மலம் நீக்கப்படுகின்றது. ஆணவம் எனப்படும் ஒரு மலமே உடைய விஞ்ஞானுகலர்க்குச் சுத்த மாயா காரியங்களாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்படும் தனுவினைத்தந்து அசுத்தமாயைக்குமேல் வைகும்படிச்

செய்து, அறிவினுள் அறிவாய் நின்று இறைவன் உணர்த்திப் பதிஞானமுறச்செய்வன். சுத்த மாயா காரியம் மயக்கத்தையும், விருப்பு வெறுப்பையும் உண்டுபண்ணாது. விசேட அறிவையே உண்டுபண்ணும். இத்தகைய ஒரு மலத்துயிர்கட்கு உதவும் பெற்றியினையே, **விசுத்த தனு கரண புவன போகங்கள் தாங்க** என்றுரைத்துள்ளார் ஆசிரியர்.

சுத்த தத்துவம் முப்பத்தொன்றும். இவை சுத்த மாயா புவன வாசிகளான விஞ்ஞானகலர் பிரளயாகலர் என்னும் இருவகை உயிர்கட்கும் பொருந்துவனவாம். அசுத்த தத்துவம் முப்பத்தொன்றும் அசுத்த மாயாபுவன வாசிகளாகிய சகல வருக்கத்து உயிர்கட்குப் பொருந்துவனவாம். சுத்த தத்துவம் என்பது சுத்தகாலம் முதல் சுத்தநிலம் முடிவான முப்பத்தொன்றும். அசுத்த தத்துவம் என்பது அசுத்தகாலம் முதல் அசுத்தநிலம் முடிபாக உள்ள முப்பத்தொன்றுமாம். சுத்த மாயையினின்றும் தோன்றுவன சுத்த தத்துவம் எனப்படும். அசுத்த மாயையினின்றும் தோன்றுவன அசுத்ததத்துவம் எனப்படும்.

பிரளயாகலர் ஆவோர் ஆணவம், கன்மம் எனப்படும் இருமலம் உடையவராவர். இவர்களுடைய ஆணவமலம் கன்மத்தைக்கூட்டி நீக்கப்படுவதாகும். சகலர் ஆவோர் ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மூன்று மலங்களை உடையவராவர். இவர்கள் பிரகிருதி மாயையில் வசிப்பவராவர். இவர்களுடைய ஆணவமலம், கன்மமலம் மாயாமலங்கள் கூட்டி நீக்கப்படும். இவர்கட்கான தனு கரண புவன போகங்கள் அசுத்த மாயா காரியமானவை ஆதலால், அசுத்தத்

**தனு கரண புவன போகங்கள் தாங்க** என்றுரைக்கப்பட்டுள்ளது. இவற்றின் விரிவெல்லாம் தசகாரிய விளக்கத்தில் தத்துவரூபம் கூறப்படுமிடத்தால் அறியலாகும். இதனால், உயிர்கள் யாவும், தத்தம் தகுதிகளுக்கேற்பச் சுத்தமும் அசுத்தமும் ஆகிய இருவகையான மாயா காரியங்களாலாகிய தனு கரண புவன போகங்களை இறையருளால் அளிக்கப்பட்டு ஈடேறுதல் தெரியலாம்.

**விரிந்த உபாதானங்கள் மேவி :**

ஒரு பொருளின் தோற்றத்துக்கான காரணங்கள் மூன்றும். அவை முதல், துணை, நிமித்தம் என்பன. இவற்றுள் முதல் காரணம் எனப்படுவதே உபாதான காரணம் எனப்படும். குடத்துக்கு மண்ணே உபாதான காரணமாம். அவ்வாறு பிரபஞ்சத்துக்கு உபாதானம் மாயை ஆம். மாயை என்பது கிரியாசத்தியன்று; பரிக்கிரக சத்தியாம். இதனை வைப்புச்சத்தி என்பர். காரியப் பிரபஞ்சம் மூன்று வகைப்படும். அவை சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம் என்பனவாம். இங்ஙனம் காரியப் பிரபஞ்சம் மூன்றுயிருத்தலால் அவற்றின் முதற்காரணங்களும் தம்முள் வேறுபாடு உடையனவாம். மல கன்மங்களோடு கலவாமல் முதற்காரணமாய் நிற்பது சுத்தமாயை ஆகும். இது, மற்ற அசுத்தமாயை பிரகிருதிமாயை இரண்டையும் வியாபித்து மேலாய்நின்று; சுத்தப் பிரபஞ்சத்துக்குக் காரணமாம். அந்தச் சுத்தமாயையின் கீழாய் அடங்கி மல கன்மங்களோடு கலந்து முதற்காரணமாய் நிற்பது அசுத்தமாயை. இது சுத்தாசுத்தப் பிரபஞ்சத்துக்குக் காரணமாகும். இந்த அசுத்த மாயையின் தூல பரிணும

மாய்த் தோன்றி நிற்பதே பிரகிருதி மாயை எனப் படுவது. இது அசுத்தப் பிரபஞ்சத்துக்குக் காரண மாகும். இப்படிச் சடரூபமான சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என்று கூறப்படும் மூன்றும் முறையே விந்து, மோகினி, மான் என்றும் கூறப்படும். இவற்றையே **விரிந்த உபாதானங்கள்** என்றார் ஆசிரியர்.

இத்தகைய விரிந்த உபாதானங்கள் சடமேயாத லால், தத்தம் காரியங்களைச் சிவசத்தியின் சங்கற்ப ரூப மாகிய சந்நிதியினின்றும் தோற்றுவிக்கும் இயல்புடை யன. அசுத்த மாயைக்கு அனந்தரும், பிரகிருதி மாயைக்குச் சீகண்டரும் கருத்தாவாகக் கூறப்படி னும் அவர்கள் செய்யும் தொழில்கள் சிவசந்நிதியை யின்றி அமையமாட்டாவாம். இதனையே **மேவி** என்ற சொல் குறிப்பதாகும். ஆகவே, முதற்காரணங்கள் மூன்று எனவும், அவை தத்தம் காரியங்களைச் சிவ சத்தியினால் தோற்றுவிக்கும் எனவும், அந்தச் சத்தி சிவனை இன்றியமையாதது எனவும் நாம் தெரியலாகும். இதனைச் ''சகத்தினுக்குபாதானங்கள் விந்து மோகினி மான் மூன்றும்'' என்னும் சித்தியார் உரையாலும் அறியலாம். இவற்றால், உயிர்களைச் செலுத்துதலும், செல்லுமவற்றிற்குப் பயனளித்தலும் சிவசத்தியே என்பது பெறப்படும்.

**ஒன்றாய், விமலம் ஆய் :**

இவ்வாறெல்லாம் தொழிற்படும் திறங்களைக் கொண்டு இறைவனுக்குச் சத்திகள் பலவோ என்று ஐயம் ஏற்படும். பல ஆகாமல் ஒன்றே என்பதை **ஒன்றாய்** என்ற சொல் தெரிவிக்கின்றது. ஒருநாட்டை

ஆளும் அரசன் ஒருவனே ஆவன். அவனிடம் நாடு காவலுக்கான எல்லா அதிகாரங்களும் உள்ளன. எனவே அதிகாரங்கள் பலவாம். அதிகாரங்கள் பல வற்றையும் அமைச்சர்கள், படைத்தலைவர் முதலான பற்பல அதிகாரிகளைக்கொண்டு அரசன் ஒருவனே நடத்துகிறான். அதிகாரிகள், தத்தம் விருப்பம்போல் செய்யமுடியாது, அரசன் விருப்பிற்கிணங்கவே செய்ய வேண்டியுள்ளது. இப்படித்தான் சிவசத்தி ஒன்றே பிரமன் முதலாயினாரிடம் நின்று செய்யும் காரியவேறு பாட்டால் செநநி முதலியவாய்ப் பலவேறு வகைப் படுமேயல்லால், இயல்பில் ஒன்றே ஆகும். "சத்திதான் பலவோ என்னில்" என்னும் சித்தியார்ப் பாடல் இங்குப் பார்த்தல் பொருந்தும்.

சத்தியின் சொரூபம் அநுக்கிரகமே ஆகும். அந்த அநுக்கிரகம் ஞானம் எனப்படும். ஞானம் என்பது உயிர்கட்கு மலபரிபாகத்தை வருவிக்குமே யன்றித் தான் மலத்துட்பட்டுழலாது. வெளிச்சம், இருளைப் போக்குமேயல்லாமல், தான் இருளுட்பட்டுப் பிறி தொருவெளிச்சத்தின் துணையை நாடாது. ஞானத்தின் சிறப்பியல்பு சுத்தம் ஆகும் ஆதலால் **விமலம் ஆய்** என்றனர் ஆசிரியர். ஞானத்தின் வியாபார விசேடங்கள் பலவாயினும் ஞானம் ஒன்றே எனவும், அது தடை யிலாதது - சுத்தமானது எனவும் இங்கு நாம் தெரிதல் தக்கதாம்.

**ஐந்தொழிற்கும் வித்தாய் :**

உயிர்களுக்கு மல நீக்கமும் முத்திப்பேறுமே தேவைப்படுவன. இவற்றைச் செய்துகொள்ள எந்த

உயிருக்கும் ஆற்றல் இல்லை. ஆதலால், இறைவனுடைய துணை வேண்டியிருக்கிறது. இறைவன், வாளா இருப்பானாயின் உயிர்கட்கு ஏதும் பயனில்லை. உயிர்கட்கு ஏற்றவாறு உதவிபுரிதற்கு இறைதொழில் தேவை ஆகிறது. இறைவன், உயிர்கட்கு ஆற்றும் உதவித்தொழில்கள் ஐந்தாம். அவைகளை உடம்புட் படுத்தவேண்டியுள்ளது. அவ்வுடம்புள் வைத்துக் காக்கவேண்டியுமுள்ளது. அவைகளின் விருப்புக்கும் கன்மபலனுக்கும் தக்கவாறு உடலங்களை மாற்றி மாற்றி அளிக்க வேண்டியுள்ளது. உயிர்களுக்கு அனுபவரீதியாக அறிவு விளைத்தற்காக இன்பதுன்பங்களாகிய போகங்களை மறைத்து ஊட்டவேண்டியுள்ளது. இப்படியெல்லாம் செய்வதால் பக்குவப்பட்டுவிட்ட உயிருக்கு அநுக்கிரகம் செய்தல் வேண்டியுள்ளது.

அநுக்கிரகமே முதன்மையாகவும் பயனாகவும் நின்று எல்லாப் பிறதொழில்களையும் நடத்துகின்றது. ஆகவே, சிவசத்தியானது அநுக்கிரகம் மாத்திரம் குறித்தும், உயிர்கட்கு மலபரிபாகம் வருதற்பொருட்டுத் திரோதை முதலானவை குறித்தும் பொதுவகையாலும் சிறப்பு வகையாலும் உபகாரப்படுதலின், ஐந்தொழிற்கும் வித்தாய் எனலானார் ஆசிரியர். உயிர்களுக்கு உபகாரம் செய்யவேண்டுமென்று எண்ணுதலும், இன்னவிதம் செய்யவேண்டுமென்று எண்ணுதலும் ஆகிப் பராசத்தி பயன்படுதலினால் வித்து ஆய் என்றார். வித்தினிடம் உயிர் இருப்பினும், அதன்பால் முளைக்கும் திறன், உணவுகொள்ளும் திறன் முதலன இல்லாவிடில் பயன்படாமற்போம். அவ்வாறே, உயிர்களிடம் அறிவு இருப்பினும், அது முற்றும் மலமற்றுத்

துலங்கப்பெறுதற்கு இறையருளே துணையாவதென்க. ஆகவே, சிவன், யாதாமொன்றைச் செய்யுங்கால் சத்தியே துணையான காரணமாயிருப்பள் என நாம் அறியலாம். ''நாடனைத்தும் நங்கையிறைல் செய்தளிக்கும் நாயகன்'' என்பது திருக்களிற்றுப்படியார் வாக்கு.

**ஞாலத்து அரந்தை கெட :**

உயிர்களுக்கு வேண்டுவது இன்பம். அதனை எய்தப்பெறுவதற்காக உயிர்கள் உடம்பெடுத்துழலின்றன. உடம்பெடுத்ததன் பயன் மலமறப்பெற்று இறைவனடி பொருந்துதலே ஆகும். ''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை'' என்பர் திருவள்ளுவர். ஆனல் உயிர்கள் தத்தம் மனம்போன போக்கின்படி ஒழுகிக் கன்மப்பிரவாகத்தை விளைத்து அந்த ஊழ்வெள்ளத்திலே அடித்துச்செல்லப்பட்டு, சுவர்க்க நரகங்களிலே செல்வதும் மீள்வதுமாக உழன்று அல்லற்படுகின்றன. இந்தத் துன்பத்தையும் இறையருளே நீக்குகின்றது. இந்த நீக்கமும் இறைபுரி ஆடலால் நிகழ்வதேயாகும். இதனை, ''இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும் - நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன் - படங்கொண்டு நின்றஇப் பல்உயிர்க் கெல்லாம் - அடங்கலும் தாமாய்நின்று ஆடுகின்ருரே'' என்னும் திருமந்திரத்தாலும் தெருளலாகும். ஞாலத்தை நமக்காகப் படைத்தளித்த அதே திருவருள்தான் ஞாலத்தில் நாம் படும் துயரத்தையும் நீக்கியுதவுகின்றது என்னலாம். ஞாலம் என்பது இங்கு உயிர்களைக் குறிப்பதாம். இவ்வுலகில் நாம் அனுபவிக்கும் துன்பம் அரத்தால் அராவுவதுபோன்ற தன்மையது. ஆதலின், ஞாலத்து அரந்தை கெட எனலானர் ஆசிரியர்.

**மணிமன்றுள் ஆடல் காணும் அன்னே :**

இறைவன் ஆருயிர்களின் உய்திக்காக எண்ணற்ற காரியங்களைச் செய்கின்ருன். இச்செயல்களெல்லாம் எல்லாம்வல்ல பரமனுக்குப் பாரமான காரியங்களல்ல; மிகவும் எளிமையானவையே ஆகும். குழந்தைக்கு விளையாட்டுப் போல்வனவாகும். ஒரு தொழிலைச் செய்து செய்து பழகுகின்றவனுக்கு அத்தொழில் விளையாட்டுப்போல எளிமை வாய்ந்ததாகும். அங்ஙனமே, இறைவற்கு ஐந்தொழிலாடல் உள்ளது. இப்படி இறைவன், தான்புரியும் ஐந்தொழிலாடலையும், அதன் நோக்கத்தையும் நாம் நன்கு தெரிந்துணர்ந்து ஒழுகுதற்காகவே, நம்மீதுகொண்ட கருணையால் வெளிப்படையாகத் தில்லைவெளியிலே திருநடம் புரிந்தருளுகின்ருன். ஒரு சபையிலேறிச் சொல்லுபவர் உண்மையையே பலரறியச் சொல்லுபவராவர். அந்த உண்மை எவர்க்கும் எதற்கும் அஞ்சாத உண்மை ஆகும். அவ்வாறே ஆடலின் உண்மை புலப்படற்கே மன்றுள் இவ்வாடல் இறைவனுல் நிகழ்த்தப்படுவதாயிற்று. ஞான ஒளியே அம்பலமாதலால் மணி மன்றுள் எனப்பட்டது. சாணைபிடிக்கப்பட்ட மணி போலும், ஆன்மாக்களை மலங்கழுவி ஆட்கொள்ளுதற்கு இக்கூத்து நிகழ்வதாதலால் மணி என்ற அடைமொழி மன்றுக்குக் கூட்டப்பட்டது எனலும் கூடும்.

இத்தகை ஞான ஆடல், இறைவன் புரிவதற்கு அவன் திருவுள்ளத்தெழுந்த திருவருளே காரணமாகும். எனவே, திருவருளுள்ளமட்டில் இவ்வாடல் நிகழ்ந்து கொண்டேதானிருக்கும். திருவருள் என்பது சத்தியே ஆகும். அந்தச் சத்திதான், உயிர்களின் சார்பாக

இறைபுரி ஆடலை நிகழச்செய்கின்றது. இதனாலேயே, **ஆடல் காணும் அன்னை** எனப்பட்டது. "அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை யெல்லாம்" என்பர் ஞானிகள். சத்திதான், சகல ஆன்மாக்களையும் தோற்றுவித்து, பிறப்பித்து, ஊட்டி உறக்கியருளுகின்றாள். இதனை, "பேசரிய உயிரையெல்லாம் பெற்று நோக்கி" என்னும் சித்தியார்ப்பாடலால் அறியலாகும். "அம்மை அப்பரே உலகுக்கு அம்மையப்பர்" என்பதன் கருத்தும் ஈண்டுக் காணத்தகுவதாம். ஞானமாகிய சத்தியைக்கொண்டுதான் ஞேயமாகிய சிவம்அடையப்படும் என்பது கருத்தாம். இந்த மரபுபற்றியும் **அன்னை** என்று கூறப்பட்டுள்ளது என்னலாம்.

### அருள் பாதமலர் சென்னி வைப்பாம் :

திருவடிப்பெருமைபற்றி முன்பு பேசப்பட்டது. திருவருளே திருவடியாம். அத்திருவருள், அறமும் மறமும் என்னும் இருதிறக் கருணையாகி நம்மை ஆட்கொள்ளுகின்றதாகும். இதனை உபயதிருவடிகள் உணர்த்தி நிற்கின்றன. மலரை விரும்பிச் சூடிக் கொள்ளுவதுபோலும் இறைதிருவடி நம்மால் தரிக்கப் படவேண்டும். ஆனதுபற்றிப் **பாதமலர்** எனப்பட்டது. **சென்னி** என்பது சிரம். சிரம் உத்தம அங்கமாம். ஆகவே, நாம் இறை திருவடியை, மலரைத் தலைமேலே தரித்துக்கொள்வதுபோல, நம் அறிவிலே தாங்கிக் கொள்ளவேண்டியவர்களாவோம். அறிவுக்கும் அமுதுக்கும் ஆரொளிக்கும் சிரமே தானம் என்ப. இதனால், இறையருளுக்குள் நாம் மூழ்கவேண்டுமென்பது புலப்படுத்தப்பட்டதென்க. அயர்வின்றி அறிவின்கண் இத்திருவருள் தரிக்கப்படவேண்டுவதாகலின் **வைப்பாம்**

என்றனர் ஆசிரியர். பொருளைத் தேடிப் பெட்டியில் வைத்துக் கண்ணும் கருத்துமாய்க் காப்பதுபோல, அருளைநாடி அறிவில்வைத்து அதனிலேயே தோய்ந்து கிடப்பது நம் கடனாகும் என்க. ஆசிரியர் நமக்கறிவு கொளுத்தும் கருத்துடையாராதலின், நம்மையும் உளப்படுத்திக்கொண்டு வைப்பாம் என்றாராவர்.

இதுகாறும் கூறியவற்றால், சிவனது திருவருள் எனப்படும் பராசத்தியே, திரோதைமுதலாம் சத்தியாய் நின்று சிவனுக்குத் திருமேனியாகி மாயைகளைக்கூடிக் காரியப்படுத்திச் சிவன் புரியும் ஐந்தொழில்கட்கும் காரணமாகி ஆன்மகோடிகள் பிறப்பற்று நற்கதி அடையும்பொருட்டாகத் திரு அம்பலத்திலே சிவனைத் திருக்கூத்துக் கண்டருளுகின்றாள் என நாம் தெரிந்து வழிபட்டு அத்திருவருளைப் பெறவேண்டும் என்பது தெரியலாம். ஞானபூர்வகமாக வழிபட்டாலல்லது திருவருளைப்பெற இயலாதென்பது இதனால் விளங்குவதாகும்.

### 3. கருணைக் கணபதியைத் துதித்தல்

(விநாயகர்)

*நலந்தரநூல் இருந்தமிழின் செய்யுள் குற்றம்*
*நண்ணாமை இடையூறு நலியாமை கருதி*
*இலங்கும்இரு குழைஅருகு பொருதுவரி சிதறி*
*இணைவேல்கள் இகழ்ந்தகயல்கண்ணியொடும்இறை*
*கலந்தருள வரும்ஆனை முகத்தான் மும்மைக் [வன்*
*கடம்அருவி எனநிலவு கணபதியின் அருளால்*
*அலர்ந்துமது கரம்முனிவர் பரவவளர் கமலம்*
*அனையதிரு அடிஇணைகள் நினைதல் செய்வாம்.*

## பொழிப்புரை

பெரிய தமிழ்நூற் செய்யுளிடத்துப் பஞ்சதிகாரக் குற்றம் பொருந்தாமல் அவற்றுள் கூறிய நன்மை தருதற்பொருட்டும், இந்நூல் முடியும் அளவும் இடையே இங்குவந்து வருத்தாமலும், நினைத்து - விளங்காநின்ற இரண்டு மகரக்குழையளவும் சென்று யுத்தம்பண்ணி, செவ்வரி பரந்து இரண்டு வேல்களைப் பழித்த கயற்கண்ணியாகிய உமையோடும் இறைவன் கூடிப் பெறுதலான் மூவகை மதமும் அருவிபோல விளங்கப்படாநின்ற யானைமுகத்துடனே அவதரித்தருளின விநாயகனுடைய - வண்டுகளாகிய இருடிகள் பரவுதல் செய்யக் கருணையால் விரிந்து வளராநின்ற - தாமரைப்பூவை ஒத்த இரண்டு சீர்பாதங்களை யாம் தியானிப்பாம்.

## விளக்கவுரை

முன்பு ஒருமுறை விநாயகர் வணக்கம் கூறப்பட்டது. அது பொதுவகையால் சிவமேயாகிய நிர்க்குண விநாயகரை யாவர் சார்பாகவும் இந்நூலாசிரியர் வேண்டிக்கொண்டருளிய செய்தி உரைப்பதாகும். “அகளவடிவான பரமானந்தன்” என்று கூறுமிடத்தே விநாயகரைச் சிவமேயாகச் சிவஞானசுவாமிகள் குறிப்பிடுதல் காணலாம். இவ்வாறான பொது வடிவம், தாயொலியாகிய பிரணவமேயாதலால், சகல உயிர்கட்கும் ஞானமுண்டாக்குதற்கண் பயன் படுவதாகும்.

இனி, எல்லாம் ஒடுங்கி நின்ற அவதரத்திலே உயிர்களுக்கு உய்தி உண்டாதற்பொருட்டாகப் பரம்பொருளினிடத்தே ஒரு சங்கற்பம் உதயமாகின்றது.

அப்போது ஒன்றவனுகிய அப்பொருள், தானும் தன் ஆற்றலுமாகிய இருமை கொண்ட ஒருமையுடன் விளங்கலுறுகிருன். அப்போது, அவனது ஆற்ற லெனப்படும் சத்தி, அருளுருவுடையதாதலால் ஆற்ற லுடையானிடம் ஓர் இச்சையை எழுப்புகின்றது. இந்த மூல இச்சையால்தான் ஆன்மகோடிகளினிட முள்ள இச்சை தொழிற்படலாகின்றது. எனவே, அருளுடையானுக்கும் அருளுடைமைக்கும் இடையே தோன்றுகின்ற இச்சையால் அண்டங்களும் பிண்டங் களும் தோன்றுவதற்கான நிகழ்ச்சி உதிக்கின்றது. இதனுல், அதுகாறும் அடங்கிக்கிடந்த வைப்புத்திறன் பிறக்கின்றது. இந்த வைப்புத்திறன் தூய்மையுடைய தாகிப் பின்னிடையிலே, தூய்மையில்லாததை விளேக் கின்றது. தூய்மையுடைய வியாபகத்திலே, உயிர் - உடல் - உலகுகட்கு வேண்டும் எல்லாம் ஞானக்கரு வாகி அமைகின்றன. இந்த ஞானமூலமே, பிண்டத் தில் அறிவொளியாகவும், அண்டத்தில் ஆற்றலாகவும் அமைகின்றது. இதனுல் பல்வேறு வகைப்பட்ட தனுகரண புவனங்கள் கிரியைப்படுகின்றன. எனவே, இவைகட்கு ஆதாரமான ஞானமூலம், அருளுடைப் பொருட்கு அருளினிடமாகப் பிறக்கின்றமை தெரிய லாம். இந்த ஞானமூலம், உயிர்கட்கு உண்டாகும் இடையூறுகளே நீக்குதற்கும், நன்மைகளே ஆக்குதற் கும் பயன்படுகின்றது.

ஞானத்தை விளேத்துக்கொள்ளுதற்கும் ஞானமே ஆதாரமாகும். ஊனத்தினின்று ஞானம் பிறவாது. நாம் செல்வத்தை முதற்பொருளாக வைத்தே செல் வத்தை ஈட்டுகிருேம். இப்படியே, ஞானத்தை விளேத் துக்கொள்வதற்கும் ஞானத்தையே மூலதனமாக

நாம் கொள்ளவேண்டி உள்ளது. அஞ்ஞானத்தை ஒழிப்பதற்கும் ஞானத்தையேகருவியாக நாம் கையாள வேண்டி உள்ளது. இதனால், ஞானத்தேவையின் முக்கியத்துவம் புலப்படலாகும். இந்த ஞான சொரு பமே இங்கு உரைக்கப்படும் விநாயகர் துதியில் வரு வது. ஞானமூலம் சப்தம்; சப்தமூலம் பிரணவம்: பிரணவமூலம் அருள்; அருள்மூலம் சிவம். எனவே, சிவத்தினிடமிருந்து அருள் எழுதலும், அச்சிவம் அருள் இரண்டனிடமிருந்து பிரணவம் தோன்றுத லும்,அப்பிரணவத்திடமிருந்து சகலமான சப்தங்களும் உண்டாதலும், அச்சப்தங்களினிடமிருந்து ஆன்மாக் கட்கு அறிவு புலப்படுதலும் முறையேநிகழ்வனவாகும். இதனாலேயே, "சப்தஞானங்களை அறிந்து அனுபவிக் கும் ஆன்மா சகலப் பிராணிகளின் இருதயத்திருக் கின்றது" என உபநிடதம் பேசுகின்றது. இந்த முறை யிலே, அருளுடைப் பொருளைச் சிவம் எனவும், அருளைச் சத்தி எனவும் கொண்டு, அவ்விருபொருளுக் கும் பிறப்பது உயிர்கட்கு உய்திபயக்கும் ஞானமூலம் என்கிற கணபதி என நாம் கருதலாகும். ஞானக்கினித் தானம் நம் பிண்டத்திலே உந்தி ஆகும். குண்டலினி சத்தியின் வசிப்பிடம் உந்தி என்பர். இதனாலேயே, கணபதிக்குப் பெருவயிறு அமைவுண்டது. அவ்வயிறு, நமக்கு நம் ஞானக்கினித் தானத்தை நினைப்பூட்டிக் கொண்டே இருப்பதற்காகப் பெரிதாக உருவப்படுத் தப்பட்டுள்ளது. இத்தகைய ஞானக்கினி விளக்கத் தினாலேதான் சிவோகம்பாவனை லபிக்கின்றது. முதல் வன் விளங்கித்தோன்றுவது இப்பாவனையிலே ஆகும். இதனாலேதான் தன்னைச் சேடமாகக்கொண்ட சேடி யம் சிவம் என்பது ஏற்பட்டு முதல்வனுக்கு ஆன்மா அடிமையாகக்கிடத்தல் நிகழ்கின்றதாகும்.

ஆகவே, இத்தகைய சிவோகம் பாவனையில் உறைப்புண்டு சிவத்தைக்கண்டு நமக்கு ஞானம் பிரகாசிக்கவேண்டி. இந்நூலாசிரியர், இந்நூலைச் செய்த லுறுகிருராதலால், ஞானசொரூப விளக்கத்தின்மூல மாகவும் சிவசத்தியர்க்கு மூத்தபிள்ளையாராகவும் உரு வகித்துக்கூறப்படும் சகுண கணபதியினை இப்பாடலில் வழுத்தி, நம்மையும் அவ்வழி ஒழுகச்சொல்லுகின்ருராயினுர் எனலாம். ஆதலின், விநாயகரை, உலகத்துப் பிறப்பெடுக்கும் பிள்ளைபோல்வரென நாம் கருதுதல் ஒருபோதும் தகுதியுடையதாகாது என்க. மற்றும், நூலியற்றுவார்க்கு ஞானமே முக்கியமாகும். இந்த ஞானத்தை - அபரஞானத்தை - நூல்வாயிலாக ஒரு மொழியின் துணைகொண்டே தரவேண்டியுள்ளது. மொழி என்பது பஞ்ச இலக்கணங்களையும்கொண்டது. இந்த ஐந்து இலக்கணங்களும் வழுவாமல் காத்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் நூலாசிரியர்க்கு உள்ளது. ஆதலால், கொடுத்தலும், தடுத்தலுமான இருவேறுபட்ட திறனும்கொண்ட சகுணகணபதியை வழுத்தவேண்டுவது அவசியமாகிறது. நாம், எவரைப் பூசிப்பதாயினும் முதற்கண் விநாயகரைப் பூசிக்கிருேம். அது மட்டுமன்று; விநாயகரையே பூசித்தற்கண்ணும் முதற்கண் அவரையே வேண்டிக்கொள்ளுகிருேம். இதனுல் ஞானமூலத்தின் சிறப்பு உணரப்படும். இதனை, "தணிபூத்த தன் தந்தைபோல் பிற குறித்ததூஉம், தற்குறித்தேன்ற தொழிலும் தானே கடைக்கூட்ட வல்ல செங்கழுநீர்த் தடங்களிறை அஞ்சலிப்பாம்" என்ற செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்நூலுக்கு அமைந்துள்ள விநாயகர் வணக்கப்பாடற்பகுதியாலும் நாம் தெரியலாம். இனிச் செய்யுள் செப்பும் கருத்துக் களைக் காண்போம்.

நூல் நலம் தர :

கற்போருடைய மனக்கோட்டம் தீர்ப்பதே நூலின் மாண்பு ஆகும். அன்றியும், நூலானது அறம் பொருள் இன்பமும் விடும் பயப்பதைப் பயனுகை உடையதாக இருக்கவேண்டும். எவ்வளவோ, நூல்கள் கற்போர் நெஞ்சினை மாசுபடுத்திக் கெடுக்கின்றனவாக உள்ளன. அவைகளெல்லாம் நலம்தரும் நூல்களெனப்படா. எந்த ஒரு நூல், கற்போனுக்கு ஞானமூட்டி நல்வழிகளைக் கருதச்செய்து நடத்துகிறதோ அதுவே நலம்தரும்நூல் ஆகும். இதற்கு, நூல் கூறும் அனைத்தும் ஞானவிளக்க சாதனமாக அமைய வேண்டும். ஞானவாசகமே ஞானவிளக்கம் நல்கும். அத்தகை ஞான வாசகங்களைக்கொண்டதாக இந்நூல் அமைதல் வேண்டுமென்பதே நூலாசிரியரின் முதல் விருப்பம். அதற்குதவுமாறு கணபதியை வேண்டுகின்ருராயினுர். ஒருநூலின் சொற்களேனும் சொல்லேனும் கற்போருடைய நெஞ்சை இழுக்குட்படுத்தி இடரடையச்செய்யுமாறுல், அங்ஙனம் கற்போரைக் கெடுத்த பாவம் நூலாசிரியரையே சாரும். ஆதலால் எழுத்து முதலாக ஐவகை இலக்கணமும் வழுவின்றி அமையப்பெற்றுத் தாம் இயற்றும் இந்நூல் கற்போர்க்கு நலம் பயக்கவேண்டும் என்பது குறித்து நலம் தர நூல் என்றுள்ளனர் ஆசிரியர். இதனுல், இந்நூலினை நாம் கற்பதனுல் நலம்பெறுதல் ஒருதலையாம் என்க.

இரும் தமிழின் செய்யுள் குற்றம் நண்ணுமை :

தமிழ்மொழி தெய்வத்தன்மை வாய்ந்தது ஆகும். ஆரியம்போன்ற தெய்விக இயல்பு இதனுக்கும் உண்டு.

"அவிழ்க்கின்றவாறும் அதுகட்டுமாறும்" என்னும் திருமந்திரப்பாடலையும், "சொல்தமிழ் பாடுக என்றார் தூமறைபாடும்வாயார்" என்னும் வாக்கினையும் இங்கு நோக்கிடுதல் நன்றாம். நக்கீரர் வரலாற்றின் ஒருபகுதியும் இக்கருத்துக்குச் சான்றென்பர். மற்றும் தமிழுக்குள்ள எல்லாப்பெருமையையும் உள்ளடக்கி ஆசிரியர் இரும் தமிழின் என்றுள்ளார். இதனால், நாம் தமிழ் மொழி ஒன்றேபற்றி ஞானமெய்த இயலாதோ என்ற ஐயம் நீங்கப்பெறல் கூடும். மற்றும், தமிழ்மொழி, செய்யுளமைப்புக்கு உகந்த மொழியாகும். சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் திறன் இம்மொழியினிடம் உண்டு. பரந்துபட்ட பொருள்களையெல்லாம் சிறு சிறு சொற்களாலே திருக்குறள் நூல் சொல்லுவதனாலும் இதனை நாம் அறியலாம். இந்நூலாசிரியரும், முன்னோர்போலவே செய்யுளால் இந்நூலைச் செய்வதெனத் துணிந்துள்ளார். கருத்துக்களைப் பிறழ்வு படாமல் செய்யுளில் அமைத்துப்பாடுதல் எவ்வளவு சிரமமானதென்பது செய்யுளியற்றுவோர் நன்கறிவர். இதனை, "இழித்த புன்சொற் புன்புலவர் இசைத்துத் தாமே அழித்தலுறும் யாப்பே போல" என்னும் உவமைவாசகங்கொண்டும் தெரியலாம். மற்றும், நூலுக்குள் நுழைந்துவிடக்கூடிய பத்துக்குற்றங்களுங்கூட இதனில் அடங்குவதாகும். வடநூலார் கூறும் அவ்யாப்தி முதலான குற்றங்களும் செய்யுள் குற்றம் என்னும் சொற்றொடரில் அடங்குவனவே.

மேற்குறிக்கப்பட்ட குற்றங்கள் தாமியற்றும் நூலில் தலைகாட்டாமல் செய்வதற்கு விக்கினேசுவரர் தாம் வல்லவர் என்று ஆசிரியர் கூறுகிறாரே அல்லால் தமது மேதைமையாலே சாதித்துக்கொள்ளமுடியும்

என்று ஒருசிறிதும் கருத்துட் கொண்டிலர் என்பது நண்ணுமை என்ற சொல்லால் தெரியப்படுவதாம். இதனுல், ஆசிரியர் சற்றும் தற்போதமிலராய் முற்றும் சிவபோதவயப்பட்டு இந்நூலைச் செய்துள்ளார் என நாம் உரைரல் தக்கது.

## இடையூறு நலியாமை கருதி :

ஒரு நூலை இற்றுவதற்கு நூலாசிரியன் நல்லவகை யிலே திட்டமிட்டுக்கொண்டு, ஏற்ற வசதிகளெல்லாம் உடையவனுகித் தொடங்கினுலும் அந்நூல் முடிவு பெருமல் இடையீடுபட்டு நின்று போதலும் கூடும். இதற்கு நூலாசிரியரின் ஆயுட்குறை முதலான பல் வேறு காரணங்கள், நூலாசிரியனின் அதிகாரவரம்புக்கு மேற்பட்டனவாக உள. எத்தனையோ நூல்கள் இப் படி இடைமுறிவுற்று நிறைவுருமல் போயிருக்கின்றன. மற்றும் சில நூல்கள், தொடங்கும்போது மிடுக்காய்த் தொடங்கிப் பின்னர் அம்மிடுக்குக்குன்றி ஏனேதானே என்று முடிந்திருக்கின்றன. அருமையாக ஒருநூல் செய்யப்பட்டிருந்தும் பல் வேறு காரணங்களால் அந்நூல் வெளிவராமலோ, அழிந்தோ போய்விடுதலும் உண்டு. இந்த முறையில் எத்தனையோ நூல்களைத் தமிழ்மொழி பறிகொடுத்துள்ளது. இவ்வாறுன இடையூறுகள் எதுவும் எட்டிப்பாராதிருந்தால்தான் ஒரு நூல் மக்கட்குப்பயன்பட நிலவும். தமது நூல் என்றும் நின்று மக்களாவாரைச் சிவநெறிப்படுத்திக் கொண்டிருக்கவேண்டுமென்ற விருப்பத்தால் ஆசிரி யர் **இடையூறு நலியாமை கருதி** என்றுள்ளார். **கருதி** என்னும் சொல்லமைப்பால் ஆசிரியர் உள்ளத்து விருப்பம் உரைப்படும். ஆகவே, ஆசிரியர்க்கு நம்

ஈடேற்றத்தில் எவ்வளவு சிரத்தை உள்ளது என்பது புலனுகின்றது.

**இலங்கும் இரு குழை அருகு பொருது, வரி சிதறி, இணைவேல்கள் இகழ்ந்த கயல் கண்ணியொடும் :**

இவ்வரிகள், உமாதேவியாரின் விழியழகை விளம்புவனவாகும். இங்குக் கயற்கண்ணி என்ற சொற்றொடரை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமை உள்ளங்கொள்ளற்கு உரித்தாம். இச்சொற்றொடர் கயல்மீன் போன்ற கண்ணை உடையவள் எனச் சாமானியமாய்ப் பொருள்படும். இப்பொருளில் கண்ணின் வடிவத்துக்குக் கயல்மீனின் வடிவம் உவமை கூறப்பட்டதாகும். மற்றும், இச்சொற்றொடர் மீனின் தன்மை உடைய கண் உடையவள் என்றும் பொருள்தரும். ஆதலின், இத்தொடர் மீனுக்ஷி என்று பொருள்படுவதாகும். மீனுக்ஷி என்பது உமாதேவியாரைக் குறிப்பதாகும். எனவே அருட் சத்தியை இது குறிப்பதாயிற்று. மீனுக்ஷி என்னும் சொற்றொடருக்குப் பெரியோர்கள் சத்தியின் கண்ணினிடத்தே மீனின் கண்ணினிடத்தி லுள்ள தன்மை உள்ளதென்பர். மீனின்கண் என்ன தன்மையுடையது என்பதை 'மீனது பார்வையினுல் சிசுஉற்பத்தி செய்யும்' எனச் சித்தியார் கூறுவதினின் றும் தெரியலாம். ஞானுசாரியரின் சட்சு தீட்சைக்கு இந்த உவமை தரப்படுகின்றது. எனவே, சத்தியினுடை அருட்பார்வையால் பாராதி அண்டப்பரப்பெல்லாம் உற்பத்தியாகின்றன என்பது பெறப்படும். இந்திரியங்களில் நயனமே உள்ளக் குறிப்பை உள்ளவாறு வெளிப்படுத்தும் இயல்புடையது. இதனுல் கண்ணின் பெருமை தெரியலாம். ஆன்மாக்களின்

மலநோயை நீக்கற்குச் சங்கற்பங்கொண்ட சிவத்தினை, அவ்வான்மாக்களின் துன்பத்தை நீக்குதற்கு ஏற்ற வாறு தொழிற்படுத்த அச்சிவத்தருள் (அல்லது) சத்தி எண்ணவைக்கின்றது.

இங்ஙனம் சங்கற்பமும் அருளும் கூடிய கூட்டத் தினைத் தலைவனும் தலைவியும் கூடும் கூட்டமென உருவகிப்பது மரபு. இவ்வாறு சுத்தமாயையில் தொழில் நிகழத் தோன்றும் திருவுள்ளமே - ஆன்ம கோடிகட்குள்ள துன்பத்தை நீக்கவும், இன்பத்தை ஆக்கவும்வல்ல ஆற்றலாகிமிளிர்கின்றது. இவ்வாற்றல் ஒலியும் குறிப்பும் உடையது. இதனால் தோன்றுவது பிரணவம் எனப்படும் ஓங்காரமாம். இந்த ஓங்காரமே சடமும் சேதனமுமாகிய பிரபஞ்சத்தையெல்லாம் வெளிப்படச்செய்து துணைநிற்கின்றது. இதன் துணை யைப்பற்றினரெல்லாரும் எடுத்த காரியத்தை எளிதின் முடிப்பர். இவ்வாறான காரியமுடிவு - (அல்லது) - சித்தி உண்டாகும் நிமித்தமாகவே சிவம் சத்தி ஆகிய இருவரும் - சங்கற்பமும் திருவருளும் - உவந்து புணர்வர். இச்செய்தி நம்மனோர்க்குத் தெளிவாகத் தெரியாவிடினும், முதல்வன் அருள்பெற்ற ஞானிகட்கு விளங்குவதாகும் என்பர். ஆகவே, சிவம் முற்றிலும் அருள்வயப்படவேண்டியிருத்தல் தேவை ஆகிறது. திருவருள், சிவசங்கற்பத்தைப் பக்குவப்படுத்தும் இயல்பு நமக்கு நன்கு புலப்படுவதற்காவே பொருது, சிதறி, இகழ்ந்த கண்ணி எனவுற்றார் ஆசிரியர். சங்கற் பத்தோற்றம், விரிவு, காரியப்பாடு என்கிற மூன்று நிலைகளையும் கண்ணுக்கு வைத்துக் கூறப்பட்டுள்ள இந்த மூன்று சொற்கள் குறிப்பனவாகும். இதனால், ஆன்ம ஈடேற்றத்துக்குரிய அருவம் - அருவுருவம் -

உருவம் என்பன உளவாகின்றன. அதாவது, நடத்த நிலை நிகழ்கின்றதாகும் என்னலாம். திருவருளின் எல்லையில்லா விசாலத்தை இலங்கும் இரு குழை அருகுபொருது என்பது குறிப்பிற் புலப்படுத்துவதாம்.

விசாலாக்ஷி என்ற அம்மை திருப்பெயரில் இக் குறிப்புள்ளமை தெரியலாகும். செவ்வரி, கண்ணிற் காமக் குறிப்பிருத்தலை உணர்த்தும் தகையதாம். எனவே, வரி சிதறி என்பது சங்கற்பத்தின் விருப்பு நிலையினை அறிவிப்பதாகும். இதுவே, சகல விரிவுக்கும் ஆதாரமாம். காமாக்ஷி என்னும் அம்மை திருப்பெயர்க் குறிப்பை ஈண்டுக் கருத்துட்கோடல் நன்றாகும். இனிச் சங்கற்பத்தின் காரியப்பாட்டினது குறிப்பினை இணை வேல்கள் இகழ்ந்த என்ற இடம் உள்ளுறை யாகக் கொண்டதாகும். இதுவே மீனாக்ஷி என்கிற பெயர்க்குறிப்புக்கேற்ப உள்ள தொடராம். நோக்கம் இரண்டும் ஒருகாரியத்தையே நோயாகவும் மருந்தாக வும் நின்று செய்யும் இயல்பினவாகும். இதனில் துன்ப இன்பக்குறிப்புகளிருத்தலை நாம் அறியலாகும். இதுபற்றியே ஆசிரியர் இணை வேல்கள் என்கிறார். இது, சங்கற்பத்தினை முற்றும் தனக்கு உடன்படுத்திய திருவருட்டிறத்தினைப் புலப்படுத்தும் என்னலாம். இவற்றால் சத்தியின் தன்மை தெரியப்பண்ணப்பட்ட தென்க.

## இறைவன் கலந்தருள வரும் ஆனை முகத்தான்:

இவ்வாறான திருவருட்டிறத்தால், எல்லாவற்றை யும் தன்னுள் அடங்கச்செய்து கொண்டிருக்கும் இறைவன், எல்லாவற்றையும் வெளிப்படச்செய்து

எல்லாவற்றுள்ளும் தான் தங்குபவனுகவும் ஆகிருன். இறைவன் என்னும் சொல், முதல்வனுடைய சொரு பம், தடத்தம் எனப்படும் இருவகை நிலைகளையும் உணர்த்தும் பொதுமைச் சொல்லாக இங்கு வைக்கப் பட்டிருத்தல் காணலாம்.

சிவமும் - சத்தியும் (அதாவது) சங்கற்பமும் திரு வருளும் ஒன்றுபட்டுக் காரியம் நிகழ்வதையே கலந்து அருள வரும் என்கிறுர் ஆசிரியர். இங்ஙனம் சத்தியும் சிவமும் ஒன்றுபடினும் "பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்" என்று கூறப்படுவதற் கேற்பவே, பிரணவாகாரத் திருமேனிப்பெருமாளுகிய விநாயகரைப் பிரமசாரி என்றும், அப்பெருமான் திரு வுருவை ஆணும் பெண்ணுமாகிய ஈருருவுமுடையது என்றும் பேசுவது வழக்காயிற்று. ஆனை முகத்தான் என்ற தொடர் பிரணவத்தோற்றத்தைத் தெரியச்செய் வதாகும். 'ஆனைமுகத்துடன்' என்பது சொல்லின் பொருளாம்.

**மும்மைக் கடம் அருவி என நிலவு கணபதியின் அருளால் :**

யானைக்குள்ள ஆற்றல் அதன் மதப்பெருக்கால் உணரப்படும். உலகத்துக்களிறு மும்மதம் உடையது. அவை கன்ன, கபோல, பீஜமதங்கள் எனப்படும். ஆனால், விநாயகராகிய யானைக்கு மும்மதங்கள் இல்லை. இருமதங்களே உண்டு. அவ்விரண்டும் திருமுகத்தை இடமாகக் கொண்டவை. "ஒரு மருப்பு இருமதக் கடவுள்" என்ற வாக்கும் இஃதறிவிக்கும். இருப் பினும், ஆசிரியர் இங்கு மும்மைக்கடம் என்றுள்ளா ராவர். பஞ்சாக்கரம் என்பது திருஐந்தெழுத்துக்களைக்

குறிக்கும் சொல்லாம். எனினும் ஐந்தெழுத்தின் பேத மாகிய நாலெழுத்து, மூன்றெழுத்து முதலியனவும் ஐந்தெழுத்து எனவே வழங்கப்படுதல் மரபாம். அவ் வாறே மும்மதத்தின் பேதமாகிய ஒருமதம் இருமதம் என்பன மும்மதம் எனப்படும் என்பர் பெரியோர்.

இனி, பசுக்களாகிய நமக்கு - சகலராகிய நமக்கு - மும்மலங்கள் உள. அவை, ஆணவம் கன்மம் மாயை என்பன. இம்மூன்றையும் குற்றமூலங்கள் என்னலாம். இம்மூன்றையும் பரிகரித்தால் நம்பால் குற்றம் இராது. இம்மூன்றையும் போக்கிடும் திறல் ஆனைமுகத்தவருக் கிருத்தலை மும்மைக்கடம் என்ற பிரயோகம் உணர்த்து கிறது என்னலாம். அன்றி, இருமதமே கொள்வ தானாலும் இழுக்கு ஏதும் இலது. எவ்வாறெனில் நம்முடைய மும்மலங்களும், சகஜம், ஆகந்துகம் என்னும் இரண்டுமலங்களாகவும் கூறப்படும். சகஜம் ஆணவத்தையும், ஆகந்துகம் கன்ம மாயைகளையும் குறிக்கும். இப்படியான இரண்டுவகைப்பட்ட மலங் களையும் கணபதியாவாரின் இருமதங்களும் பரிகரித்தற் கண் உதவுவன என்னலாகும். உடம்பின் மாசு, அருவிநீரில் மூழ்குவதால் நீங்தும். அவ்வாறே, விநாய கரின் மதஅருவி, நம்மலங்களை, நாம் வழிபடுவதால் - அடியில் மூழ்குவதால் - போக்கி உதவும். ஆதலின், அருவி என நிலவு கணபதி என்றுள்ளார் ஆசிரியர். நம் அறிவு விளக்கத்துக்கு உபகாரப்படுவதற்காகத் தத்துவகணங்கள் தரப்பட்டுள்ளன. இத்தத்துவசாலங் கள் அத்தனையும் நீங்கினுல்தான் நாம் சிவப்பேறு எய்த முடியும். தத்துவகணங்கள் அத்தனையையும் போக்கியுதவும் தலைவன் விநாயகன். ஆதலால் கணபதி என்ற பெயரால் ஆசிரியர் இங்கு அழைக்கலுற்ருர்.

கணங்கட்குத் தலைவர் என்பது இச்சொல்லின் சாமானியமான பொருளாகும். அருளால் அவதரித்த கணபதியினிடம் நாமும் வேண்டத்தகுவது அவனது திருவருளே ஆகும். அப்பெருமானும் சுலபத்தில் திருவருளைத் தருபவனாக உள்ளான் என்பதை அருளால்...... வளர் என்ற இடம் தெரிவிப்பதாகும்.

**மதுகரம் முனிவர் பரவ வளர்கமலம் அனைய திருவடி இணைகள் :**

ஆசைமட்டில் அபாரமாய் இருந்து பயனில்லை. அதை நிறைவேற்றற்கான அறிவும் செயலாற்றலும் வேண்டும். இந்த இரண்டையும், ஞான ஆற்றல்களின் கூட்டுறவால் திருவவதரித்த மூத்தபிள்ளையார் தருவதில் வல்லபம் உடையவராவர். ஆதலால், திருவடி **இணைகள்** எனக்கூறி அவ்விரண்டையும் பெறுதற்கான வழிபாடாற்றுமாறு கூறுகின்றார் ஆசிரியர். இந்த அடியிணைகள் முத்திச்செல்வம் வேண்டினும் அதற்கு வழி செய்யவல்லனவாதலின் **திரு** என அடைதந்து சிறப்பித்துள்ளார். இனி, குளத்தில் நிறைந்துள்ள தண்ணீரை அலங்கரிக்கவல்லது தாமரைதான். தாமரை தெய்விகத்தன்மையுங்கொண்டது. "தாமரை இல்லாத் தடம்" என்கிற உவமையும், குளத்துக்கு அணி செய்வது தாமரையே என்பதைப் புலப்படுத்தும். ஆதலின், தாமரைக்குள்ள பலவிதப் பெயர்களுள் **கமலம்** என்பது எடுத்தாளப்பட்டுள்ளது. இதனால், தியானத்தானத்தின் (புருமத்தியின்) இருப்பாகிய குளத்திறுக்கு (நெற்றிக்கு) ஒளிதந்து சிறப்பிப்பன திருவடிகள் என நாம் **கமலம் அனைய** என்ற தொடரால் அறிதல் சிறப்புடைத்தாம்.

வண்டுகள் ரீங்காரம் புரிந்துகொண்டு வந்து பரவுவதனுல் கமலம் மலர்ந்து அவைகளுக்குத் தேனினைத் தந்து களிப்பூட்டுகிறது. அவ்வாறே ஐம்புலவிழைவினை விடுத்த முனிவர்கள் பரவுவதனுலே விநாயகரது திருவுள்ளம் மலர்ச்சியடைந்து துன்பங்களைந்து இன்பந் தரும். திருவடி என்பது இன்பவீட்டுக்கு அறிகுறியாம். கமலம், மலர்ந்த பிறகு திரும்பவும் கூம்பிச்சாம்பும் இயல்புடையது. ஆனுல் திருவடித்தாமரைகள் யாண்டும் மலர்ந்து நின்று இன்பம் செய்வனவாதலால் வளர் என்றனர் ஆசிரியர். இச்செய்யுளில், இவ்விடத்தினுல், நம்மினும் மேலோர்களும் விநாயகரை நாடித் தொழுது நலம் பெறுகின்றவராவர் என்கிற சம்பிரதாய சதாசாரத்தினை ஆசிரியர் நமக்கு அறிவுறுத்தி அவ்வழியிலே தாமும் நடந்து காட்டி, நம்மையும் அவ்வழி ஒழுகுமாறு குறிப்பிக்கின்ருராவர் என்னலாம்.

நினைதல் செய்வாம் :

இதற்கு முந்தின பாடல்களிலே 'போற்றல் செய்வாம்' என்றும், 'சென்னிவைப்பாம்' என்றும் கூறிய ஆசிரியர் ஈண்டு இச்செய்யுளிலே 'நினைதல் செய்வாம்' என்று சொல்லியுள்ளார். ஏனைச்செயல்களிலும் நினைதலாகிய செயல் சுலபமாகச் செய்யக்கூடியதாகும். இதனுல், சுலபமாக அருள்பெறற்கான உபாயம் கூறப்பட்டமை காணலாம். இச்செய்யுளில், முன்பே, பூசைத்தானம் பற்றியும் ஓமத்தானம் பற்றியுமுள்ள குறிப்புக்களுள்ளன. இச்சொல்தொடரால் தியானத்தானம் கூறப்பட்டுள்ளமை தெரியலாகும். எனவே, சகுணகணபதியின் திருவடிகளைத் தியானிப்போம் என்பது கருத்தாம். எந்தக் காரியத்திலும் விநாயகரது

நினைப்பே முதற்கண் நிகழவேண்டும் என்பது தெரியப் படும். புள்ளியும் தண்டமும் ஆகிய குறிப்புடைய விந்துவும் நாதமும் கூடிய கூட்டமே பிள்ளையார் சுழி எனப்படும். இதனை முன்னெழுதிக்கொண்டே பலரும் எழுதத் தொடங்குதல் காண்கின்றோம். அவ்வாறே, கன்னியொடும் இறைவன் கலந்தருள்வதனால் வரும் ஆனைமுகனடியிணைகளைச் சிந்தித்து நூலைத் தொடங் குதல் சிறப்புடைய மரபு ஆகும். மற்றும் கணபதி பற்றிய சிறப்புக்கள் யாவற்றையும் இவ்வாதீனத்து 100ஆம் வெளியீட்டினால் அறியலாகும்.

இதுகாறும் சொல்லப்பட்டனகொண்டு, எவரும் ஒரு காரியத்தைச் செய்துமுடித்தற்கான ஆற்றலை முந்த அடையவேண்டும் என்பதும், அவ்வாற்றல் ஓங்காரச்சொருபமுடைய ஆனைமுகதேவரால் அருளப் படும் என்பதும் நாம் தெரிதல் நலம். மற்றும், ஓங்காரம் சொற்பிரபஞ்சத்துக்கெல்லாம் முதன்மை வாய்ந்ததாதலின், சகுண விநாயகர் வழிபாடு வாக்கினை வளப்படுத்தியுதவும் என்பது தெரியலாம்.

## 4. இளையபிள்ளையாரைத் துதித்தல்

(சுப்பிரமணியர்)

*வளம்நிலவு குல அமரர் பதிஆய் நீல*
*மயில்எறி வரும்ஈசன் அருள்ஞான மதலை*
*அளவுஇல்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த*
*அகத்தியனுக்(கு) ஒத்(து) உரைக்கும் அண்ணல் [விறல் என்று*
*உளமருவு சூரன்உரம் எம(து)இடும்பை ஓங்கல்*
*ஒன்றிரண்டு கூறுபட ஒளிநிகழ்வேல் உகந்த*
*களபம்மலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த*
*கந்தன்மலர் அடிஇணைகள் சிந்தை செய்வாம்.*

## பொழிப்புரை

செல்வம் விளங்கிய நல்ல தேவர்களுக்குச் சேனாபதியாய், நீலநிறத்தை உடைய மயில் ஏறி வரங் கொடுத்தற்கு எழுந்தருளி, வருகின்ற சருவேசுரன் அருளிய ஞானப்பிள்ளை, அளவிறந்த பல நூல்களும் ஆறங்கமும் வேதங்களும் அறிந்த அகத்திய மாமுனிவனுக்கு வேதப்பொருளை உபதேசிக்கும் குரவன், எண்ணப்படாத வீரப்பாட்டை உள்ளத்தின்கண்ணே எப்பொழுதும் மமதையால் வைத்திருக்கும் சூரனுடைய மார்பும், எம்போல்வாருடைய பிறவித் துன்பமும், கிரவுஞ்சகிரியும் ஆகிய இவை மூன்றும் ஒவ்வொன்று இரண்டு கூறுபடும்படு ஒளி விளங்கிய வேலை உயர்த்துவிட்ட, குறமகளாகிய வள்ளிநாயகியினுடைய பல கூட்டுச் செறிந்த அழகிய திருமுலைகளைக் கூடியருளின கந்தன் என்னும் திருநாமத்தை உடையவனுடைய மலர்போலும் திருவடியிணைகளை யாம் சிந்திப்பாம்.

## விளக்கவுரை

இந்நூல் இயற்றப்புகுந்த நூலாசிரியர், அருட்பிள்ளையாரை வழிபட்டுத் திருவருளைப் பெற்றுக் கொண்டபின்னர், அந்த அடைவிலே ஞானப்பிள்ளையாரை இச்செய்யுளால் வழிபடுகின்றாராயினர். நூலுக்கான இடையூற்றைக் களைவதற்கு அருளும், விஷயத்தைச் செம்மையுறுத்துவதற்கு ஞானமுமே மிகவும் முக்கியமானவை ஆம். இந்தமுறையில் ஞானமதலையாகிய முருகன் இச்செய்யுளில் போற்றப்படுகின்றார் என்க. அன்றியும் சத்து, சித்து, ஆனந்தம் என்னும் மூன்று இயல்புகளுள், சத்தும் சித்தும் கூடியதன் விளைவே ஆனந்தமாகும். இவற்றுள் சத்து மிகுத்துச்

சித்தொடு கூடியதன் பயனாக விளங்குபவரே விநாயகராவர். சித்து மிகுத்துச் சத்தொடு கூடியதன் பயனாக விளங்குபவரே முருகப்பிரானாவர். இந்த முறையிலே பார்த்தாலும், விநாயகருக்கு அடுத்தபடியாகப் போற்றப்படத் தக்கவர் முருகப்பிரானாதலால் ஆசிரியர் இங்கு முருகனைப் போற்றலுற்றார் என்னலாம்.

**வளம் நிலவு குலம் அமரர் பதி ஆய் :**

அமரர் என்பார் அமுதபானம் பண்ணியவர்கள் ஆவர். இதனால் அவர்கட்கு மிருத்யுபயம் இல்லையாம் என்பர். என்றாலும் இவர்கள் தத்தம் புண்ணிய விசேடங்கட்கு ஏற்ப நீடித்த ஆயுளும் போகமும் அதிகாரமும் பெற்றவர்களேயல்லாமல் நித்தியமான தன்மை பெற்றவராகார். இவர்கட்கு நேர்ப்பகைவர்கள் அசுரர்கள் ஆவர். இந்தப் பகையையும் தங்கள் ஆற்றலால் போக்கிக்கொள்ளும் வல்லமை இவர்கட்கில்லை. ஆதலால், இவர்கள் அடிக்கடி பகைவரால் துன்பமும் தோல்வியும், முனிவர்களின் சாபத்தால் போக அதிகார நீக்கமும் பெற்று அவதியுறுபவராவர். என்றாலும், நம்மைவிட மேம்பட்ட நிலைமை உடையவராதலால் **வளம் நிலவு குலம் அமரர்** என்றார் ஆசிரியர்.

இவர்கள் சூரபதுமனாதியோரால் அளவற்ற இன்னல்களை அனுபவிக்க நேர்ந்தபோது, சிவபெருமானை வேண்டி முருகப்பிரானை அடையப்பெற்று அந்தப் பெருமானைத் தங்கள் படைத்தலைவராகக்கொண்டு அவர்க்குத் துணையாய் நின்று நலம் எய்தினர். இங்ஙனம், தேவர்கட்குத் தலைமைபூண்ட தகைமையினால் **பதி ஆய்** என்றார் ஆசிரியர். இதனால் நாமும்

தேவர்களைப்போலே திருமுருகனைத் தலைமையாகக் கொண்டு காரியத்தில் பிரவேசித்தால் வெற்றி கிட்டும் என்பது துணிபாம். இவ்வாறன்றி, கங்கையில் முருகப் பிரான் வளர்ந்து இறைவனை நோக்கிவரலானார். அப் போது சிவன், பார்வதி, அக்கினி, கங்கை இவர்கள் நால்வரும் முருகனைத்தம்மிடம் வரவேண்டியிருந்தனர், முருகன், அப்போது நால்வர் எண்ணமும் ஈடேறு மாறு ஸ்கந்தர், விசாகர், சாகர், நைகமேயர் என்கிற நான்கு வடிவுடனும் முறையே சிவன், பார்வதி, அக்கினி, கங்கை என்பவர்களை அடைந்தார். பிரம தேவன், இவரைச் சிறந்த யோகபுருஷரென வியந்து பதினெட்டுத் தேவகணங்களுக்கும் எல்லா உலகங் களுக்கும் சேனாபதியாக இருக்கும் பதவியை அளித் தார். இப்படி மகாபாரதம் சேனாபதியான வரலாற்றை விளம்புகிறது. இதனாலும், யாவருடைய அபீஷ்டங் களையும் குறைவற நிறைவேற்றிவைக்கும் ஞான மேலோன் முருகன் என்பது விளங்கக்கூடும். பரிபாடல் 5ஆம் பாடலும், திருக்கழுமல மும்மணிக்கோவையில் ''வானவர்கள் வேண்ட.........வரம் போற்றி'' என்ற இடமும் படிக்கத்தக்கனவாம்.

### நீலமயில் ஏறிவரும் :

மயில் முருகனுக்குரிய வாகனம் ஆகும். மயில் நீல நிறம் உடையது. முருகன் செந்நிறத்தன். எனவே, கருமைமீது செம்மை அமைந்திருக்கும் காட்சியாகும் இது. இதனால், அஞ்ஞானத்தை அடக்கி ஞானத்தை மிகுக்கச் செலுத்துபவன் முருகன் என்பது தெரிய லாம். நூலுக்கு ஞானமே பயனாகலால் நூலாசிரியர் இங்ஙனம் கூறியுள்ளார் என்னலாம். ''பலர் புகழ்

ஞாயிறு கடற்கண்டாங்கு" என்ற உவமைக்குள்ள உரையும் இங்கு நோக்கத்தகுவதாகும். மகாபாரதம், முருகனுக்குப் பலபல தேவர்கள் தத்தம் திறமைக் கேற்ப ஒவ்வொருபொருளைக் கொடுத்துதவினர் எனவும், அவர்களுள், கருடன் மயிலை உதவினன் எனவும் கூறும். போர்க்களத்தே இந்திரன் மயிலாகித் தாங்கினன் என்பதும் உண்டு. விந்துதத்துவமே மயிலாம் என்று உரைப்பாரும் உளர். சூரபதுமன், இரு கூறு பட்ட காலையில் ஒரு கூற்றினால் மயிலாகித் தாங்கினன் என்பதும் கூறப்படும். இவ்வாறு பல மயில்கள் கூறப் படுதலின், முருகனுக்கே உரியதான ஆதியாம் மயிலை நீலமயில் என்றார் ஆசிரியர் என்க!

இனி, வரும் என்றமையால், முருகன், தன்னை உருகி நினைப்போர்க்கு மிக எளிதில் வரமருள வரும் தேவன் என்பது புலப்படும். "எங்கே நினைப்பினும் அங்கே என் முன்வந்து எதிர்நிற்பனே" என்பர் அருணகிரியார். மற்றும் மயில் விருத்தம் முதலான நூல் களால் மயிலின் திறம் நன்கறியப்படும். "ஆடுறும் இயற்கைப் பசுங்கடல் முகட்டின் அறுதிசைப் புற விருள் துரந்து - நாடுறு பொருளை நானிலம் நணுக நகுசுடர்ப் பரிதி வந்திடல்போல் - ஆடுறு மயில்மேல் அறிவினை மயக்கும் ஆறுகொள் அத்துவா இருளால் - வாடுறும் உயிர்கள் விடுற அமைந்த மயிலன்" என்ற பாடற்கருத்தும் ஈண்டு ஒப்புநோக்குதல் பொருந்தும்.

**ஈசன் அருள் ஞானமதலை :**

முருகன் திரு அவதாரம்பற்றிய வரலாறு யாவரும் அறிந்த ஒன்றும். இவ்வரலாற்றில் உள்ள வேறுபாடு களையெல்லாம் குமாரசம்பவம், வால்மீகி ராமாயணம்,

பரிபாடல், கந்தபுராணம் முதலிய நூல்களை ஓதுவத ஞல் உணரலாகும். எப்படியும், தேவர் இடுக்கண் கண்டு இரக்கங்கொண்டு பரமசிவன் அருள்செய்த குமாரர் ஆவர் முருகப்பிரான் என்பது எல்லாவித வரலாறுகளிலும் உள்ள ஒற்றுமை ஆகும். மற்றும், சிவபிரானே முருகனுயினுன் என்பதொரு கொள்கை யும் உண்டு. சிவத்தின் கூறு நிறையப்பெற்றவர் விநாயகர் எனவும், சத்தியின் கூறு நிரம்பப்பெற்றவர் முருகன் என்பதொரு வழக்கும் உண்டு. முருகன் ஒளி வடிவினர். "ஒவற இமைக்கும் சேண்விளங்கு அவிர் ஒளி" என்பது திருமுருகு. ஐந்து திருமுகங்க ளுடைய சிவமும், ஒரு திருமுகம் உடைய பராசத்தி யும் கூடியமையால் ஆறுமுகம் படைத்த குமாரன் தோன்றினன் என்பர். இதனை, "ஈசனே அவன் ஆட லால் மதலை ஆயினன் காண்" என்ற பாடலாலும் தெரிதல் கூடும்.

சித்து நிறைந்த ஆனந்தமே முருகனுதலால் ஞான மதலை என்றனர் ஆசிரியர். இதனுல் ஞானமே முத்திப் பேற்றுக்கு ஆதாரம் என்பது கருத்தாம். பரசிவனைக் காட்டும் நன்மார்க்கமே ஞானம் எனப்படுவதாம். இத்தகைய ஞானமானது, சிவத்தின் தடத்த இலக் கணத்தை முன்னர் விளக்கிக்காட்டிப் பின்னர்ச் சொரூப இலக்கணத்தை விளக்கும் பெற்றியதாம். எனவே, முருகன், பரமுத்திக்கான ஞானசாதனத்தை வழிபடுவார்க்கு நல்குபவன் ஆதலின் ஞானமதலை என்ருர் ஆசிரியர் எனலும் தகும்.

**அளவில் பல கலை அங்கம் ஆரணங்கள் உணர்ந்த அகத்தியனுக்கு ஓத்து உரைக்கும் அண்ணல் :**

முன்னர் ஞானமதலே என்றதற்கேற்ப, முருகப் பிரான் ஞானமுணர்த்திய வரலாற்றினை இவ்வரிகளில் ஆசிரியர் எடுத்துரைக்கின்றாராவர். முருகப்பிரான், வேதவேதாந்தங்கட்கும், சித்தாந்தத்துக்கும், கலைகள் பலவற்றிற்கும் பரமாசாரியன் ஆவன். இப்பெருமானை ஜகத்குரு, லோககுரு, சிவகுரு என்றெல்லாம் அழைப் பதுண்டு. இவர், அகத்தியர்க்கும், நந்திதேவர்க்கும், இராமனுக்கும், வாமதேவ முனிவருக்கும், நாரதருக் கும், பராசரபுத்திரர் அறுவருக்கும் பிரமவித்யா மரபு களை விளக்கியருளியவராவர். சிவனுக்குப் பிரணவப் பொருளை விளக்கிக் காட்டியவர்.

கலைகள் அறுபத்து நான்கென்பர். ஒவ்வொன்றி லும் பிரிவுகள் பல உள. வேதம் கற்பதற்கு அங்கங்கள் ஆரும். இந்த ஆறங்கங்களையும் நன்கு கற்றுத்தெளிந் தால்தான் வேதார்த்தம் இன்னது என ஐயமற விளங்கும். வேதங்கள் நான்காம். இவையும் கல்பந் தோறும் ஏற்றவாறு அமையப்பெறும் என்பர். இவ் வளவையும் நன்கு கற்றுத் தேர்ந்தவர் அகத்தியமுனி வர்; என்றாலும் அவற்றையெல்லாம் ஒருமைப்படுத்தி உண்மைச்சித்தாந்தம் இன்னதுதான் எனத்தெரிவது அகத்தியருக்கு அரிதாய்க்கிடந்தது. சிவபிரானருளின் பேரில் முருகப்பிரானால் முனிவர், முப்பொருளுண்மை யும் முடிபும் தெரியலானார். அன்றியும், தெய்வத்தமி ழினை அகத்தியனறியச் சொன்னவரும் முருகனே என்பர். உருத்திரசன்மனாராகவந்து இலக்கணமயக்கம் தீர்த்தருளிய வரலாறுமுண்டு. ஔவையாருக்குத் தமிழ் நுட்பம் விளக்கிய கதையுமுண்டு, இங்ஙனமெல்லாம் தமிழ்தந்த பெருமையும் முருகற்குளது. நிறைந்த ஞானத்துள் அகப்படாதமொழி, உலகில் எதுவும்

இல்லை. "பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே"; "நூலறிபுலவ"; "ஆறறிபுலவ" என்றெல்லாம் முருகப் பிரான் தமிழில் சிறப்பிக்கப்பட்டுள்ளார் ஆவர். இவை யெல்லாம் தோன்ற ஆசிரியர், அண்ணல் என்றார். இதனால், அபர பரஞான உபதேசங்களை நாம் முருகனருளால் பெறக்கூடும் என்பது புலப்படுத்தப்பட்டது.

**உளம் மருவு விறல் எண்ணு சூரன் உரம், எமது இடும்பை, ஓங்கல் (இவை) ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ் வேல் உகந்த......கந்தன் :**

ஞான உபதேசம் செய்தலில் வல்லவன் முருகன் என இதன்முன் கூறிய ஆசிரியர், இனி அந்த ஞான உபதேசத்தின் பயன்களாக ஒரு சில உதாகரித்துக் கூறுகின்றாராயினர். நம்மைப் பிறப்புட் படுத்தும் குற்றங்கள் மூன்றும். அவற்றுள் மிகவும் கொடியது ஆணவம் எனப்படும். அதனை அடுத்தவை கன்மமும் மாயையும் ஆம். இவற்றுள் ஆணவம் அறிவையே கெடுத்துத் துன்புறுத்துகிறது. கன்மம் என்பது, செயற்குரிய உடம்பைத் தீத்தொழில் நல்தொழில்களைப் புரியச்செய்து அவத்தைப்படுத்தும் இயல்புடையது. இனி, மாயை என்பது மனத்தை மயக்கிக் கெடுக்கும் வல்லமை வாய்ந்ததாகும். பின்னிரண்டும், முன்னதன் வன்மைக்கு இணங்கியே நம்மைக் கெடுக்கின்றன. ஆதலால், ஆணவத்தை முதலில் வலியடங்கச் செய்வதுதான் ஞான உபதேசத்தின் பயனாகும். ஆணவம் உள்ளவரையில், பிறருடைய பெருமைகளை மதிக்க விடாது. தற்புகழ்ச்சிக்கே இடஞ்செய்யும். இப்படித் தான், முருகப்பிரானையும், அவருடைய பெருமையையும் சூரன் ஒரு சிறிதும் மதியானாயினன். அவன்

ஆணவத்தின் உருவம் போன்றவனுதலால் அங்ஙனம், உணர்த்தியும் உணரப்பெருதவனுயினுன். இதனை **விறல் எண்ணு** என்ற தொடரும், **உளம் மருவு** என்ற தொடரும் குறிக்கின்றனவாகும்.

பாசமும் நித்தியப்பொருளே ஆதலால், அதனை அழித்துவிடுதல் இயலாது. அதனை வலியடங்கச் செய்தலே வேண்டுவதாகும். மலம் முழுதும் பரிபாகப் பட்டுவிட்டால், அது வலிகுன்றி, அங்ஙனம் பக்குவப் படாதவரிடம் இருந்து தன் தொழிலைச் செய்து கொண்டேதான் இருக்கும். பக்குவப் பட்டவரிடம் வலிகுன்றி, அவரது இன்பத்துய்ப்புக்கு உபகாரப்பட்டு நிற்கும். 'முத்தியிலும் முப்பொருள் உண்டு' என்பதன் கருத்து இங்கு ஒப்புநோக்கினுல் இவ்வுண்மை விளங்கும். எனவே, சூரன் ஆணவமெல்லாம் அடங்கப்பெற்றவனுனுன், ஆனுல் செத்தொழிந்தானல்லன். முருகற்கு ஊர்தியாயினுன். இங்ஙனம், சூரனை, முருகன் கையில் உள்ள ஞானவேல் அவன் மார்பைப்பிளந்து மாற்றியது. இதனுல், ஞானசத்திமுன் மலசத்தி வலிகுன்றிப் போம் என்பது நம்மால் தெரியப்படவேண்டும். இதனையே, விறல் எண்ணு உளம் மருவு **சூரன் உரம் ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த** என்ற இடம் உணர்த்தும் தகையதாம். **ஒளி** என்ற சொல் ஞானத்தை உணர்த்துவதாம், சூரனைத் திருத்தி நல்வழியில் செலுத்தி ஆட்கொள்ளவேண்டும் என்ற விருப்பத்தால் முருகன் சத்திவேலை எறிந்தானேயல்லது பகைத்துச் சினந்து அழித்தொழிக்கும் பொருட்டாக ஏவினுனல்லன். இதனை **உகந்த** என்ற சொல் உணர்த்தும். எனவே, ஞானஉபதேசம் புரியும் முதல் உதவியாதெனில், ஆணவத்தைச் சாதுவாக்குதலே ஆம்.

ஆணவம் பக்குவப்படுவதற்காகவே, கன்மமும் மாயையும் உள்ளன. ஆணவம் பக்குவமாகிவிட்டால் அவைகளும் ஞானதீட்சையால் மாய்ந்துபோம். நம்முடைய பிறப்பு கன்மத்தாலானது. இறைவனுக்குச் சங்கற்பங்காரணமாக அருளினுல் அமைவது பிறப்பு. இந்த நம் கன்மமும் ஞானத்தால் ஒழிக்கப்படுவதாகும். அப்போது அது வறுத்த வித்துப்போலாகிப் பிறப்புக்களைத் தொடர்ந்து தரும் ஆற்றலற்றுப்போம். இதனுல் பிறவித்துயரம் நீங்கும். இவ்விஷயத்தை ஆசிரியர் நமக்கு நன்கு உணர்த்தும்பொருட்டுத் தம் மீது சார்த்தி **எமது இடும்பை கூறுபட ... ... உகந்த** எனலானுர். இதுகொண்டு கன்மக்கழிவு காட்டப் பட்டமை தெரியலாம்.

இனி எஞ்சிநிற்பது மாயை என்கிற மலம் ஆகும். கிரவுஞ்சம் என்பது ஒரு மலை. இது தாரகன் இருப்பிடம். தன்னுட்பட்டோரை மயக்கித் துன்புறுத்தும் இயல்பு இம்மலைக்குண்டு. முருகனுடைய சேனுபதியாம் வீரவாகு தேவராதியோரும் இம்மலையுட்பட்டு மயக்கமெய்தினர். ஆகவே, முருகப்பிரான் தன் ஞான வேலினை எறிந்து அந்தக் குருகு பெயரிய மலையைத் துளைத்துப் பிளந்திட்டான். யாவரும் மயக்கம்நீங்கி முருகனடி மேவப்பெற்றனர். இந்த வரலாற்ருல் ஞானத்தின்முன் மயக்கமும் நில்லாதொழியும் என்பது பெறப்படும். கயிற்றரவுப் பிராந்தி விளக்கொளி முன் நில்லாது போதல்போலவே மாயைக்கேடு நிகழ்வதாகும். இதனை, **ஓங்கல் ஒன்றிரண்டு கூறுபட ஒளி திகழ் வேல் உகந்த** என்று ஆசிரியர் கூறிக்காட்டியுள்ளார். உபயோகிக்க உபயோகிக்க வாளாயுதம் பளபளப்புடன் ஒளிரும். " இவ்வே பீலி அணிந்து "

என்னும் புறப்பாட்டு இங்குக் கருதிப்பார்த்தல் பயன் தரும். அவ்வாறே, ஆணவமாதியவற்றைப் போக்கப் போக்க - அங்ஙனம் போக்கப்பெற்ற நமக்கு - ஞானத்தின் (பதி ஞானத்தின்) பெருமையும் அருமையும் நன்கு புலப்படும். இதன் உண்மையினையே திகழ் என்ற சொல் தெரிவிப்பதாகும் என்னலாம். இது காறும், ஞானப்பேற்றின் ஒரு கூற்றுப்பயன் உணர்த்தப்பட்டது. அதாவது, பாசநீக்கம் கூறப்பட்டதாயிற்றும். இனி, அப்பேற்றின் பிறிதொரு கூற்றுப் பயன் கூறலுறுகின்றார் ஆசிரியர்.

**களபம் மலி குறமகள் தன் மணிமுலைகள் கலந்த கந்தன் :**

மேற்கூறப்பட்டபடி ஞானப்பிராப்தியின் முடிந்த பயன் சிவப்பேறு ஆகும். பக்குவமுற்ற ஆன்மா, எக்குலத்தது ஆயினும், எவ்விடத்தது ஆயினும் இறைவன், குலநலம் ஒன்றும் பாராமல் வலியவந்து ஆட்கொள்ளுவன். மாணிக்கவாசக சுவாமிகளைக் குருந்த நிழற்கீழ் ஆட்கொண்டருளினன் பரமன். சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட செய்தி யாவரும் அறிவர். இதனால் நாம், இறைபணி நிற்குமளவுக்கான பக்குவமுற்றால் அதுவே அமையும் என அறியலாம். வள்ளியினது பழம்பிறப்பின் நோன்பினைப் புராண வாயிலாக அறிவோம். இஃது அவள் பண்டுதொட்டே பக்குவ நெறிப்பட்ட பான்மையினைக்காட்டும். நோன்புடைச் சீவன் பிறப்பு மாற்றமடைவதனால் பக்குவம் விசேடிக்கும். தேய்க்கத் தேய்க்கச் சந்தனம் மணம் மிகும். சுடச்சுடப் பொன் ஒளிரும். இப்படிப் பக்குவமுற்றது வள்ளியம்மையாரின் பிறப்பு. இதனையே களபம்

**மலி குறமகள்** என்ற தொடர் குறிப்பதாகும். **மலி** என்பது பக்குவமுதிர்ச்சிக்கான - தீவிரதரத்துக்கான - அறிகுறிகாட்டும் சொல்லாம். எனவே, வள்ளியம்மையாரை, முருகன் வலியவந்து ஆட்கொள்ளுகின்றுனவன். இறைவனுல் இங்ஙனம் ஆட்கொள்ளப்பட்ட சீவன் பேரின்பத்துள் அழுந்தும்; சிவவியாபகத்துள் கலக்கும். இதனை **மணி முலைகள் கலந்த** என்ற தொடர் குறிக்கும். **முலைகள்** என்பது இன்பக் குறிப்புணர்த்தும் சொல்லாம். "முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்றற்று" என்ற இடத்தே இந்தக் குறிப்பிருத்தல் கருதப்படும்.

கலந்த என்பது சுத்த அத்துவிதம் என்னும்கலப்பு உணர்த்துவதாம். இனிக் கந்தன் என்னும் சொல்லும் சேர்க்கைக் குறிப்புணர்த்தும் பெயராதல் காணலாம். தோள்களை உடையவன் என்றேனும், ஒன்றுசேர்க்கப் பட்டவன் என்றேனும் கந்தன் என்னும் சொல்லுக்குப் பெரியோர்கள் பொருள் கூறுவர். இதனுல் உயிரடையும் பேரின்பபோகம் கூறப்பட்டது. முருகனே சிவப்பிரகாசன், அந்தச்சிவ ஒளியால் வருவது முற்றின்பாம் என நூற்போக்குக் கியைய இவ்வாறு வாழ்த்து அமைத்துள்ளார் ஆசிரியர்.

**மலர் அடி இணைகள் சிந்தை செய்வாம் :**

நாமும் சிவப்பிரகாசம் பெறுதற்குபாயம் இன்னதென இதனுல் கூறப்படுகின்றது. சதாகாலமும் முருகனுடைய தாமரைபோன்ற திருவடிகளை உள்ளத்தே தியானித்தல்வேண்டுமென்பது இதனுல் பெறப்படும். சிந்தை என்னென்னவோ பொருள்களை எண்ணுகிறது; ஆசைப்படுகிறது; அவலிக்கிறது; பாவித்துச்

சுமக்கிறது. அதற்குப் பதிலாக இவ்விணையடிகளை எண்ணினால் பெருநலம் உண்டு என்கிறார் ஆசிரியர். "நின்குணம் எதிர்கொண்டோர் சேர்வர்; ஆதலின், யாஅம் இரப்பவை-பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால் - அருளும் அன்பும் அறனும் மூன்றும்- உருள் இணர்க் கடம்பின் ஒலிதாரோயே'' என இன்பக் குறிப்புக்கான தார் கூறிப் பரிபாடலின் ஆசிரியர் கூறிச்செல்வதையும் நாம் இங்குச் சிந்தை செய்தல் தக்கதாம்.

## 5. சந்தானகுரவர் திருவடி அடைவு

### (மெய்கண்டசந்ததி)

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
நிருநந்தி, அவர்கணத்தோர் செல்வர், பாரில்
பாவியசத் தியஞான தரிசனிகள், அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள், பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார், மாறு
விரவுபுகழ் அருணந்தி, விறலார் செல்வத்
நாவில்அருள் மறைஞான சம்பந்தர், இவர்இச்
சந்தானத்(து) எமைஆளும் தன்மை யோரே.

### பொழிப்புரை

சீகண்டபரமேசுரன் அமர்ந்தருளாநின்ற கயிலை மலைக் காவல் பூண்ட சிறப்பினை உடைய நந்தி பெருமான், அவருடைய கூட்டத்து ஒரு செல்வரான சனற்குமாரமுனிவர், இவ்வுலகத்தினிடத்திலே உண்மைப்புகழ் விரிந்த சத்தியஞான தரிசனிகள், அவருடைய திருவடியைச் சேர்ந்த பரஞ்சோதிமுனிவர், தமக்கு எப்பதியும் பதியாயினும் திருவெண்ணெய்

*நல்லூரே பதியாகப் பொருந்தின சிறப்பினை உடைய மெய்கண்டதேவர் என்னும் ஞானவீரர், ஒழியாத புகழ் பொருந்திய அருணந்திதேவர், ஞானவீரம் நிறைந்த செல்வத்தோடு கெடாத திருவருளையுடைய மறைஞானசம்பந்தர் ஆகிய இவ்வெழு குரவரும் இந் தச் சந்தானத்திலே எமையாளும் இயல்புடையார்.*

**விளக்கவுரை**

இவ்வுலகில் எல்லாஉயிர்களும் இறைவன் கருணை யால், உடம்பெடுத்தும், வாழ்ந்தும், ஞானப்பேறெய்தி யும், வீடுபேறு அடைந்துவருகின்றன. இந்த விதமாக ஒவ்வொரு படைப்புக்காலம் தொடங்கிச் சங்கார மளவும் நடைபெறுகின்றது. அறிவு, ஆணவத்தால் மறைப்புண்டிருக்கும் சீவர்கள், படிப்படியாக அறிவு விளக்கம் அடைந்து மெய்ஞ்ஞானம் பெற்று முத்திப் பேறு எய்துவதற்கு இதுவே மார்க்கமன்றி வேறில்லை. உயிர்வருக்கம் கும்பலாக ஒருபோது தோன்றி ஒரு போதில் மறைவன அல்ல. அவற்றின் எண்ணற்ற அறிவுத்தரங்கட்கேற்பத் தோன்றிக் கொண்டே இருக் கின்றன. உயிர்களின் தொகை வரம்பில்லாதது. இப்படி உயிர்கள் வற்றுத சந்தானமாக வந்து கொண்டே இருப்பதனால், இவைகளை அவைகளின் அறிவுத்தரம், கன்மத்திறம், மனமயக்கம் ஆகிய வற்றிற்கு ஏற்ப ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருந்து பேரறிவுப்பொருளாகிய இறைவன், நிலை நிறுத்தியும் செலுத்தியும் அறிவூட்டியும் வரவேண்டிய வனாகிறான். இங்ஙனம் இறைவன் இயற்றுவதற்கான ஏற்பாடே குருபரம்பரைச் சம்பிரதாயம் எனப்படும்.

சில சீவர்கள் விஷயத்தில் சில காலங்களில் சில இடங்களில் சிவபரம் பொருள் சிறப்பான திருவிளை

யாடல்களை நிகழ்த்தினாலும், பொதுவாக உபதேசம், தீட்சை முறைகளாலேயே யாவரையும் ஆட்கொண்டருளுகின்றது. குடும்பத்தின் ஆதித் தலைவனின் உடைமை, அக் குடும்பத்தவர்கட்குப் பரம்பரை உரிமையால் பாத்தியதைப்பட்டு உபயோகத்துக்கு வருவதுபோலவே, பதிஞானம் எனப்படும் ஒப்புயர்வற்ற செல்வமானது, இறைவனிடமிருந்து தீட்சை உபதேசமுறையினால் ஆன்மவர்க்கங்கட்குக் குருபரம்பரையால் வழிவழி வந்துகொண்டே இருக்கின்றது. இறைவனுடைய சிறப்பதிட்டானத்துக்கு உரிமை பூண்டுள்ள இந்த ஞானகுரு பரம்பரை நிலவுலகில் என்றும் நிலவி உதவும்பொருட்டே ஞானபீடங்கள் ஆங்காங்கு உள்ளன. எல்லாவகையாலும் கடமைப்பட்டுள்ள சீடர்களாகிய சீவவருக்கம், இத்தகைய ஞானபீடங்கள் சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்து வருமாறு செய்யும் பொறுப்பை ஏற்றுள்ளது. தம்முடைய கண்களைத் தாமே குத்திக் குருடாக்கிக் கொண்டு வழிநடக்க எவரும் முயலமாட்டார்கள். படலத்தை நீக்கிப் பார்வையைப் பெருக்கிப் படர்ந்து பயன்பெறவே யாவரும் முயல்வர். இதுவே நியாயமும் ஆகும். இந்த வகையில் நம்மையெல்லாம் ஆட்கொண்டருளும்வண்ணம் நிலவுகின்ற திருக்கயிலாய பரம்பரையின் சந்தான விசேடத்தினைத் தம் நாளளவும் இந்தநூலாசிரியர் இப்பாடலில் சொல்லித்துதிக்கின்றார். இவர் கூறிப்போகும் பரம்பரை முறைமையை இனிப் பார்ப்போமாக.

**தேவர்பிரான் வளர் கயிலை :**

முழுமுதற்பொருள் சங்காரகாரணனாகிய சிவன் ஒருவனே ஆவன். ஏனெனில் ஏனைத் தேவர்கள்

யாவரும் பிறப்பு இறப்புட்படுபவரே ஆவர். யாவும் ஒடுங்கிய இடமே அவைகளின் தோற்றத்துக்கும் இடமாம். இந்த முறையில் சங்கார கருத்தாவின்பால் யாவும் ஒடுங்குவதனால், அவனிடமிருந்தே யாவும் உதிக்கின்றன ஆகும். இவனது ஆணைப்படியே எல்லாத் தேவரும் இயங்குவர். வேதநான்முகன் மால் புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலாராவர். இவர்கள் யாவரும், தங்கள் பிரான் என்று தன்னை யார்க்கும் அறிவரியானாகிய பரமனையே போற்றி நலம்பெறுமியல்பினராவர். இதனை, ''முன்னையொப்பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்'', ''ஆதியுமாய் அரனாய்'' என்னும் திருமந்திரப்பாடல்கள் கொண்டும் தெரியலாகும். ''பூமன்னு நான்முகத்தோன்'' எனத் தொடங்கும் போற்றிப் பஃறொடைநூலின் முதல் ஆறுவரிகள் ஓதிப்பார்த்தலும் இக்கருத்துக்குறுதிபயக்கும். இந்தஉண்மையை நமக்குணர்த்தி அப்பெருமானையே நாமும் உறுதியாகப் பற்றிக்கொள்ளச் செய்தல் வேண்டியே ஆசிரியர், தேவர்பிரான் எனக்கூறியுள்ளார். நம்மினும் தேவர்கள் விசேடமுடையவராவர். அவர்கட்கே சிவன் பிரானாவன் என்பதனால் நமக்கும் அவனே பிரான் என்பது சொல்லாமலே விளங்கும்.

இப்பெருமான், உயிர்களை நலமுறச் செய்யும் பொருட்டுச் சிவதத்துவம் - வித்தியாதத்துவம் - ஆன்மதத்துவங்களை உளவாக்கிப் பிரேரித்தலாதி காரியங்களை நிகழ்த்துகின்றான். சுத்தமாயை சிவதத்துவ நிலனாம். அசுத்தமாயை வித்தியாதத்துவ நிலமாம். அம்மாயையின் காரியமாவதே பிரகிருதிமாயை எனப்படும். இந்தப் பிருகிருதிமாயாபுவனமே நம் இருப்பிடமாக உள்ளது. இப் போக்கியகாண்டம் அஞ்ஞானச்செயல் விளைப்பது

ஆகும். ஆதலால், இதனில் வாழுமுயிர்களை ஞான நெறிப்படுத்தற்கு ஒரு கருத்தாவாகச் சிவன் இருந் தருளுகின்றான். சுத்தமாயைக்குச் சிவன் எனவும், அசுத்தமாயைக்கு அனந்ததேவர் எனவும் கருத்தாவாகி நடத்தும் அப்பரமனே பிரகிருதிமாயைக்கு ஸ்ரீகண்ட தேவராகி விளங்குகின்றார். இந்த முறையிலிருந்தருளும் இவரது இருப்பிடமாகக் கூறப்படுவது ஸ்ரீகயிலாயம். இது, தன்னை யார்க்கும் அறிவரியான் - மன்னிவாழ்ந் திருக்கப்பெறுவது. இது பன்னு நீள் பனிமால் வரைப்பாலது என்பர். இஃது என்றும் அழியாத் திருமாமலையாதலின், ஆசிரியர் வளர் கயிலை எனக் குறித்துள்ளாராவர்.

கயிலைக் காவல்பூண்ட திருநந்தி :

மேலே கூறப்பட்ட கயிலைமலையிலே ஸ்ரீகண்ட சிவம் எழுந்தருளியுள்ளார். இவருடைய திருவரு ளாலேயே நாம் யாவரும் ஈடேறவேண்டும். பூர்வம் சிலாதர் என்பார் ஒரு முனிவரர் இருந்தார். இவர், இயம கிங்கரர் கொடுமைக்கு ஆளாகாதபடி தாம் ஒரு பெரும் பாறையை அரைத்துக் கரைத்துக்குடித்த சிவ யோகியராதலின் சிலாதர் என்னும் பெயரடைந்தவர். இவர், சிவபெருமானை வேண்டிப் பெற்ற புதல்வர் செப்பேச்சுரன் எனப்படுபவர் ஆவர். தமக்குச் சிவ பிரான் விதித்தருளிய எண்ணிரண்டாண்டு அடைத லும், அப்பெருமானைக் குறித்து அருந்தவம் ஆற்றினர் செப்பேச்சுரர். சிவபெருமான் வெளிப்பட்டுச் செப் பேச்சுரருக்கு ஞானதீக்கை புரிந்து, நந்தி என்னும் திருநாமம் சாத்தி, ஞானபிடேகம் செய்தருளிச் சாருப் பியம் அளித்துச் சிவகணங்கட்கெல்லாம் தலைவரா யிருக்கும் அதிகாரம் வழங்கித் திருக்கயிலைக் காவல்

திருத்தொண்டு புரிந்து வருமாறு ஆக்ஞாபித்துச் சுரிகையும் பிரம்படும் தந்து திருமுடியும் சூட்டியருளி ஞர். ஸ்ரீகண்டபெருமான் வேத சிவாகமங்களை உப தேசித்தருளினர்; அபரசிவன் என்ற சிறப்பு அபிதான மும் கொடுத்தருளினர். இத்தகைய சிறப்புடையவர் ஸ்ரீ நந்திதேவர். இவர்க்குச் சீகண்ட முதல்வர் சர்வா கம ஒருமைப்பாடுடையதான ஞானபாதப்பொருளை ஒருசமயம் உபதேசித்தருளினர். அதுவே சிவஞான போதம் ஆகும். இது, வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத்தின் உண்மையை உணர்த்துவது ஆகும். எனவே, நம்மனோர்க்கெல்லாம் மெய்ப்பொருள் உணர்த்தவல்ல ஞானபோத உபதேசத்தை முதற்கண் ஸ்ரீகண்டதேவரால் அநுக்கிரகிக்கப்பட்ட பெருஞ் சிறப்பினர் நந்தியெம்பெருமான். ஆதலால் இவர், நம் குருமரபிற்கெல்லாம் முதற்குருநாதன் ஆவர். இவர், அங்கணன் கயிலைகாக்கும் அகம்படித் தொழின்மை யுடையவர். இவரது சீரடிக் கமலத்தைப் போற்றுதல் நம் முதற்கடனும். ஆனதுபற்றி, ஆசிரியர், **கயிலைக் காவல்பூண்ட** திருநந்தி எனக்கூறிப் போற்றியுள்ளார். ''கரநான்கும்'' என்னும் சிவநெறிப்பிரகாசப் பாடல் இங்குப் பார்த்தல் நன்றும். நாமும் இங்கு ஆதிதேவ ஞர் கோயில் நாயகனுராகிய திருநந்திதேவர் பொற்றாள் சிந்தையினும் சிரத்தினும் சேர்த்திடுவோமாக! திரு என்னும் அடைமொழியில் எல்லாச் சிறப்பினையும் ஆசிரியர் அடக்கியுள்ளாராவர் என்க!

**அவர்கணத்து ஓர் செல்வர் :**

வேதாந்தத் தெளிவான சைவசித்தாந்த உண்மை யினைத் திருக்கயிலாயத்திலே சீகண்ட பரமேசுரன்

திருவருளால் பெற்ற திருநந்திதேவர் பெருஞ்சிறப்பினை முனிவர்கள் பலர் கேள்வியுற்றனர். அவரிடம் சென்று ஞானோபதேசம் பெற விரும்பினர். இங்ஙனம் விரும்பி அபரசிவனாரை அடையப்பெற்ற முனிவர்கள் அகத்தியர், புலத்தியர், சனகர், சனற்குமாரர், சிவயோகர், வியாக்கிரமர், பதஞ்சலியார், திருமூலர் ஆகிய எண்மர் என்பர். இந்தச் செய்தியையே, ''நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின் - நந்திகள் நால்வர், சிவயோக மாமுனி - மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர் - என்றிவர் என்னோடு எண்மரும் ஆமே'' என்னும் திருமந்திரப்பாடல் கூறுகின்றதென்பர். மேற்கூறப்பட்ட எண்மருள் ஒருவரே சனற்குமார மாமுனிவர் ஆவர். இவர் அருந்தவப்பயனே வடிவங்கொண்டாற் போன்றவர். சைவசித்தாந்த ஞானபாஸ்கரர். இவர் வெள்ளியங்கிரியிலேயேவீற்றிருந்து நிட்டையிலிருந்துகொண்டு தம்பால் வந்தடையும் பக்குவச் சீடர்கட்குச் சிவதீக்கை புரிந்து நந்தியெம்பெருமானாகிய தமது ஞானாசாரியர் தமக்கு உபதேசித்தருளிய முறையிலே தாமும் ஞானோபதேசம் செய்துவருவாராயினர். இவரையே, **அவர் கணத்து ஓர் செல்வர்** என்று போற்றியுள்ளார் ஸ்ரீ உமாபதியார். **கணம்** என்பது மேற்கூறப்பட்ட எண்மரைக் குறிப்பது ஆகும். சிவஞானச் செல்வத்தினும் சிறந்த செல்வம் வேறு எதுவுமில்லை. ''பொருட் செல்வம் பூரியார்கண்ணும் உள''வாகும். ஆதலால், **ஓர் செல்வர்** என்றார் ஆசிரியர்.

**பாரில் பாவிய சத்தியஞானதரிசனிகள் :**

மேற்கூறப்பட்ட சனற்குமார முனிவரிடம் உபதேசம்பெற்ற சிறப்புடையவர் சத்தியஞானதரிசனிகள்

என்னும் முனிவர் ஆவர். இவருடைய பரிபாக நீர்மையை அறிந்தே சனற்குமாரதேவர், உண்மை ஞானத்தினை நன்குணர்ந்திருந்த பெற்றியை உடைய வராகிய இம்முனிவர்க்கு இப்பெயரைத் தீக்ஷாநாம மாகச் சாத்தியருளினர். இவர் பூண்ட இப்பெயரே, பிறகு பாரிலுள்ள நம்மையெல்லாம் ஆட்கொள்ள எழுந்தருளிய மெய்கண்டார் பெயராயிற்று. எனவே, சத்தியஞான தரிசனிகள் என்னும் பெயர், என்றும் பாரிடை நின்று நிலவும் சிறப்புற்றமை கருதி நம் ஆசிரியர் பாரில் பாவிய என்றுள்ளார். ஆகவே, வெள்ளியங்கிரியில் இருந்துகொண்டு இக்குரவர்பிரான், தம் சீடராம் பரஞ்சோதியாருக்குத் தந்தருளிய ஞான உபதேசமே, பின்னர்ச் சிவஞானபோதம் எனப்படும் சித்தாந்தசாத்திரம் ஆயிற்றென்னலாம்.

**அடிசேர் பரஞ்சோதி மாமுனிகள் :**

திருக்கயிலாயத்திலே சித்தாந்த ஞானபானுவாய் எழுந்தருளியுள்ள சனற்குமார முனிவர்பால் அருளுப தேசம் பெற்றமாத்திரத்தே முற்றறிவு உடையராகி விளங்கிய சத்தியஞானதரிசனிகள், தம்மிடம் போந்த மாணவர்கட்குத் தமதாசிரியர் திருவருளாணையின்படி தீக்கை புரிந்து சித்தாந்த ஞானோபதேசம் செய்து வெள்ளியங்கிரியில் வீற்றிருந்தருளினர். அப்போது ஒருநாள் பரஞ்சோதிமுனிவர் என்னும் திருப்பெய ருடையவர் ஒருவர், சிவபிரான் திருவருள் செலுத்த உள்ளத்தில் வீடுபெற்றுய்தற்கான பெருவிருப்புடைய வராகிச் சத்தியஞான தரிசனிகள் இடம் சார்ந்து திருவடிகளில் வீழ்ந்து பணிந்து நின்றனர். அப்போது, ஞானதேசிகர், முனிவருடைய பக்குவ மிகுதியை

ஆய்ந்து அவருக்குச் சிவதீக்கைசெய்து,ஞானபிடேகம் புரிந்து சிவஞானபோதம் என்னும் பன்னிருசூத்திரங் களையும் முறையாக உபதேசித்தருளினர். பரஞ்சோதி முனிவர், தமது ஞானதேசிகர் ஆணைப்படி அநேக சீடர்களுக்கு அருளுபதேசம் செய்துகொண்டு அங்கு விற்றிருந்தருளுவாராயினர். இவர், சிவனருளால் சத்தியஞான தரிசனிகளை அடையப்பெற்ற செய்தியை **அடிசேர்** என்னும் தொடரால் ஆசிரியர் குறித்துள்ளார்.

இதுவரை கூறப்பட்டு வந்த இந்நால்வரும் திருக் கயிலையடி சேர்ந்து ஆங்கே பரம்பரையாக வதிந்து வருவாராயினர். ஆதலால், இந்நால்வரையும் **அகச் சந்தான குரவர்கள்** என்பர். இப்பரஞ்சோதியாரை மூலமாகக்கொண்டு புறச்சந்தான பரம்பரை தொடங்க லானது. இந்தஞானதேசிகர் திருவருளாலேதான் நம் மெய்கண்டசந்தானம் மேவலுறும் பேறு பெற்றது. இவ்வெல்லாம் கருதியே **அடிசேர்** என்னும் அடை மொழி தரப்பட்டுள்ளது என்னலாம். "மருட்சியறு பரஞ்சோதி அருஞ்சீல குருபரன் கால் மலர்கள் போற்றி" என்பது குருபரம்பரை விளக்கம்.

**பதியாம் வெண்ணெய் மேவிய சீர் மெய்கண்ட திறலார் :**

மேலே அகச்சந்தான குரவர்கள் வரலாறு கூறப் பட்டது. இனிப் புறச்சந்தான குரவர்கள் வரலாறு கூறப்படுகின்றது. புறச்சந்தான குரவர்களுள்ளே முதன்மையுடையவர் மெய்கண்டதேவ நாயனாராவர். இவரது வரலாற்றினை இவ்வாதீனத்து 79 ஆவது வெளியீடுகொண்டு உணரலாகும். இவர் சிவபிரான்

திருவருளினுலே அவதரித்தவர் என்பது இவரது வரலாற்ருல் அறியப்படும். இவருக்கு இரண்டாம் ஆண்டு நிறைவுறும்போதே இவர், பரம்பொருளை உள்ளவாறுணரும் மெய்யுணர்வு நிறைந்து ஞான பானுவாய் விளங்கினுர். அங்ஙனமிருக்கும் நாளிலே, மேலே கூறப்பட்ட பரஞ்சோதி முனிவர் என்கிற ஞானதேசிகர், திருக்கயிலையிலிருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துத் தென்ருடுநோக்கி அகத்திய முனிவரைக் காணும்பொருட்டு வருவாராயினர். வரும் வழியில், திருவெண்ணெய்நல்லூரை அடைந்தார். அங்கே சுவேதவனப்பெருமான் என்னும் பிள்ளைப் பெயருடைய மெய்கண்டதேவநாயனுரைக் கண்டார். அவரது பரிபாக நிலையை ஓர்ந்தார். சிவதீக்கை புரிந்தார். ஞானுபிடேகம் செய்தார். சிவஞானபோதம் என்னும் பன்னிருசூத்திரங்களையும் தாம்கேட்ட முறையிலே உபதேசித்தார். வடமொழியிலுள்ள அச்சூத்திரங்களை ஈண்டுள்ளோர் உணரும்பொருட்டுத் தென்மொழியில் மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்குமாறு கட்டளை தந்தார். தமது ஞானுசாரியருடைய சத்தியஞானதரிசனிகள் என்னும் திருப்பெயருக்கிணங்கத் தமிழிலே மெய்கண்டார் எனத் திருநாமம் சிறப்பித்தார். இவ்வுலகிலே சுத்த அத்துவித சைவசித்தாந்த சற்குரு சந்தானம் விளங்குமாறு பரிபக்குவர்கட்கு ஞானேபதேசம் செய்துவருமாறு திருவருளாணை பிறப்பித்தார். அப்பால், நீங்கிப் பொதிகாசலம் போந்திட்டார். மெய்கண்டதேவர், திருப்பெண்ணுகடத்திலே இருக்கவேண்டியவராயிருந்தும், திருவெண்ணெய்நல்லூரிலே (முன்பு சுந்தரரைத் தேவாரம் பாடச் செய்த தலத்திலே) விரும்பி எழுந்தருளி இருந்தார் ஆவர். ஆதலால், பதியாம் வெண்ணெய் மேவிய சீர்

மெய்கண்ட திறலார் என்ருர் ஆசிரியர். மெய்கண்ட சந்தானம் என் வழங்கப்படுவதற்கான சிறப்பினை இவர் உடைமையின் சீர் எனப்பட்டது.

இவர்காலத்து நம் நாட்டில் இருந்த நாத்திகம் முதலாம் பல்வேறு கொள்கையுடைச் சமயங்களையும் வேதாகம முறைப்படி நியாயமுறைகாட்டி வென்று சித்தாந்தம் செய்தலில் இவர் சிறந்து விளங்கினராதலால் திறலார் என்ருர் ஆசிரியர். எனவே, சிவபிரான் திருவருள்வழியிலே சுத்த அத்துவித சித்தாந்தத்தை நம்மனோர் விளங்க அறியும்வண்ணம் ஸ்தாபிதம் செய்த பெருமை இவருக்குரித்தாம். "யாரும் வெல்லாத சிவஞானபோதம் சொன்ன மெய்கண்டான் சரணம் முடிமீது கொள்வாம்" என்பது குருபரம்பரை விளக்க வாசகம்.

மாரு விரவுபுகழ் அருணந்தி :

இந்த ஞானதேசிகருடைய வரலாற்றையும், ஆதீன வரலாறு - குருபரம்பரை விளக்கம் - முதலிய நூல்களால் அறிதல் ஏற்புடைத்தாம். அருணந்தி தேவநாயனர் ஆதிசைவ மரபினர். சகலாகம பண்டிதர் என்னும் காரணப்பெயருடையவர். மெய்கண்ட ஞான தேசிகருடைய குலாசிரியர். இவருடைய பதி, திருத்துறையூர் ஆகும். நம் மெய்கண்டதேவரால் திருவெண்ணெய்நல்லூரில் இவர், ஆணவமல சொருபம் உணர்த்தப்பெற்று ஆட்கொள்ளவும் பெற்ருர். தமது ஞாஞசாரியர் கட்டளைப்படிச் சிவஞானபோத நூலினை நன்ருக மாந்தர்கள் அறிந்து உணரும்பொருட்டாக விரித்தல் யாப்பினுல் சிவஞான சித்தியார் என்னும்

நூலை இவர் இயற்றியுள்ளார். இந்த நூல், வேதாகமங்கட்கும் வடமொழிச் சிவஞானபோத சூத்திரங்கட்கும் தமிழ்ச் சிவஞானபோத நூலுக்கும் சற்றும் மாறுபடாதவண்ணம் இயற்றப்பட்டது. தமது ஞான தேசிகரிடம் மாறா அன்புபூண்டு ஒழுகினார் இவர். இதனை இவர் செய்தருளிய இருபா இருபஃது நூல் தெரிவிக்கும். தாம், மெய்கண்டதேவரின் குலாசிரியராயிருந்தும், சிவாசாரிய மரபினராயிருந்தும் அவற்றையெல்லாம் பற்றிய அபிமானங்களை அறவே மாற்றித் தமது ஞானாசாரியராம் மெய்கண்டதேவர் திருவடிக்கண் மாறா அன்புபூண்டொழுகியவராவர். இந்த இவருடைய புகழ் ஞாலமுழுதும் பரவுவதாயிற்று. மெய்கண்டதேவரின் திருவடிக்கண் இவர் ஆளாகாதிருந்திருப்பரேல், இவரது புகழ் பரவுவதற்கே வழியில்லாது போயிருக்கும். இவர் காட்டிய இம்முறைமை பின்னே யாவர்க்கும் ஒரு திருஷ்டாந்தமாகவும் விளங்கலானது. ஆனதுபற்றியே, ஆசிரியர் மாறா விரவு புகழ் எனலானார். அருணந்தி என்பது தீக்ஷாநாமமாம். "அருணந்திசிவன் இணைத்தாள் போற்றி" என்பது குருபரம்பரை விளக்கம் கூறுவதாகும்.

**விறல் ஆர் செல்வத் தாவில்அருள் மறைஞான சம்பந்தர் :**

மேலே விளம்பப்பட்ட அருணந்தி சிவாசாரியரால் ஆட்கொள்ளப்பட்டவரே மறைஞான சம்பந்தர் ஆவர். இவர் திருமுனைப்பாடி நாட்டினர். மருதூர்ப் பதியினர். மறையவர் குலத்தினர். பராசர கோத்திரத்தர். பரமானந்த சிவம் என்னும் பிள்ளைப் பெயருடையர். இவர், திருப்பெண்ணாகடத்திலே அருணந்தி

சிவாசாரிய சுவாமிகளால் ஆட்கொள்ளப்பட்டனர். "மருதமொடு கடந்தையை ஆள் மறைஞான சம்பந்த குருமணி" எனப் போற்றப் பெற்றவர். சித்தாந்த ஞானச்செல்வம் நிரம்பப் பெற்றவர். குற்றமற்ற திரு வருளுடையவர். இந்த நூலாசிரியரான உமாபதி தேவரைத் தமது தடப்பெருங் கருணையினாலே ஆட் கொண்டருளியவர். இதுகுறித்தே **விறல் ஆர் செல் வத் தாஇில் அருள்** எனச்கூறிச் சிறப்புறுத்துள்ளார் ஆசிரியர். மறைஞான சம்பந்தர் என்பது தீக்ஷாநாம மாகும். வேதாந்த ஞானமுடைய தம்மை ஒரு சொல் லால்வென்று அடிப்படுத்திய திறத்தையே விறல் ஆர் எனக் குறிப்பிக்கின்றார் ஆசிரியர் என்னலாம். அன்றி யும், ஞானவதிமுறையில் இவர் தீக்ஷிக்கப்பெற்றமை இத்தொடரால் கொள்ளப்படலும் கூடும்.

**இவர் இச்சந்தானத்து எமை ஆளும் தன்மை யோரே :**

இவ்வரியினால் நூலாசிரியர் எல்லா ஆசிரியர்களை யும் வழிபடுகின்றாராவர். திருநந்திதேவர் முதலாகத் தமது ஆசாரியராகிய மறைஞானசம்பந்தர் வரையாக முறையாக அமைந்துள்ள இந்தக் குருசந்தானமே தம்மை ஆட்கொண்டருளியது என்கிறார் ஆசிரியர். இவர் என்பது மேலே கூறப்பட்ட எழுவரையும் குறிக்கும் சொல்லாகும். திருக்கயிலாயபரம்பரை யெனக் கூறப்படும் வேறு குருசந்தானங்களும் உள வாதல்பற்றிப்போலும் தமது மெய்கண்ட சந்தானத் தைக் குறிப்பதற்காக **இச்சந்தானத்து** என்றுள்ளார் ஆசிரியர். இப்பரம்பரை பற்றும் யாவரையும் உளப் படுத்துக் கூறும்பொருட்டாக எமை என்றருளினர்.

சிவத்தின் அருட்டிருமேனியே ஆசாரிய மூர்த்திகள் எனப்படுவது. ஆசாரியர் உபதேசமும் தீக்ஷையுமின்றி எவரும் முத்திப்பேறு சித்திக்கப்பெறுர். முத்திப் பேருட்சியே யாவற்றினும் சிறந்தது. ஆதலின் ஆளும் என்ருர். இவ்வாளும்தன்மை, மாளும்தன்மையுள்ள நம்பால் என்றும் மாறுபடுவதில்லையாதலின் தன்மை யோர் என்ருர் என்க. ஆதலால், நாமும் இக்குரு சந்தானத்தே முதல்வர் தொடங்கி நம்மை ஆட்கொள் பவர் அடங்க யாவரையும் எப்போதும் போற்றியே உய்திபெற வேண்டுமென்பது தெளியப்படவேண்டும். அதனைக்குறிப்பதாக இத்தோத்திரம் உள்ளது என்க. அத்தோத்திரம் வருமாறு:- 'பராபர சமாரம்பாம் - சத்தியதர்சனீமத்யமாம் - அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம்- வந்தே குருபரம்பராம்'. இங்ஙனம் போற்றிப்புகுவதே சித்தாந்திகளாவார் மரபாகும்.

## 6. தம்மை இரட்சித்த ஆசாரியரைச் சிறப்பாகத் துதித்தல்

*பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்*
*பராசரமா முனிமரபு பயில ஞானச்*
*சார்புதர வந்தருளி எம்மை ஆண்ட*
*சைவசிகா மணிமருதத் தலைவன் அம்தன்*
*கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதே மதியம்*
*கடவாமல் நெடுங்கொடியின் கரம்தகையும் [கடந்தைச்*
*சீர்நிலவு மறைஞானசம்பந்தன் எந்தை*
*திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம்.*

### பொழிப்புரை

ஆயிரம் சாகை வளர்கின்ற சாமவேதம் பொலிவு பெறவும், பராசரப்பிரம இருடிகோத்திரம் இடை

யருது நிலைபெறவும், எம்போல்வார்க்கு ஞானமாகிய பற்றுக்கோடு தரவும், நில உலகத்தின்கண்ணே திருமேனிகொண்டு விளங்க எழுந்தருளிவந்து, எம்மை அடிமையாகக் கொண்ட சைவசூளாமணி-மருதூர்க்கு இறைவன் - அழகிய குளிர்ந்த மேகம் பொருந்திய சோலை புடைசூழப்பட்ட மதிலின்மேலே சந்திரன் கடவாதபடி நெடுங்கொடிகளாகிய கைகள் தகையும் சிறப்பு விளங்கிய பெண்ணாகடம் என்னும் திருநகரை உடைய மறைஞானசம்பந்தன் என்னும் திருநாமத்தை உடையான் - எம்முடைய அத்தன் - அவனுடைய அழகு வளராநின்ற மலர்போலும் திருவடிகளை யாம் தலைமேற் புனைவாம்.

## விளக்கவுரை

பார் திகழ :

இந்தச் செய்யுளில் இந்த நூலாசிரியர், தமக்கு நேரே குரவரான மறைஞானசம்பந்ததேசிகரைச் சிறப்பாகத் துதிக்கின்றார். இதனால், அவரவரும் தத்தமக்கு நேரே குரவரான ஞானாசாரியர்களைச் சிறப்பு முறையில் போற்றல் மரபு எனத்தெரிதல் தகுதியுடைத்தாம். பயிர்கள் நல்ல பலனைத் தருவதற்காக நிலத்தை நாம் வாங்கிச் செழிப்புறுத்துகிறோம். நிலத்தின் வளமெல்லாம் பயிருக்கே பயனுடையதாகிறது. அதுபோலவே, உயிர்கள் நற்கதி அடைவதன்பொருட்டாகவே இவ்வுலகம் படைக்கப்பட்டுப் பாதுகாக்கவும்படுகிறது. உலகம் விளங்குகிறது என்பது அதனில் வாழும் உயிர்கள் விளக்கமுறுதலையே குறிக்கும். இனி, உயிர்களில் மனிதவர்க்கமே மாண்புடையதாகும். உய்தி அடைவதற்கான தகுதிப்பாடு மனிதப்பிறப்பே

பெற்றுள்ளது. ஆதலால் அப்பிறப்பினை அடைந்துள்ள நாம் உலக வாழ்க்கையைப் பயனுடையதாக்கிக் கொள்ளவேண்டும். அப்படிப் பயனுடையதாக ஆக்கிக்கொள்வதற்கு ஏற்ற வழிவகைகளை நாமே அறிந்து கொள்ளவும் ஏற்படுத்திக்கொள்ளவும் வல்லமையுடையோம் அல்லோம். ஆகையினாலேதான் உலகத்தையும் நம் உபயோகத்துக்காகத் தந்து, வேதங்களையும் நம் அறிவு வளர்ச்சிக்காக அளித்துள்ளார் இறைவர். சகலராகிய நம்மனோர் விளக்கம் கருதியே இவ்வேற்பாடு கடவுளால் அமைக்கப்பட்டுள்ளது. ஆனதுபற்றியே, பார்திகழ வளர் ... வேதம் எனப்பட்டது.

**வளர் சாமவேதம் மல்க :**

திருமறைகள் வடமொழியில் நான்காகும். அவை இருக்குவேதம் முதலன. இவ்வேதங்கள் நான்கும் உயிர்கள் உய்தி குறித்து அறியவேண்டிய முறைப்படி முனிவர்களால் பாகுபடுத்தப்பட்டவை ஆகும். பொதுப்படக்கூறின் வேதங்கள் நான்கும் முறையே இறைவனை உலகாதீதன் எனவும், உலககாரணன் எனவும், உலக அந்தர்யாமி எனவும், உலகரூபி எனவும் கூறும் கருத்துடையனவாகும். வேதாந்தம் யாவற்றையும் ஒன்றுபடுத்திச் சிவமாநெறிகூடும் ஒரு நெறியாக ஓதும். மேற்கூறப்பட்ட வேதங்களுள் சாம வேதம் மூன்றாவதாகும். இது ஆயிரம் சாகைகளைக் கொண்டது. கேனம் முதல் சாபாலம் இறுதியான பதினாறு உபநிடதங்களைக்கொண்டது. இறைப்பொருளைப்பற்றி அறியப்படவேண்டிய யாவும் விரிவாகவும், தெளிவாகவும், தோத்திரமாகவும் இதனில் எடுத்தோதப்பட்டுள்ளன. இதனைச் சிவத்துக்கு உகந்த வேதம்

என்பர். சாமகானப் பிரியன் என்பது சிவனுக்கு ஒரு பெயராகும். 'வேதங்களில் சாமவேதமாக உள்ளேன்' என்பது கீதையுரை. ஆகவே, சாமவேதமானது உயிர்கள் இறைவனுடன் இரண்டறக் கலத்தற்கான வழிகளை விரிவாக இயம்பும் இயல்புடையதாகும் என்னலாம். இவ்வேதத்தினைக் கடைந்து தந்த மகா வாக்யமே 'தத்வமசி' என்பதாகும். இம்மகாவாக்கியப் பொருளுணர்வே சாமவேதத்தால் ஓதியுணர்ந்து உப தேசம் பெற்று நாம் தெளியவேண்டுவதாகும். இத் தகைய சிறப்புடைய சாமவேத பாராயண சீலத்தினை உரிமையாகக்கொண்ட மரபிலே மறைஞானசம்பந்த தேசிகர் அவதரித்தருளினராதலாலும், இவரது சீலத் தால் சாமவேத இருதயம் இன்னதெனத் தெளிவுறுத் தப்பட்டதாதலாலும் வளர் சாமவேதம் மல்க எனக் கூறிப் போற்றியுள்ளார் ஆசிரியர்.

### பராசரமாமுனி மரபு பயில :

பராசரர் ஒரு பிரம இருடி ஆவார். வசிட்டரின் பேரர் எனவும், வியாசரின் தந்தை எனவும் கூறுவர். சிவபக்தி மிக்கவர். இவரது மரபிலே தமது ஞானா சாரியர் தோன்றியருளியவரெனக் கோத்திரப்பெருமை கூறும் பொருட்டுப் பராசர மாமுனி மரபு பயில என்றுள்ளார் ஆசிரியர். பயில என்றமையால் அக் கோத்திரம் வழிவழியாகத் தழைத்து வந்திருப்பதையும் பின்னும் தழைக்க இருப்பதையும் ஆசிரியர் உரைத் துள்ளாராவர்.

### ஞானச் சார்புதர வந்தருளி :

மக்கள் உய்தியடைவதற்கு ஞானமே தேவைப் படுவது. ஞானம் மூவகையாக உள்ளது. பாசஞானம்,

பசுஞானம், பதிஞானம் என்பன அவை. இவற்றுள் பாசஞான வளர்ச்சியும் சார்பும் உலகுக்கு அச்சத்தை விளைக்கும். பசுஞான வளர்ச்சியும் சார்பும் உயிர்கட்கு அகந்தை மேலிடச்செய்யும். அச்சமும் அகந்தையும் மக்கட்கு நலம் பயவா. பதிஞானவளர்ச்சியும் சார்புமே மக்கட்கு உறுதி பயக்கும். பாசஞானம் ஆராய்ச்சியால் அமையும். பசுஞானம் உணர்ச்சியால் உறும். பதிஞானமோ சதாசாரியரால் விளக்கப்படுவது. இப் பதிஞானச் சார்புகொண்டே ஈடேற்றம் அடையப் படும். இத்தகைய ஞானவிசேடம் தமக்கு மறைஞான சம்பந்ததேசிகரால் விளவுண்டதாதலின் ஞானச்சார்பு தர வந்தருளி என்றனர் ஆசிரியர். இந்த ஞான தேசிகருடைய திருவவதாரம் நூலாசிரியராம் தமக்கே உபகாரப்பட்டமையின் வந்தருளி என்றார். "தீரா - அறவா நினைக்கின் அடியேன் பொருட்டுப் - பிறவா நினக்குப் பிறப்பு" என்ற கருத்தும் ஒப்புக்கோடல் இங்குப் பொருந்தும்.

**எம்மை ஆண்ட சைவ சிகாமணி :**

இந்நூலாசிரியரை வலிய ஆட்கொண்டருளியவர் மறைஞான சம்பந்ததேசிகர் என்பதை வரலாற்று நூல்கொண்டு தெரியலாம். வேதாந்த நெறியிலே சென்றுகொண்டிருந்த தம்மைச் சித்தாந்தத் தெளிவும் தந்து ஆட்கொண்டருளிய பெருந்தண்ணளியினை வாய் குளிரக்கூறும் முறையிலே எம்மை ஆண்ட என்றனர். முடிமணி போலும் சிறப்புடையவர் தமதாசிரியர் என்பதை மன்பதையுலகம் தெரிதற்பொருட்டாகச் சைவசிகாமணி எனப் போற்றியுள்ளார்.

**மருதத்தலைவன் :**

மருதூர் என்பது மறைஞான சம்பந்ததேசிக ருடைய திருவவதாரத்தலம் ஆகும். இது திருமுனைப் பாடி நாட்டின்கண் உள்ளது. நூலாசிரியர், தம்மைச் செங்நெறிக்கு ஆளாக்கி அடிமைகொண்ட தம் ஞானா சாரியர் பிறத்தற்குரிய இடமாக இம்மருதூர் அமைந் திருந்த சிறப்புப்பற்றி அவ்வூரை இங்குக் குறிப்பாரா யினர். ஞானவான்கள் திருவவதாரம் செய்தருளிய தல மும் விசேடமுடையதாகவே கருதப்படுவதுமரபாகும். சீகாழிப்பதி இங்ஙனம் கருதப்பட்டமை வரலாற்றால் அறியப்படும். மருதூரில் எவ்வளவோ மக்கள் பிறந் திருந்தாலும் அவர்கள் யாவரும் இங்ஙனம் ஞானம் பெற்று விளங்கிலர், ஆதலின் **தலைவன்** என்றார். "எவ் வழி ஆடவர் நல்லவர்" அவ்வழி நிலனும் நல்லதெனப் படும் என்பது பண்டையோர் பாட்டு.

**அம்தண் கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியம்கடவாமல் நெடுங்கொடியின் கரம்தகையும் கடந்தை :**

கடந்தை என்பது பெண்ணாகடம் என்னும் சிவத்தலம் ஆகும். திருத்தூங்கானை மாடம் என்பது திருக்கோயிற் பெயராம். இந்தப் பெண்ணாகடத்தே உள்ள மடத்தேதான் பரமானந்த சிவம் எனப்பூர்வாச் சிரமப்பெயர் பூண்டிருந்த மறைஞான சம்பந்ததேசிகர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளால் ஆட்கொள்ளப் பட்டனர். ஆகவே, இந்த ஊர், தமது ஞானதேசிகர் சிவநெறிப்பட்டுச் சிறப்பெய்திய இடமாகுமாதலால், தமக்கு ஒருவரை ஞானசாரியராக ஆக்கி அளித்த

கடந்தைப்பதியை நம் ஆசிரியர் ஆர்வமுடன் சிறப்பிக்கின்றார். அந்த ஊர் உயர்ந்த மதில் சூழப்பெற்றது. அம்மதில் வாயிலிலே உயரமான கொடி அசைந்து கொண்டிருந்தது. அம்மதிலைத் தாண்டித்தான் சந்திரன் அப்பால் செல்லவேண்டும். அவ்வளவு உயரமானது அம்மதில். அம்மதில்சுவருக்கு வெளியிலே மலர்ந்து தேனைச்சொரியும் சோலை சூழ்ந்திருந்தது. அந்தச்சோலையிலுள்ளமரங்கள் வானளாவ வளர்ந்தவை. ஆதலால், அச்சோலையின்மேலே நீரைத் தன்னகத்தேகொண்ட குளிர்ந்த கரிய மேகங்கள் படிந்திருந்தன. இத்தகைய இயற்கையும் செயற்கையுமான சிறப்புடையது கடந்தைநகர் என்கிறார் ஆசிரியர்.

சிவபெருமான் திருமுடிமீது உள்ளது பிறைமதி. அது, முழுமதியானதும் அப்பெருமான் அடிமீதே கிடக்கவேண்டுவது முறைமையாகும். குழந்தைப் பருவத்திலே தந்தையின் தலைமேலே அடிவைத்து ஆடும் மகன், வயது சென்று வாலிபமான பிறகு அங்ஙனம் செய்யமாட்டான்; செய்வதும் முறையன்று. அறிவடைந்த மகன் தன் மதியுடைமைக்கு ஏற்பத் தந்தையின் அடியில் வீழ்ந்து பணிதலே செய்ய வேண்டும். இதுவே மைந்தற்குரிய அறநெறியாகும். இந்த நியாயத்தை வைத்துக்கொண்டு ஆசிரியர் கூறுவதைக் காண்போம்.

பூரணத்துவமாக வளர்ந்த சந்திரன் திருத்தூங்கானை மாடத்து எழுந்தருளியுள்ள சிவக்கொழுந்தின் அடியிலே படிந்து வணங்கிச் செல்லவேண்டும். சந்திரனே அப்படிச் செய்யாமல், ஆகாயவீதி வழியாகச் செம்மாந்து செல்லப்பார்க்கிறான். அப்போது அவன்

கடந்தை மதிலைக் கடக்க முயல்கிருன். இந்த நீதி மாருன செயலை மதில்வாயிற்கொடி பார்த்தது. அது தன்னுடைய சீலையாகிய கைகளாலே சந்திரனைத் தடுத்து நிறுத்துகிறது. அரனடி பணிய நினைப்பூட்டுகிறது. இவ்வாறு ஆசிரியர், தற்குறிப்பேற்ற அணி அமைத்து வருணித்துள்ளார். இதன், உள்ளுறையாக நாம், மக்கட்கு ஞானம் முக்கியமானதெனவும், ஞானமடைந்ததற்குப் பயனுக அரனடியைத் தொழுதலே முறை எனவும் தெரியவேண்டும். இந்தக் கருத்தொருமையை வள்ளுவர் வகுத்துரைக்கும் "கற்றதனுலாய பயன் என்கொல்? வாலறிவன் நற்ருள் தொழாஅர் எனின்" என்னும் குறட்பாவிலும் காணலாகும்.

மதியம் கடவாதபடி நெடுங்கொடியின் கரம் தகைகிறது. அங்ஙனமே சீடன் கெடாதபடி ஞானுசாரியன் செய்கின்ருனுவன். ஞானச்சூழலாகிய திருக்கோயிலுள்ளே வெளிமயக்காகிய ஆரவாரங்கள் புகுதாவண்ணம் தகைவனவே மதில்கள். அவ்வாறே, நாம் பஞ்சேந்திரிய மயக்குட்படாதபடி அடியார் கூட்டமாம் வளைவுட்பட்டே இருத்தல்வேண்டும் என்பது தெரியலாம். அடியார் நடுவுள் இருக்க அருள்புரியுமாறு மணிவாசகப்பெருமானும் ஆண்டவனை நயத்தல் திருவாசகத்தால் அறியப்படும். அடியார் கூட்டுறவினை நமக்கு வாய்க்கச்செய்வது, நமது சிவபுண்ணியத்தின் பெரும்பயனுகிய திருவருளே ஆகும். எனவே, நமது சிவபுண்ணியத்தின் மேலெழும் திருவருளின் வாய்ப்புச் சூழலுக்குள் நம்மைத் தீநெறிப் படராதபடி வேலி செய்யும் அடியார் வளைப்பு நிலவும். இவ்வளைப்புட்பட்ட ஜீவன் உய்தியடைதற்கு ஆசாரியனும் சிவத்தின் காட்சியே முடிவான துணையாகிறது. இந்தவகையில்

அடியார்வளைப்புட்படும் தன்மைக்கு மதிலின் வளைப் புக் கூறப்பட்டுள்ளது. இனி, அதன் ஏதுவாம் திருவருள் - சிவபுண்ணியங்களின் தகைமையை நமக்கு உள்ளுறுத்துரைக்கும் முறையில் அம் தண் கார்மருவுதலும், பொழில் புடைசூழ்தலும் கூறப்பட்டுள்ளமை காணலாம். இங்ஙனம் கடந்தைப்பதியின் வருணனை அமைந்திருத்தல் கருத்துட் கொள்ளப்படல் பொருந்துவதாம்.

சீர்நிலவு மறைஞானசம்பந்தன் எந்தை :

சிவத்தின் சிறப்பதிட்டானத்தை உடைமையே ஞானுசாரியருடைய பெருஞ்சிறப்பாகும். ஞானுசாரியரே சிவமாம் தகையினன். ஆதலின் சீர் நிலவு என்றனர் ஆசிரியர். வேதங்களிலே முடிவாகக் கூறப்படுவது பதிஞானத்தின் சிறப்பே ஆகும். எனவே, மறைஞானம் எனப்படுவது வேதாந்த ஞானமே - பதியறிவே - ஆகும். இத்தகைய ஞானத்தைத் தாம் மாத்திரமே பெற்றிருப்பதால் பெறும் சிறப்பு அத்துணை ஏற்றம் உடைத்தன்று. அந்தப் பதிஞானத்தைத் தம்மை அடையும் பக்குவர்களாகிய சீடர்கட்குத் தொடர்புறுத்துவைத்தலே ஞானுசாரியர் இயல்பாம். இதனையே, சம்பந்தன் என்னும் தொடர் குறிப்பதாகும். ஆகவே, தமது ஞானுசாரியரது திருநாமமே, வேதாந்த ஞானமெனப்படும் பதிஞானத்தை நமக்கெல்லாம் தந்தருளுபவராம் சிறப்புத்தன்மை ஞானகுரவர்பால் இருப்பதை எடுத்தியம்பும் தகைமையது என்பதை அறிவிப்பதாகும் என்று நூலாசிரியர் ஈண்டு ஓதிக் காட்டியுள்ளாராவர். ஞானதேசிகரால் ஆட்கொள்ளப் பட்டுச் சீடர்க்குப் பதியறிவுதலைப்படலும், உண்மைக்

காட்சி புலனுவதனுலே, பழைய உறவு முறையெல்லாம் பொய் எனவும், சிவமே - ஆசாரியனே - உண்மைத் தந்தையாம் சுற்றத்தன் எனவும் தெரியவரும். ஆகவே, பாசஞான பசுஞானங்கள் விலகிப்போம். இங்ஙனம் பொய்வினைச் சுற்றப்பற்றெல்லாம் மாண்டுபோன நிலைமையில் ஞானுசாரியனே - சிவமே - உண்மையான தந்தை என்பது புலப்படலுறுவதை நம் ஆசிரியர், தம் ஆசிரியரை எந்தை என்றழைத்துள்ள ஆர்த்தியினுல் நாம் அறியலாகும்.

**திருவளரும் மலர் அடிகள் சென்னி வைப்பாம் :**

ஞானதேசிகராலே ஆட்கொள்ளப்பட்டு அவர் வழி ஒழுகுதலும் பேரின்பக்காட்சி இம்மையிலேயே தலைப்படும். அதாவது உண்மைச் சீவன்முத்திநிலை கைகூடும் என்பதாம். இந்த இன்பம் புணர்க்கும் தொறும் புதுப்போகம் பயப்பதாகும். எனவே, முடிவில்லது ஆகும். வெறுப்பு அல்லது திருப்தி பயப்பதன்ருகும். இந்த நிலைமையைத் திருவளரும் என்ற தொடர் குறிப்பதாகும். திரு என்பது ஈண்டுப் பெரும் போகமாம். வளர்தலாவது புதிது புதிதாகத் தோன்று மாறு அனுபவப்படுத்தலாம். ஆசாரியருடைய மலர்ந்த கருணையால் விளைக்கப்படும் அடிசேர் ஞானமே, ஆண்டான் அடிமையுறவினை ஐயமறப் புலப்படுத்தும் திறமுடையதாதலால், இவ்வியல்பு நம்மனோர்க்குப் புலப்படுமாறு மலரடிகள் சென்னி வைப்பாம் எனக் கூறி இச்சிறப்புத் துதியினை முடிக்கின்ருர் ஆசிரியர் என்க. இதன் கருத்தாக, நாமும், சிவபுண்ணிய சிலர் களாகி ஞானுசாரியதரிசனத்தைப் பெறுதற்கான தாக மேலிடு எய்தப்பெற்றுத் திருவருள் விழ்ச்சியாம் ஞானு

சாரியரைச் சந்திக்கும் பாக்கியம் உடையவர்களாகி, அவராலே பதிஞானம் மேவப்பெற்று அவரால் விளக்கப்படும் பேரின்பவாயிலிலே நுழைவுற்று அவ்வனுபவ சாலிகளாகிய ஆசாரியருடைய திருவடியையே முற்றும் பற்றிக்கிடக்க வேண்டியவர்களாகிறோம் என்பது தெளியப்படவேண்டும் என்னலாம். ஆகவே, ஆசாரிய ரக்ஷணச் சிறப்புரைத்தல் இப்பாடற் கருத்தாயிற்று என்க.

## 7. நூற்கருத்து

*புறச்சமயத் தவர்க்(கு)இருளாய் அகச்சமயத்(து)*
*[ஒளியாய்*
*புகல்அளவைக்(கு) அளவாகிப் பொன்பணிபோல்*
*[அபேதப்*
*பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமும்சொல்*
*[பொருள்போல்*
*பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனல் விளைவதாய் உடல்உயிர் கண்அருக்கன்*
*அறிவுஒளிபோல் பிரிவரும் அத்துவித மாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்கல் உற்ரும்.*

## பொழிப்புரை

உலகாயதன், புத்தன், சமணன், மீமாம்சகன், மாயாவாதி, பாஞ்சராத்திரி என்னும் புறச்சமயிகள் அறுவர்க்கும் இருளாய், சைவம், பாசுபதம், காளாமுகம், வயிரவம், வாமம், மாவிரதம் என்னும் உட்சமயிகள் அறுவர்க்கும் விளக்கமாய், சொல்லப்பட்ட காட்சிமுதலிய அளவைக்கு மட்டாய், பொன்னும்

பணியும்போல் பேதம் இல்லாத தோற்றம் இல்லாத தாய், இருளும் வெளியும் போலப் பேதமும், சொல் லும் பொருளும் போலப் பேதாபேதமும் இல்லாமல், வேதாகமங்கள் கூறிய சிவதன்மங்களின் கூற்றினலே உண்டாவதாய், உடலும் உயிரும், கண்ணும் அருக் கனும், ஆன்மபோதமும் கண்ணொளியும் போல வேற்றுமை இல்லாத அத்துவிதமாகும் சிறப்பினை உடையதாய், வேதத்தின் முடிவிலே சொல்லப்பட்ட தெளிவான சைவசித்தாந்தத்தின் உண்மையை இந் நூலுள் விளங்கச் சொல்லுவாம்.

## விளக்கவுரை

உலகில் உள்ள பல்வகை மதங்களையும் நான்கு பிரிவாகப் பிரித்துரைப்பர் நூலோர். அவை புறப்புறம்-புறம் - அகப்புறம் - அகம் என்பனவாகும். இந்த நான்கினையும் தன்னுள் ஏகதேசத்தில் அடக்கிக் கொண்டு அவற்றிற்கு அதீதப்பட்டுள்ளதே சித்தாந்த சைவம் எனப்படும். சிவத்தில் - வியாபகத்தில் - அடங் காத தெய்வம் இல்லை. சித்தாந்த சைவத்துள் அடங் காத சமயமும் அவ்வாறே இலதாம். இதனலேயே, எரிவினல் வேருருசமயம் செய்யினும், அதுவும் எம் பிராற்கு ஏற்றதாகும் என்கின்றனர் தமிழ்மறையாளர். மேற்கூறப்பட்ட நால்வகைகளையும் சமட்டித்துரைப் பின் புறப்புறம், புறம் இரண்டையும் ஒன்று படுத் திப் புறச்சமயம் எனவும், அகப்புறம் அகம் என்ற இரண்டையும் ஒன்றுபடுத்தி அகச்சமயம் எனவும் இரண்டே வகைகளில் அடக்கி உரைத்தலும் கூடும். எனவே, சமயிகளும் புறமும் அகமுமான இருதிறத்த ராவர். பொதுப்படக்கூறின், அநாதியாகவே மலசகித மாக உள்ள ஆன்மாக்கள் மாயையை இருப்பிடமாகக்

கொண்டு வசிப்பனவாம். அநாதியாகவே மலரகித முன இறைவன், அந்த ஆன்மாக்கள் மல நீக்கம் பெற்று முழு இன்பத்தை அடைதல்வேண்டி, மாயையி னின்றும் தனு முதலானவற்றைத் தோற்றுவித்து உபகரிக்கின்ருன். இந்த உதவியினுல் உயிர்கள் தமக் குரிய அறிவு இச்சை செயல்களில் முறை முறையாக விளக்கம் அடையலுறுகின்றன; இப்படிப் படிப்படி யாகத் துன்பநீக்கமும் இன்பஆக்கமும் எய்தி முடிவில் ஈறிலாப் பெரும்பதம் எய்துவதற்கான வழிகளை ஆன்மகோடிகளின் பக்குவத்தரங்கட்கு ஏற்ப எடுத் துச்சொல்வன சாத்திரங்கள் ஆகும்.

அப்படிச் சாத்திரம்சாற்றும் நெறியைமேவி அனுப விக்கச்செய்யும் மார்க்கமாக உள்ளனவே சமயங்கள் எனப்படும். ஆகவே, சமயங்கள் ஞானதீபங்களாகியும் நீதிநிலயமாகியும் நின்று மக்களை ஈடேற்றற்கெனவே அமைப்புண்டவை என நாம் கொள்ளுதல் முக்கிய மானதாகும். இத்தகைய கொள்கையுடைய சமயங் களில் புறப்புறச் சமயங்கள் எனப்படுவன வேத சிவா கமங்களைப் பிரமாணமாகக் கொள்வன ஆகா. புறச் சமயங்கள் எனப்படுவன வேதத்தை ஏற்றுக்கொள் ளும்; ஆனுல், சிவாகமத்தைப் பிரமாணமாகக் கொள் வதில. அகப்புறச் சமயங்களானவை, வேத சிவாக மங்களை ஏற்றுக்கொள்வதுடன் பசு நூல்களையும் பிரமாணமாகக்கொள்ளும் இயல்பினவாகும். அகச் சமயங்கள் என்பன, வேத சிவாகமங்களையே பிரமாண மாகக் கொள்வனவாயிருந்தும் முத்திநிலைகளில் மாறு பாடான கொள்கைகளைக் கொண்டிருப்பனவாம். இத்தகைய எல்லாச் சமயங்களின் கோட்பாடு களையும் எடுத்துச்சொல்லி, அவற்றைப் பரிசிலனை

செய்து அவ்வவற்றினிடமாகவும் உள்ள குறை நிறைகளை விரோதமில்லாமல் விளக்கிக்காட்டி, முத்திநிலையில் கூறப்படும் வேறுபாடுகளையும் நியாயமுறையில் அறிவுக்குப் பொருத்தமான வகையில் வேறுபட்ட கருத்துடைய சமயிகளும் ஒப்புக்கொள்ளுமாறு சித்தாந்தப்படுத்திக் கூறும் சமயமே சித்தாந்த சமயம் எனவும் சித்தாந்த சைவசமயம் எனவும் வழங்கப்படும். சமயங்களின் இவ்வாருன ஒற்றுமை வேற்றுமைகளையெல்லாம் இவ்வாதீனத்தின் 91 ஆவது வெளியீட்டாலும், சங்கற்ப நிராகரணநூல் விளக்கவுரையினுலும் தெரியலாகும். ஈண்டு விரித்தல் இந்நூலைப் பெருகச்செய்திடும். இவ்வெல்லாக் கருத்துக்களுக்கும் அரண்செய்வது; "உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்" என்னும் திருவாசகத் தெள்ளேணப்பாடல் ஆகும். இனிச் சித்தாந்த சைவத்திறனை இத்தகையதாமென இவ்வாசிரியர் கூறுமுறைப்படி ஓதுவோம்.

புறச்சமயத்தவர்க்கு இருளாய் :

இந்நூலாசிரியர், எல்லாச் சமயங்களையும் புறம் எனவும், அகம் எனவும் இரண்டே வகைப்படுத்திச் சொல்லலுறுகிருர் என்பது மேலே கூறப்பட்டது. அவற்றுள் புறச்சமயத்தே ஓராறு சமயங்களும், அகச் சமயத்தே மற்றும் ஓராறு சமயங்களும் ஆக ஈராறு சமயங்களும் அடங்குவனவாம். புறச்சமயத்தின் பகுப்புட்பட்டனவாக, உலகாயதம் - புத்தமதம் - சமணம் - மீமாம்சம் - மாயாவாதம் - பாஞ்சராத்திரம் - என்பன கொள்ளப்படும். இச்சமயங்களின் கொள்கைகளையெல்லாம் தனித்தனி விரிப்பின் பெருகும் ஆதலால்

சிவஞானசித்தியார் பரபக்கம் முதலிய நூல்களால் அறிதல் தக்கதாகும். மேற்சொல்லப்பட்ட சமயிகள் யாவரும், இயற்கையே கடவுள் எனவும், நாமே கடவுள் எனவும், கடவுள் மாயாரூபி எனவும் உண்மை அறியமாட்டாமல் மயங்கிக்கூறுவர்; தத்தம் கொள்கைகளே சரியானவை என்பர். நியாயவாதத்துக்கு இணங்கமாட்டார்கள். ஆதலால், இவர்களுக்கு அநாதி நித்தியப்பொருள் யாது என்பதுபற்றியும் அப்பொருளின் இயல்பு எது என்பதுபற்றியும் தெரிந்து கொள்ளும் நன்னோக்கம் இல்லையாகிறது. ஆனது பற்றியே நூலாசிரியர் **புறச் சமயத்தவர்க்கு இருள் ஆய்** என்றுள்ளார். இவர்கள் அறிவு மாயையுள் மயங்கிக் கிடத்தலினுல் **இருள்** - அறியாமை - **ஆய்** எனலாயினர்.

**அகச்சமயத்து ஒளி ஆய் :**

முத்திநிலையில் பல வேறுபாடுகளை உடையன அகச் சமயமாம். இங்கு அகச்சமயம் எனப்படுபவை சைவம், பாசுபதம், காளாமுகம், வயிரவம், வாமம், மாவிரதம் என்பனவாம். இவை உட்சமயம் எனவும் உரைக்கப்படும். இச்சமயங்களின் கோட்பாடுகளையும் விரிந்த நூல்களால் தெரிந்திடுதல் நன்றும். இச்சமயத்தவர்கள் யாவரும் ஏதேனும் ஒருவகையில் இறையின் பேரியல்புகளை ஒப்புக்கொள்ளுகின்றனர். ஆதலின், இவர்கள்பால் பதியறிவுக்கான தகுதிப்பாடு காணப்படுதலின் **ஒளி ஆய்** என்றனர் ஆசிரியர். பதி, பசு, பாச உண்மைகளை இவர்கள் ஒப்புக்கொள்ளுதலும், சிவனைக் கருத்தாவாக ஏற்றுக்கொள்ளுதலும் இவர்கள் பால் உள்ள ஒளி ஆம்.

**புகல் அளவைக்கு அளவாகி :**

ஒரு பொருளைப்பற்றி ஏதொன்றும் அறியாதவற்கு அப்பொருளைப்பற்றி அறியச்செய்வதற்குச் சாதனமாக இருப்பது எதுவோ அது அளவை எனப்படும். அளவை என்பது பிரமாணம் எனவும் கூறப்படும்; பிரமாணம் என்பதற்கு ஒருபொருளை அளக்கும் கருவி என்பது பொருளாம். பொருள்கள் உலகத்தில் இரண்டு வகைப்படும்; கண்ணால் காணப்படும் பொருளும், அங்ஙனம் காணப்படாத பொருளும் என இரண்டாம். கண்ணால் காணப்படும் பொருளை எண்ணல் எடுத்தல் முதலான நான்கு கருவிகளால் அளக்கலாம். கண்ணால் காணப்படாத பொருளை அதாவது பதி - பசு - பாசம் என்கிற பொருள்களை மேலேசொல்லப்பட்ட கருவிகளால் அளக்கமுடியாது. அப்பொருள்களை ஆகமம், அநுமானம் என்கின்ற கருவிகளைக் கொண்டு ஆன்மசிற்சத்தியால் அளத்தல் கூடும். ஆகவே, ஆன்மசிற்சத்தியே பிரமாணமாம். கருவிகளும் உபசாரவகையால் பிரமாணம் எனப்படும். பிரமாணங்கள் மூவகையாகக் கூறப்படுவது உண்டு. காட்சி அளவையாவது, பெயர், சாதி முதலான வேறுபாடின்றி நிருவிகற்ப உணர்வைத் தன் முன்னாகக் கொண்டு ஐயவுணர்வும் - விபரீதஉணர்வுமில்லாமல் விஷயங்களை நேரே அறிவதாகிய ஆன்மாவினது ஞான சத்தி ஆகும். இது இந்திரியக்காட்சி - மானதக்காட்சி - தன்வேதனைக்காட்சி - யோகக்காட்சி என நான்கு வகைப்படும். இவ்வாறே ஒவ்வொன்றையும் பரக்கக் கூறின் பெருகுமாதலின் தருக்க நூல்கொண்டு நாம் அறிதல் ஏற்புடைத்தாம். ஒவ்வோர் அளவையாக அளவை நூல்கள் விரித்துக்கூறுதல் இயல்பாதலின்

புகல் அளவைக்கு எனப்பட்டது. எல்லா அளவை களாலும் தாபிக்கப்படும் உண்மையாக - மாருத உண்மையாக - சித்தாந்தக்கொள்கை விளங்குதலின் அளவாகி எனப்பட்டது.

பொன்பணிபோல் அபேதப் பிறப்பு இலதாய் :

உயிர்கள் நற்கதி பெறுதற்கு 'அவை நிலைக்கவும், அறியவும், அனுபவிக்கவும் வேண்டும். எனவே அவற்றை நிலைக்கச் செய்யவும், அறிவித்தற்கும், செல லச் செய்வதற்கும் இறைவன் துணை தேவையாகிறது. இவற்றின்பொருட்டே இறைவன் உயிர்களை நிலைக் கச் செய்தற்பொருட்டு உடலுயிர்போல் ஒன்ருய் - அபேதமாய் - இருந்து உபகரிக்கிருன். அறியச்செய்தற் பொருட்டுச் சூரியனும் கண்ணெளியும் போன்று வேருக இருந்து உபகரிக்கின்ருன் இறைவன். இது பேதம் எனப்படும். அனுபவிக்கச் செய்தற்பொருட்டு ஆன்மபோதமும் கண்ணெளியும்போல உடனுய் இருந்து இறைவன் உபகரிக்கிருன். இதனையே பேதா பேதம் என்பர். இவற்றுள் அபேதத் தன்மைக்குப் பொன்பணியை உபமானம் காட்டுவதுண்டு. இவ்வுப மானத்தில் பொன்னே பலவகை ஆபரணங்களாகவும் ஆகின்றமை தெரியலாகும். இந்த உவமையைமட் டில் கொண்டால், பிரமமே உயிராயிற்றென்று கொள் ளவரும். ஆபரணமாகச் செய்யப்பட்ட பிறகும் அவ் வாபரணத்தினிடம் பொன்னின்தன்மை விளங்குகிறது. அவ்வாறே, பிரமமே உயிராயின், உயிரினிடத்திலும் பிரமத்தின் தன்மை விளங்கவேண்டும். பிரமத்தன்மை யினிடம் நினைப்பு, மறப்பு, சுகம், துக்கம் முதலான கட்டுப்பாடு இராது.

உயிரினிடத்திலோ இக்கட்டுப்பாடுகளிருப்பதை நாம் நேரே காண்கிறேம். ஆதலால், இந்த உவமை பொருந்துவதாயில்லை. இந்த உவமையால், பிரமப் பொருளுக்கும் சுகம் துக்கம் முதலான கட்டுப்பாடும் விகாரப்பாடும் உண்டெனக்கொள்ளவேண்டும். இது அசம்பாவிதமாகும். இதனுலேதான், சித்தாந்திகள், உயிரையும் உடலையும் அபேதத்துக்கு உவமையாகக் கொண்டனர். இந்த உவமையில் உயிர்போல இருப்பது இறை. உடல்போல இருப்பது உயிர். இன்னம் இதன் விவரங்கள் பலவும் சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரத்தின் முதல் அதிகரணத்து முதலாவது வெண்பா உரையால் அறியப்படும். ஆனுல், பொன், பணியுவமையில், ஆபரணம் பொன்னையின்றித் தனித்து நில்லாது. அதுபோலவே உயிர், இறைவனையின்றித் தனித்து நில்லாது எனக் கொள்ளுதல் பொருந்துவதாகும். பிறப்பு இலதாய் என்ற சொற்றெடரால், பிரமமே உயிராவதில்லை என்பது தெரியப்பட வேண்டும் என்க.

இருள் வெளிபோல் பேதமும்......இன்றி :

இருளும் வெளியும் போல் என்பது பேதவாத உவமை ஆம். இந்த உவமையால் பொருள் இரண்டு என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனுல் பொருளின் தன்மைகளோடு முரணுள்ளது. வெளி என்பது சூரியனெளியைக் குறிப்பதாகும். ஆகவே, சூரியனெளி பிரகாசிக்குங்கால் இருள் தோன்றுது. இருள் தோன்றுங்கால் சூரியனெளி பிரகாசிக்காது. இதனுல், ஒன்றன் உபகாரம் பிறிதொன்றற்கு வேண்டப்படுவதில்லை என்பது காணலாம். அவ்வாறே, இறைவனும்

உயிரும் இரண்டே எனக்கொண்டு, உயிர் தோன்றுங்கால் இறைவன் தோன்ருமலும், இறைவன் தோன்றுங்கால் உயிர் தோன்ருமலும் நிற்கும் எனக் கொள்ளவரும். அப்படிக்கொண்டால், உயிருக்கு இறைவன் உபகாரம் வேண்டியதில்லை எனவும், உயிரே தனித்து இயங்கும் எனவும் கூற நேரிடும். இதனுல்தான் இருள் வெளிபோல் பேதமும் இன்றி எனப்பட்டது. ஆதலால், சித்தாந்திகள் இதற்கு அகரத்தையும் ஏனைய அக்கரங்களையும் உவமையாகக் கூறுவர். இந்த உவமையில் ஏனைய அக்கரங்களும், அகரமும் வேருய் இருப்பினும் அகரத்தின் உதவியை ஏனைய அக்கரங்கள்பெற்று நடத்தல் தெரியலாகும். இவ்வாறே, முதல்வன் உதவியின்றி உயிருக்கு இயங்குதல் இல்லை என்பது விளங்கும். மற்றும் இதன் விரிவெல்லாம் இரண்டாம் சூத்திரத்து முதல் அதிகரணத்துள்ள இரண்டாம் வெண்பா உரையினுல் அறியலாகும்.

சொற்பொருள்போல் பேதாபேதமும் இன்றி :

ஒருசார் பேதமும் ஒருசார் அபேதமும் உடைமை பேதாபேதம் எனப்படும். இதற்குச் சொல்லும் பொருளும் என்னும் உவமானம் உரைப்பர். இந்த உவமையின்படி பொருள் இரண்டு என்பது உறுதியாம். சொல் ஒன்று; பொருள் ஒன்று என்பது உவமை கூறுவதாம். ஆனுல், சொல்லும் பொருளும் கலந்திருக்கவில்லை. சொல் என்பது வாக்கில் இருப்பதாகும். அச்சொல் குறிக்கும் பொருள், வாக்கினிடம் இருப்பதன்று; அதனின் வேருக இருப்பதாகும். இந்த உவமையின்படிப் பார்ப்பின் உயிரிருக்கும் இடம் ஒன்றும்,

பிரமம் இருக்கும் இடம் ஒன்றும் ஆக இரண்டு வேறு வேறிடங்கள் ஏற்படும். ஆனால், பிரமமும் உயிரும் கலந்திருப்பதே உண்மை. ஆகையால், மேலே சொல்லப்பட்ட சொற்பொருள் உவமை ஏற்புடைத்தன்று என்ப.

இதற்குப் பதிலாகச் சித்தாந்திகள், பண்ணும் ஓசையும் என்கிற உவமை காட்டுவர். பண் என்பது இசை விகற்பம். இசையைவிட ஓசை வேறன்று. ஆனால் ஓசை, இசையும் அன்று. அவ்வாறே முதல்வனைவிட உயிர் வேறன்று. ஆனால் உயிர், முதல்வனும் அன்று. இம்மாதிரியே, பழமும் சுவையும் என்னும் உவமையும் கூறப்படுவதுண்டு. ''பண்ணையும் ஓசையும்போல'' என்னும் சிவஞானபோத வெண்பா உரை ஈண்டுநோக்கி அறிதல் ஏற்புடைத்தாகும்.

எங்கும் வியாபகமாயிருப்பது இறை இயல்பு. ஆதலின் அங்கங்கே உயிர்களோடு உடனாய் நிற்பது இறைவற்கியல்பாகும் என்க. இதனால், உயிர்களோடு முதல்வன் திருவருள் பிரிப்பின்றி நிற்பதென்பது உணரப்படவேண்டும். இன்னும், சித்தாயுள்ள சிவனிடத்துச் சடமாயுள்ள பிரபஞ்சம் தோன்றாது எனவும், சடமாயுள்ள பிரபஞ்சம் சித்தாயுள்ள சிவனாலே காரியப்படுகிறது எனவும் தெரிதல்கூடும். அத்துவிதத்து உண்மை, சொற்பொருள்போல் என்னும் உவமையினிடத்து விளங்காமை தெரிவிப்பதற்கு விரும்பியே ஆசிரியர், சொற்பொருள்போல் பேதாபேதமும் இன்றி என்றனர். அபேதமும் என்ற சொல்லிலுள்ள 'உம்' என்பது முன் உள்ள உவமானங்களையும் நினைப்பூட்டி நிற்பதாகும்.

**பெருநூல் சொன்ன அறத்திளுல் விளைவது ஆய்:**

நூல்கள் இருவகைப்படும். அவை உலக நூலும் வேதநூலுமாம். இவற்றுள் உலகநூல் வயிறு வளர்க்கைக்கு வழிகாட்டுவது. வேதநூலே உயிரின் ஆக்கத்துக்கு ஆவனசொல்வது. உடம்பினும், உயிர் பெருமை உடையதென்பது யாவர்க்கும் உடன்பாடாம். ஆதலால், வேதாகம நூல்களே பெருமைவாய்ந்த நூல்கள் என்பது மிகையாகாது. ''சொல்லு நூல்களில் பெரியதேது? அரிய மெய்ச்சுருதி'' என்னும் மேற்கோள் இங்குக் கருதப்படத் தக்கதாகும். ஆதலால், உலக நூல் ஓதுவதெல்லாம் கலகல; கூவும் துணை அல்லால், தடுமாற்றம் தீர்க்கும் துணையாகாதென நாம் தெரிதற் பொருட்டு, **பெருநூல்** என்று வேதாகமங்களை ஆசிரியர் சிறப்பித்துக் கூறலாயினர். வேதாகமங்கள், பதி பசு பாசங்களின் இயல்புகளை உணர்த்தி, பதியினை, உயிரானது பாசநீக்கி அடைவதற்கான சாதனங்களையும் சாற்றி முடிவானதாக உள்ள சாயுச்சியத்தை இன்னதென எடுத்தியம்பும் பெற்றியனவாகும். முப்பொருள் உண்மை, அவற்றின் தடத்த சொரூப இலக்கணங்கள், சாதனவகைகள், பாசநீக்கம், சிவப்பேறு, சீவன்முத்த இயல்பு, பரமுத்தி என்னும் ஆன்மாவுக்கான நீதிகளையெல்லாம் வேதாகமங்கள் விவரித்துக் கூறுகின்றன ஆதலால், **சொன்ன அறத்திளுல்** என்றனர் ஆசிரியர்.

இனி, வேதங்களாலே கூறப்படும் மகாவாக்கியமும் அறம் எனப்படும். அத்துவிதம், தத்வமசி முதலான சொற்றொடர்களை அர்த்தம் செய்வதில் வேறுபாடுகள் விளைகின்றனவே அல்லாமல், சொற்றொடர்களின் உண்மைப்பொருளாம் சித்தாந்தம் ஒன்றே

என்பது நமக்குப் புலப்படும்பொருட்டே விளைவது ஆய் என்றார். இவ்விடத்தே, "அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல்" என்னும் சிவஞானபோத வெண்பா உரை படித்தறிதல் பயன் அளிக்கும் என்னலாம். இனி, அச்சிறப்பு இன்னதென்பதை ஆசிரியரே பின்வருமாறு கூறிக் காட்டுகின்றாராவர்.

**உடல் உயிர், கண் அருக்கன், அறிவு ஒளிபோல்**
**பிரிவு அரும் அத்துவிதம் ஆகும் சிறப்பினது ஆய்:**

உயிர்களுக்கு வேண்டுவன நிலைத்தல், அறிதல், செல்லுதல் என்கிற மூன்று உதவிகளேயாகும். மற்று முள்ளனவாகக் கூறப்படும் எல்லா உதவிகளையும் மேலே சொல்லப்பட்ட மூன்று பிரிவினுள்ளே அடக்கி விடலாகும். இம் மூன்றுதவிகளும், இறைவன், உயிர்களின் ஒன்றாய் நிற்றலாலும், வேறாய் நிற்றலாலும், உடனாய் நிற்றலாலும் விளைகின்றனவாகும். உபகாரத் தேவைகள் மூன்றாயிருத்தலால், இறைவனும் மூவிதமாய் நிற்றல் வேண்டப்படுவதாயிற்று என்ப.

உயிர் நிலைத்தற்குமட்டுமே இறைவன் உதவி, தேவைப்படுகின்றதெனக் கொண்டால், அறிதற்கும் செல்லுதற்கும் உயிர்கள் தாமே சுதந்திரமுடையன எனக்கொள்ளவேண்டிவரும், இப்படியே, அறிவித்தற்குமட்டுமே இறைவனுதவி தேவை எனக்கொண்டால் ஏனை இரண்டற்கும் உயிர்கள் சுதந்திரமுடையன எனக்கொள்ளவேண்டிவரும். செல்லுதற்கண் கூறப்பட்டாலும் இப்படித்தான் முடியும். ஆகையினால் அபேதம், பேதம், பேதாபேதம் என்னும் ஒவ்வொரு கொள்கையையே பற்றிநிற்பது பொருந்தாதென்பது

தெரியப்படவேண்டும். இறைவனுடைய பிரிப்பின்றி நிற்கும் இயல்பிலே, அம்முதல்வன் உயிர்களொடு கலப்பால் **ஒன்றுதலும்** - பொருளால் **வேறுதலும்** - உயிர்க்குயிராதல் தன்மையால் **உடனுதலும்** பெறப் படும். இம்மூன்று இயல்புகட்கும் **உடல் உயிர் - கண் அருக்கன் - அறிவு ஒளி** என்னும் உவமைகள் கூறப்படுகின்றன. இவற்றின் விளக்கமும் பொருத்த மும் முன்னரே சிறிது கூறப்பட்டன. மற்றும் விரி வினைப் பெருநூல்களால் தெரிதல் தக்கதாம்.

இனி, அத்துவிதம் என்ற சொல்லே பிறிது காரணம் வேண்டாமல் முதல்வன் உயிர்களோடு பிரிப் பின்றி நிற்றலை உணர்த்திநிற்கும் என்பர். அத்துவிதம் என்ற சொல், பிரிவு அற்றதான அரிய ஒருமையை உணர்த்தும் திறனுடைத்தென்பதை ஆசிரியர், **பிரிவு அரும் அத்துவிதம் ஆகும் சிறப்பினது** என்ற கூற்றால் விளக்கியுள்ளாராவர். **அத்துவிதம்** என்ற சொல்லில் துவிதம் என்னும் சொல்லின்முன் உள்ள அகரம், அன்மை - இன்மை - மறுதலை என்கின்ற மூன்று அர்த்தங்களை உணர்த்தவல்லதாகும். இதற்கு, நூல் ஆசிரியர்கள், அப்பிராமணன் - அமலம் - அநீதி என்கிற மூன்று சொற்களை உதாரணம் காட்டுவர். இவற்றுள் அப்பிராமணன் என்னும் சொல் பிராமணன் அல்லாத ஏனையோரைக் குறிக்காது. ஆனல், பிராமணனுயிருந் தும் பிராமணத்தன்மை இல்லாமையைக் குறிக்கும். ஆதலால், இந்த அகரம் **அன்மைப்பொருளில்** வந்தது ஆகும். அமலம் என்ற சொல்லில் உள்ள அகரம், அடியோடு மலத்தன்மை இல்லாமையைக் குறிப்ப தாகும். ஆதலால், இதில் அகரம் **இன்மைப்பொருளில்** வந்தது ஆகும். அநீதி என்னும் வார்த்தையில், அகரம்

ந்நியின் மறுதலையைக் குறித்துநிற்கின்றது ஆகும். ஆதலால், இதனில் அகரம் மறுதலைப்பொருளில் வந்தது ஆகும். இன்னம், இதன் விவரமான விஷயங்களை விரிவாய்க் கூறும் நூல்கள்வாயிலாக உணரல் தகும். இங்கு, வேண்டும் அளவுக்குக் கொள்வோம்.

மேற்கூறப்பட்ட அன்மை இன்மை மறுதலைப் பொருள்களில் ஒவ்வொன்றே கொள்வோர் முறையே ஏகான்மவாதிகள் - மாத்துவர் - பாஞ்சராத்திரிகள் ஆவர் என்ப. இம்மூவர் கொள்கைகளும் முதல் வனுக்குள்ள ஒவ்வோரியல்பையே குறித்து நிற்கும் குறைபாடு உடைமையால், சித்தாந்திகளாவார், இம் மூன்றையும் உடம்படுத்திக் கொண்டுள்ளதாகும் பிரிவு அரும் அத்துவிதப் பொருளைச் சொல்லுவர். அத்துவிதச்சொற்குச் சித்தாந்தம் காட்டும் பொருள் வருமாறு:- அத்துவிதச்சொற்குப் பொருள் யாது எனில் அகரம் பொருட்பெயர்ச்சொல்லில் வரும்போது அன்மை - இன்மை - மறுதலை என்னும் மூன்று பொருள்களையும் பயக்கும் பொதுத்தன்மை உடையதாகும். எண்ணுப்பெயர்ச் சொல்லில் வரும்போது அன்மைப்பொருள் மாத்திரமே தரும்; பிறபொருள் களைப்பயவாது. இந்த எண்ணுப்பெயர்களிலும் ஏகம், துவிதம் என்கிற இரண்டே பெயர்களின் முன்னே தான் அகரம் நிற்கும்; ஏனைய எண்களுடன் நில்லாது. மேற்சொல்லப்பட்ட இரண்டு எண்ணுப்பெயர்களின் முன்னே அகரம் நிற்கையில் அநேகம் என்னும் பெயரிற்போலவே அன்மைப்பொருளையே குறித்து நிற்கு மன்றி வேறுபொருளைக் குறியாதாகையால், அத்துவிதச்சொல்லில் நிற்கும் அகரத்துக்கு அன்மைப்பொருள் கொள்ளவேண்டி உள்ளது. இதனாலே, கடவுளும்

உயிரும் பொருள்தன்மையினுல் இரண்டாயினும் இரண்டின் தன்மையாக வேறு பிரித்தறியவாராமல் கண் ஒளியும் ஆன்மபோதமும் போலக் கலந்து நிற்கும் என்பது பொருளாகக் கொள்ளப்படும். இதுவே சைவசித்தாந்திகள் கொள்ளும் பொருளாகும். இக் கருத்துப்பற்றியே, ஏகமேவ அத்துவிதீயம் பிரமம் என்ற இடத்துக்கு நாம், ஏகமாகிய பிரமம் பல உயிர் களோடும் கலந்து நிற்கும் என்று பொருள்கொள்ள வேண்டும் என்க. பிரமம் தவிர வேறு இரண்டாவது பொருள் இல்லை என்று நாம் கருதிவிடுதல் பொருந்தா தென்பது தெரியப்படவேண்டும். இரண்டு பிரமப் பொருள்கள் இல்லை என்பது கருத்தாக நாம் கொள்ளுதல் ஏற்புடையதாம். இனிச் சிறப்பினது ஆய் என்பதனுல், அரக்குவமையால் காட்டப்படும் சிறப்பினையும் நாம் அறிதல் நன்ரும்.

உருகிய அரக்கினேடு சேர்த்த கற்பொடி, பிரிக்க முடியாமையால் ஒன்ருயும் - பிரிக்கமுடியாவிட்டா லும் கற்பொடிவேறு அரக்குவேறு என்று தெரிதலால் வேருயும் - அரக்கு முழுதும் கற்பொடி தெரிதலால் உடனுயும் நிற்கின்றது. அங்ஙனமே முதல்வனும் உயிர் களுடன் ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்பன். இங்ஙனம் நிற்றல் இறைவனது தடத்த இயல்பாம் எனத்தெரிதல் தேற்றமாம். இதனுல், அபேதத்துக்கு உடலுயிரும், பேதத்துக்குக் கண் அருக்கனும், பேதாபேதத்துக்கு உயிரறிவும் கண்ஒளியும் என்று மூன்றுவமைகள் உள்ளன என்பது கருத்தாகும். இதுகாறும் கூறப்பட்டவைகொண்டு பிரிவு அரும் அத்துவிதம் என்னும் தொடருக்குரித்தான சிறப்புப் பொருள் மயக்கமற நம்மால் மனங்கொள்ளப்படல்

வேண்டும் என்பது தெளிவாம். " ஒன்றும் இரண்டும் இலதும் ஆய் ஒன்ருக நின்று ... சிவமாதல் சித்தாந்த சித்தியே " என்பது திருமந்திரம்.

### வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத்திறன் :

சகல மார்க்கங்களும் இறைவனை அடைவிப்பன வாகும் என்பதே உண்மை. மார்கங்களுக்குள் மாறு பாடு காணப்பட்டாலும் அவற்றின் குறிக்கோளில் மாறுபாடு ஒரு சிறிதும் இலதாம். ஆதலின், உலகின் அனைத்து மார்க்கங்களுடைய குறிக்கோளும் ஒன்றுபட இருக்கும்வண்ணம் ஆதியில் இறைவனே பொதுவாக வேதங்களைச் சொல்லியிருக்கவேண்டும். இதனுலே தான் வேதம் பொதுவானது எனக்கூறப்படுகின்றது. "வேதத்தின் ஓதத்தகும் அறம் எல்லாம் உள" என்பது திருமூலர் கருத்தாகும். ஆனுல், காலம் இடம் முதலான வேறுபாடுகளுக்கேற்ப வேதங்களின் வாசகங்கள், பயனுகிய குறிக்கோளுக்கு மாற்றம் ஏற்படாதவித மாய் முனிவர்களால் சிந்தித்து அமைக்கப்பட்டன. இந்தச் சிந்தனைத் தெளிவுரைகள் வேதாந்தம் எனப் படும். அதாவது, ஞானபாதப்பொருளுக்கு இயைய வேதவாசகங்களை முறைப்படுத்தியிருத்தல் ஆகும். ஆதலால், சிறப்பான கோப்புமுறைப்பட்ட வேதாந்தம் சிறப்புடையதாகப் பாராட்டப்படுகிறது. இத்தகைய கோப்புமுறைக் கூற்றுக்களைத் தத்தம் மனப்போக் கின்படி பொருட்படுத்தி முடிவில் மலைப்புண்டாகச் செய்யாமல் இருக்கும்பொருட்டே வேதாந்தத்தெளிவு எனப்படும் ஆகமங்கள் இறைவனுல் அருளிச்செய்யப் பட்டன. இவ்வாகமங்கள் உயிர்களின் பக்குவ வரிசை கட்கேற்பச் செய்யப்பெற்றவை ஆதலின் இவற்றை

யெல்லாம் ஒருநெறிப்படுத்து உபதேசித்தல் அவசிய மானதாயிற்று. இங்ஙனம் ஒருநெறிப்படுத்து உப தேசிப்போரே குருமார்களாவர். உயிர்களின் உய்தி ஒன்றே இவர்களின் நோக்கமாகுமாதலால், இவர்கள் தொகுத்துச் சொல்வது சிவநெறி எனப்படுவதாயிற்று. ஆதலால், உபதேசம் பெறுவோர்க்கு வேதம் - வேதாந்தம் - ஆகமம் - ஆகமாந்தம் ஆகிய இவற்றின் உண்மை ஒன்றே என்ற திடஞானம் ஏற்படும்.

இந்தத் திடஞானத்தை அடிப்படையாக உடைய நெறியே திருநெறி என்றுரைக்கப்படுவது. எனவே, திருநெறிக்கு மாறான நெறி எதுவும் இல்லையாயிற்று. இதுதான் சைவசித்தாந்தத் திறன் ஆகும். இதனால், சைவசித்தாந்தம் என்பது ஒரு தனிப்பட்ட குறுகிய சித்தாந்தமன்றெனவும், வேதம் முதலான யாவற்றின் நெறியையும் விரோதபாவம் இல்லாமல் ஒற்றுமைப் படுத்தித் தன்னுட்கொண்டிருப்பதெனவும் நாம் தெரிய வேண்டும். இங்கே ஆசிரியர், தொகுத்து, "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத்திறன்" என்று கூறிய தைத்தான், இனிமேல் வகுத்தும் விரித்தும் சிவப் பிரகாசம் என்னும் நூலாகச் செய்தருளுகின்றாராவர். இந்த ஒழுங்கு நமக்குப் புலனுமாறுதான் திருமந்திர நூலிலே, வேதச்சிறப்பு - ஆகமச்சிறப்பு - குருபாரம் பரியம் - என்கிற அதிகாரங்கள் வரிசையாக வைக்கப் பட்டுள்ளனவாகும். "உடலான ஐந்தையும், ஓராறும், ஐந்தும் - மடலான மாமாயை, மற்றுள்ள நீவப் - படலான கேவல பாசம் துடைத்துத் - திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே" என்னும் திருமந்திரப் பாடற்கருத்து இங்குப் பொருத்திப்பார்த்தல் தெளிவு தருவதாகும்.

**இங்குத் தெரிக்கல் உற்ரும் :**

இருட்டில் உழல்பவனுக்கு விளக்கைக் கொடுத்துதவவேண்டும். பசிச்சோர்வுள்ளவனுக்குச் சோறும் நீரும் உதவவேண்டும். வெள்ளத்தில் தவிப்பவனுக்குத் தெப்பத்தை உதவுதல்வேண்டும். நோயால் அவதியுறுவோனுக்கு நல்மருந்து உதவவேண்டும். இவ்வகை உதவிகளெல்லாம் அறச்செயல் எனப்படும். இவ்வாறே மாயைக்குள் அகப்பட்டு, மலச்சோர்வுற்றுப் பிறப்பு இறப்பு வெள்ளத்துள் சிக்கிக்கொண்டு வினையால் வருந்தும் நமக்கு ஞானம் உதவப்பட வேண்டியுள்ளது. ஞானம் - மெய்ஞ்ஞானம் - பற்பல நூல்களில் ஆங்காங்கு வேண்டுமளவுக்குத் தக உரைக்கப்படுகின்றது.

மெய்ஞ்ஞானத்திறன்முழுதும் நாம் தெரியவேண்டின் வேதம், ஆகமம், சாத்திரம், புராணம், கலைகள், இதிகாசங்கள், இவை கூறும் பொருளுரைகள் ஆகிய யாவற்றையும் ஐயம் திரிபற நாம் கற்றுத் தீரவேண்டியுள்ளோம். அப்படிச் செய்வதற்கான ஆயுளோ, ஆற்றலோ, அறிவோ, சற்குரு அருளோ நாம் பெற்றிலம். இத்துன்பம் நம்மில் பெரும்பாலோருக்கும் இருத்தலை அறிந்தே இந்த நூலாசிரியர், நாம் அறிய வேண்டிய உறுதி அனைத்தையும் ஒருசேர இந்தச் சிவப்பிரகாசம் என்னும் ஒரு நூலிலே தெரிவித்தருளுகின்ருர். இவ்வாசிரியரே செய்தளித்துள்ள வேறு ஒவ்வொரு நூலிலே ஒவ்வொரு பொருள் விரித்துரைக்கப்படுவது ஆயினும், இந்த ஒரு நூலிலே யாவற்றையும் அருளிச்செய்திருக்கின்ருராதலின், **இங்குத் தெரிக்கல் உற்ரும்** என்றுள்ளார். ஆதலின், சித்தாந்த

அஷ்டகத்துள்ளும் இவ்வொருநூலே ஓதின் அமையும் என்பது கருத்தாகும். பிறநூல்களை ஓதுங்கால் ஏற்படும் யாவகை மயக்கங்களையும் - இருளையும் - இந்நூல் போக்கியுதவும் என்றல் ஒருதலை ஆகும். பிரகாசம் என்னும் சொல்தானே இவ்வுண்மை உணர்த்தி நிற்பதாகும் என்னலாம். இவற்றால், சித்தாந்தத்தெளிவை நாடி நிற்போர் எவராயினும் அவரெல்லாரும் தட்டாமல் இந்த நூலை ஓதியேதீரவேண்டும் என்பது முடிந்த முடிபாம் என்க.

## 8, தீக்கைமுறைமை

(காவலன் அருள்புரிகடன்)

*மூவகைஆ ருயிர்வர்க்கம் மலத்தார் கன்மம்*
*மூலமலத் தார்மூன்றும் உடையார் அன்றே*
*நிவகமாம் எனஉருவாய் வந்து நாதன்*
*திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்*
*பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்*
*பரவிவரும் அவுத்திரியால் பாச நாசம்*
*மேவஅருள் உதவும்அவுத் திரிஇரண்டு திறனும்*
*வியன்கிரியை ஞானம்என விளம்பு மாறே.*

### பொழிப்புரை

ஆணவமலம் ஒன்றே உடைய விஞ்ஞானகலர், ஆணவமலமும் கன்மமலமும் உடைய பிரளயாகலர், மூலமலம் கன்மமலம் மாயாமலம் என்னும் மூன்று மலமுமுடைய சகலர் (ஆக) நிறைந்த ஆன்மவர்க்கம் மூன்றுவிதப்பட்டிருக்கும். இவர்க்கு இவை அநாதியே. அம்மூவகையாருள் பக்குவரான சகலர்க்குப் பரமசிவன் பார்வை இட்டு மற்றென்று பிடிக்குமாறு

போலத் திருமேனிகொண்டு வந்து, திருநோக்காலும், பரிசத்தாலும், வாசகதீட்சையாலும், மானததீட்சையாலும், சாத்திர தீட்சையாலும், யோக தீட்சையாலும் சொல்லப்பட்டு வருகின்ற மூவகை அவுத்திரி தீட்சையாலும் மும்மலங்களும் நாசத்தை அடைய அநுக்கிரகத்தைக் கொடுப்பன்.

நிருவாணமான அவுத்திரிதீட்சையானது பெரிய கிரியாவதி, ஞானவதி என்று சொல்லும்படி இரண்டு வகையாம்.

## விளக்கவுரை

### ஆருயிர் வர்க்கம் மூவகை :

'உரைதரும் இப்பசுவர்க்கம் உணரின் மூன்றும்' என்பது சித்தியார் வாசகம். "மூவகை ஆருயிர் வர்க்க இயற்கை" என்பது திருமந்திரம். பதியை உயிர்கள் அடைதற்கு உரியர். உயிர்களிடம் இவ்வுரிமை இல்லாவிட்டால் பதியே தேவையின்ரும். இதனுல் பதியினை அடையும் அதிகாரிகள் உயிர்கள் எனத் தெரியலாம். உயிர்கள் எண்ணில்லாதனவாம். அவை நித்தியமானவை. அவற்றின் இருப்பிடம் மாயை ஆகும். இம்மாயாபந்தத்தை விட்டுநீங்கிய உயிர்கள் இறைவனேடு கலந்து இன்புற்றிருப்பனவாகும். இதனுல் மாயையுள் இருக்கும்வரை உயிர்கட்குத் துன்பம் உண்டு என்பது தெரியலாம். பொதுவாக, இவ்வுலகில் நம் வாழ்க்கையில் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின் எல்லாருக்கும் துன்பம் ஒரேமாதிரியாக இல்லை. இன்பமும் ஒரேமாதிரியாக இல்லை. இதற்கான காரணம் உயிர்களாகிய நம்மிடம் உள்ள குற்றத்தின் ஏற்றத்

தாழ்வுதான். குற்றத்தை முற்றும் போக்கிவிட்ட உயிர்களின் இன்ப அநுபவம் ஒரேமாதிரியில் இருப்பதாகும். அப்போது துன்பம் என்பது அடியோடு இல்லை. இப்படி நமக்குள் இருப்பதுபோலத்தான், மாயையுள் இருக்கும் எல்லா உயிர்வருக்கங்களிலும் இன்பதுன்ப தராதரம் உள்ளது. இந்தத் தராதரங்களைப் பரிசீலனைசெய்த ஞானிகள், எல்லாவகை உயிர்களையும் மூன்று விதத்தில் பிரித்து ஓதியுள்ளார்கள். ஒருயிர் முத்தி அடைந்துவிடுவதனாலே உயிர்த்தொகையில் ஏதும் எண்ணிக்கைக் குறைவு என்பது ஏற்பட்டு விடாது. அவ்வர்க்கம் பெருகிக்கொண்டேதானுளது. இதனை நோக்கியே இந்த நூலாசிரியர், ஆர் உயிர் என்றுள்ளார். ஆர்தலாவது எப்போதும் நிறைந்திருத்தலாம்.

மற்றும் இவ்வுயிர்கள் மாயையைப் பற்றுக்கோடாகக்கொண்டிருக்கையில் மாயாபுவனங்களில் வாழ்கின்றன. மாயையை அகற்றி இறைவனைப்பற்றுக்கோடாகக்கொண்டுவிட்டபிறகு, இறைவியாபகத்தில் வியாப்பியமாகத்தங்கிவிடுகின்றன. எனவே, உயிருக்கு யாதேனும் ஓரிருப்பில் தங்கியிருத்தலே தொழிலாகிறது. அழிந்துபோவதென்பது ஒருபோதும் இல்லை. இங்ஙனம் யாண்டும் தங்கியிருத்தலே உயிர்களின் தொழிலாயிருத்தல்பற்றி ஆசிரியர், ஆர் உயிர் என்றுள்ளார் எனினும் பொருந்தும். ஆர்தல் தங்குதலும் ஆம்.

உயிராக எப்போதும் இருக்கும் இயல்பு ஆன்மவர்க்கத்துக்கு உள்ளதாகும். குற்றத்தை உடைத்தாயிருத்தலும் முத்திபரியந்தம் உள்ளது. குற்றத்தை நீக்கிக்கொள்ளற்பொருட்டுப் பதியை நாடிக் கிடக்கும்

தன்மையும் உயிர்கட்கு உண்டு. பேரின்புற்று அழுந்திக்கிடக்கும் இயல்பும் எல்லா உயிர்கட்கும் முத்தி நிலையில் உள்ளது. ஆதலால், இப்படிப் பல தன்மைகளில் உயிர்கள் ஒன்றோடொன்று ஒப்புமைபெற்றிருப்பதை நோக்கியே ஆசிரியர் வர்க்கம் என்றுள்ளார். தன்மைகள் பெரும்பாலும் ஒத்திருக்கும் இனமே வர்க்கம் எனப்படும்.

இவ்வாறெல்லாம், உயிர்கள் பெரும்பான்மையான ஒப்புமை பெற்றிருந்தாலும், சில சிறப்பான வேறுபாடுகளும் தம்முள் உடைத்தாயிருக்கின்றன. இந்த வேறுபாடு கலையினுல் அமைவதாகும். கலை முதலான தத்துவங்களோடும் கூடுதலும், விடுதலுமான முறைமைபற்றி உயிர்வருக்கம் மூவகைப்படலுற்றது என்பர்.

கலர் என்பது கலையை உடையவர் என்று பொருள்தரும் சொல்லாம். ஆகவே, கலை முதலான தத்துவங்களோடு கூடி இருக்கின்ற ஆன்மாக்கள் சகலர் எனப்படுவாராவர். கலை முதலான இந்தத் தத்துவக் கூட்டுறவைப் பிரளயத்தில் நீக்கப்பெறும் ஆன்மாக்களைப் பிரளயாகலர் என்பர். இப்படியே, கலை முதலிய தத்துவங்களை விஞ்ஞானத்தால் நீக்கப் பெறும் ஆன்மாக்களை விஞ்ஞானுகலர் என்பர். எனவே, கலை முதலனவோடு கூடுதலும் நீங்குதலும் ஏதுவாக இப்பெயர்கள் அமைந்துள்ளன என்பர். பிரளய அகலர், விஞ்ஞான அகலர் என்பன பின் இரு பெயர்களையும் பிரிக்கும் முறை ஆம். இவ்விருதிறத்தரும் மேற்சொல்லப்பட்ட திறத்தால் அறுதல் துணிபாதலால் அற்றவர் என்றே இறந்தகாலத்தால் பெயரிடப்பட்டனர் ஆவர்.

அநாதி கேவலத்தில் ஆன்மாக்கள் யாவும் ஆணவ மலத்தால் மறைப்புண்டுகிடக்கும். மலத்தின் சத்தி பலவாம். ஆதலால், மறைப்பும் பல்வேறு வகைப் படும். மலத்தால் மறைக்கப்பட்டுக்கிடக்கும் ஆன்மாக் களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுள் ளங் கொண்டருளுவன். அப்படிக் கொள்ளும்போது விஞ்ஞானகலப் பிராப்தியுடைய ஆன்மாக்களை விஞ் ஞானத்தால் ஆணவமலநீக்கம் செய்வன் இறைவன். விஞ்ஞானம் என்பது விசேடஞானம் எனப் பொருள் படும். அதாவது பதிஞானமாகும். இப்பதிஞானத்தை உணர்த்துகைக்கு விஞ்ஞானகலர் விஷயத்தில் கன்ம மல மாயாமலங்களின் துணை தேவை இல்லையாம். சுத்தமாயாகாரியம் ஒன்றன் கூட்டுறவே போதுமான தாகும். சுத்தமாயாகாரியம் என்பது மயக்கத்தையும் விருப்பு வெறுப்பையும் உண்டுபண்ணாது. விசேட அறிவையுண்டுபண்ணும். விஞ்ஞானகலருக்கு ஆணவ மல பரிபாகத்தினாலேயே போகானுபவம் கைகூடுவ தாகும். இறைவன், இவர்கட்குப் பதிஞானத்தை அறிவினுள் அறிவாய்மட்டில் நின்று உணர்த்தினாலே போதும். இது நோயின்வகைக்கும் அளவுக்கும் உடம் பின் கூறுபாட்டிற்கும் வன்மைக்கும் காலத்துக்கும் தக்கபடி மருத்துவர் நோயாளிக்கு மருந்துப் பிரயோகம் செய்வதுபோலாம். அப்படிப் பதிஞானத்தை உணர்த் துவதற்குத் தக்கவிதமாக விஞ்ஞானகலருக்குச் சரீர மும் புவனமும் வேண்டுமாதலால் சுத்தமாயாகாரியங் களாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தை இறைவன் இவர்கட்கு அருளுவன். இப்படிக் கலாதி தத்துவங்களைப் பெற்றும் விஞ்ஞானத்தினால் அத்தத்து வங்களில் இவர்கள் கட்டுப்படுவதிலர். இதனாலேயே இவர்கட்கு விஞ்ஞானகலர் என்பது பெயராயிற்று

என்பர். ஆணவமலபந்தமொன்றே இவர்கட்கு இருத்தலின் இவர்களை ஒருமலமுடையர் என்பர்.

இந்தவிஞ்ஞானகலவர்க்கத்து உயிர்களும் பொதுவாக இருவகைப்படுவர். பக்குவர் அபக்குவர் என்பன அவ்விருவகைகளின் பெயராம். பக்குவராவார், மலபரிபாக மிகுதிப்பாட்டினாலே சிவனுடைய அநுக்கிரத்தைப் பெற்றுச் சாயுச்சியத்தை எளிதில் அடைவர். அபக்குவராகிய விஞ்ஞானகலர் மூன்றுவகையினராவர். அவர்கள் உத்தமர், மத்திமர், அதமர் எனப்படுவர். உத்தமராவார், அணுசதாசிவர் முதலியவர்களாய் சதாசிவதத்துவத்திலிருப்பவராவர். மத்திமர் ஆவார், அட்ட வித்தியேசுவரர் முதலியவராய் ஈசுவர தத்துவத்தில் இருப்பவராவர். அதமராவார், எழு கோடி தேவர்களாய் சுத்தவித்தியா தத்துவத்தில் வசிப்பவராவர். இங்குக் கூறப்படும் தேவர்கள் சகலவர்க்கத்துத் தேவரல்லர். இவர்கள் யாவரும் அதிகாரமுடையவர்கள். இவர்களுக்கு எடுத்த பிறவியன்றி வேறு பிறவி இல்லை. இக்கருத்துக்களை, "அறிந்தவர் தீர்ந்துகளினர், திராத்துகளர் முன்னர்ச் செறிந்தவர்; விஞ்ஞைக்கு நாயகர் எண்மரெனச் சிறந்தோர்; பிறிந்தவர் மந்திரராமெழுகோடியர்" என்னும் தத்துவவிளக்க நூலானும் அறியலாம். மற்றும், "விஞ்ஞானத்தோர்க்கு ஆணவமே மிகு தனு" என்றும், "விஞ்ஞானர் கேவலத்தாரது விட்டவர் - தஞ்ஞானர் அட்ட வித்தேசராஞ் சார்ந்துளோர் - எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர் - மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டு நின்றூரே" என்றும், "விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்" என்றும், "இரண்டாவதில் முத்தி எய்துவர் அத்தனை" என்றும் கூறும் திருமந்திரப்பாடல்

களாலும் வரிகளாலும் மேற்சொல்லப்பட்ட 'விஷயங்களை அறியலாகும். தொகுத்துரைப்பின் விஞ்ஞானகலர் எனப்படுவோர் நான்கு வகையினராவர் என்னலாம். ''விஞ்ஞானர் நால்வரும்'' என்பது திருமந்திரம். மற்றுமுள்ள பல விவரங்களும் விரிந்த நூல்களாலறியலாகும். இங்கு விரிப்பின் பெருகும்.

இனி, இரண்டாவது வர்க்கத்து உயிர்களைப் பிரளயாகலர் என்பர். இவர்கள் மூன்று வகைப்படுவர். இவர்களைப்பற்றி நூல்கள் கூறுமவற்றையும் சிறிதளவு தொகுத்துரைக்கலாம்.

பிரளயாகலர் இருமலம் உடையவராவர். ஆணவம், கன்மம் என்பன அவ்விரு மலங்களாகும். அதாவது, இவர்களுடைய ஆணவமலமானது கன்மமலத்தைக்கூட்டி நீக்கப்படுவதாகும் என்பதாம். அசுத்த மாயாகாரியம் அராகம்முதலிய தத்துவங்களாய் விருப்பு வெறுப்பை உண்டுபண்ணும். இந்தப் பிரளயாகலர்கள் தீவிரமும் தீவிரதரமும் ஆகிய சத்திநிபாதத்தைப் பொருந்துதற்கு உரியவராவர். ஆதலால், இவர்களுக்கு இறைவன், மான் மழு சதுர்ப்புயங்களுடைய திருமேனியோடு தோன்றி உணர்த்துவதாகிய நிராதார தீக்கை செய்து மலத்தை நீக்குவன். இவர்களுக்கு இறைவன் பிரளயத்தில் இத்தகைய தடத்தத் திருமேனிகொண்டு அருள்செய்தலால் பிரளயாகலர் என்ற பெயர் மருவியது என்பர். இவர்களுக்குக் கன்மமலம் இருத்தலினாலே ஒரு பிரளயத்துள்ளே சில பிறவிகள் உண்டு. பிரளயாகலர் மூவகையினராவர். ''மெய்ப் பிரளயாகலத் தஞ்ஞானர் மூவரும்'' என்பது திருமந்திரம் ஆகும். பிரளயாகலரில் பக்குவரானவர்களை மலபரிபாக

மிருதியினால் சிருட்டிகாலத்தில் சிவன் இரட்சித்தருளுவன். இவர்களுள் பரமுத்திபெறுபவர், அபரமுத்திப் பேறுடையவர் என்ற இருபிரிவுடையோர்கள் உண்டு. "பிரளயகாலத்திலுறு" எனவும், "பகர்தருமம் பிரளயாகலர்கள் தம்முள்" எனவும் தொடங்கிக்கூறும் சிவப்பிரகாச விகாசநூற் பாட்டுக்களாலும் இப்பிரிவினரைப்பற்றிய செய்திகளை அறிதல் கூடும். "இஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்" என்பது திருமந்திரம். மற்றுமுள்ள விரிவுகளெல்லாம் பெருநூல்களின்வாயிலாக அறிதல் எற்புடையதாகும். இனிச் சகலர்பற்றிய செய்திகளை அறிவோம்.

மூன்றும் வர்க்கத்தினரைச் சகலர் என்பர். இவர்களுடைய ஆணவமலமானது, கன்மமலம் மாயாமலம் என்ற இரண்டையும் கூட்டிப் போக்கப்படுவதாகும். எனவே இவர்கள் ஆணவம், கன்மம், மாயை என்கிற மூன்று மலங்களை உடையவர் ஆவர். இவர்கள், அசுத்தமாயா காரியமாகிய கலாதி தத்துவங்களாலான சரீரத்தை உடையவராவர். இவர்கள் பிரகிருதி மாயையுள் வைகுபவர். இவர்கள் மாயாமலமும் உடையவராதலால், மயக்கம் காரணமாகப் பிரளயம்வரை பல பிறவிகளை எடுத்துப் பிரளயத்தின்போது கலாதிகளுடன் ஒடுங்கிக்கிடந்து புனர் உற்பவம் ஆகும்போது திரும்பவும் தோன்றி இப்படியே பிறப்பு இறப்புகளுட்பட்டு உழல்வர். தேவர்கள் முதலாகத் தாவரம் ஈருகும் எவ்வகை உயிரும் இவ்வருக்கத்தைச் சார்ந்தனவேயாகும். ஆதலால், நாம் சகலர் இனத்தையே சார்ந்தவராவோம். நாம், பக்குவமுற்றபோது, இறைவன் குருமூர்த்தியாய்த்தோன்றி, சாதாரதீக்கை வாயிலாக அருள் செய்யப்பெறுவோம். அங்ஙனம், ஆட்கொள்ளப்பட்ட

சகலர்களாவார், பிரகிருதி மாயாபுவனப் பற்றினை ஞானத்தால் நீக்கிக்கொள்வராயின், சகலரில் பிரளயா கலர் எனப்படுவர். இத்தகையவரே, இறைவனுடைய தடத்தத் திருமேனியைத் தரிசித்தல்கூடும். பிரகிருதி மாயாபுவனப் பற்றோடு அசுத்த மாயா புவனப்பற்றினை யும் ஞானத்தால் இவர்கள் நீக்கிவிடுவராயின் சகலரில் விஞ்ஞானகலராவர். இவர்களுக்கே இறைவன் அறி வுக்குள் அறிவாய்நின்று உணர்த்துவன். இத்தகையவர் களுக்கு மேற்பிறவி இல்லையாம். சகல வர்க்கத்தவரும் மூவகையினரே ஆவர். "சகலத்தின் அஞ்ஞானர் மூவரும்" என்பது திருமந்திரம். "மும்மலமொடுறு சகலன்" என்பது சகலரியல்புரைக்கும் சிவப்பிரகாச விகாசப்பாட்டாகும். எழுவகைப் பிறப்பும் எடுப்பவர் இவர்கள். 224 புவனங்களிலும் உழல்வர். "எண்ணும் வினைப்பயனால்" என்னும் தத்துவவிளக்கப் பாடல் உரை இங்குப் பார்த்தல் தகும். இதுகாறும் ஆருயிர் வர்க்கத்தின் மூவகை பற்றி இயலுமளவு கூறப் பட்டது.

மலத்தார் கன்மமூலமலத்தார் மூன்றும் உடையார் அன்றே :

விஞ்ஞானகலர் ஆணவமென்னும் ஒரு மலமே உடையர். இவர்கள் ஞானத்தால் கலாதியற்றவர் ஆவர். மலத்தார் என்பது இவரைக் குறிப்பதாகும். பிரளயாகலர் என்போர், ஆணவம் கன்மம் என்கிற இரண்டு மலங்களை உடையவராவர். இவர்கள் பிரள யத்திலே அவ்விரண்டும் அறப்பெறுபவர் ஆவர். ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்க ளோடும் கூடியவரே சகலர் ஆவர். இதனால், இவர்க

ளுடைய மலத்தின்வன்மை எத்தகையதென்பது தெரியப்படும். இவர்கள் குருவருளால் இம்மும்மலங்களும் அறப்பெறுவர். கன்ம மூலமலத்தார் என்பது பிரளயாகலரையும், மூன்றும் உடையார் என்பது சகலரையும் குறிக்கும் சொற்றொடர்களாகும்.

இனி, அன்றே என்பதனால், இவர்கட்கு இம்மலங்கள் அநாதியே உண்டு என்பது தெரியப்படும். இதனால் அநாதியே மலமற்ற ஆன்மா என்பதொன்றில்லை என்பது உணரப்படும். இங்ஙனம், பாசத்தோடு அநாதியே பிணிப்புண்டிருத்தலால் ஆன்மாக்களைப் பசுவர்க்கம் என்பர். "பசுத்துவத்தோடிசைந்த மூவகை உயிரும் பசுவாம் என்பர்" என்பது சிவப்பிரகாச விகாசம். மேற்கூறப்பட்ட விதமாகப் பார்த்தால் இம் மூவகை ஆருயிர்வர்க்கமும், விஞ்ஞானகலர் நால்வராகவும், பிரளயாகலர் மூவராகவும், சகலர் மூவராகவும் கூறப்பட்டு மொத்தம் பதின்மராகக் கணக்கிடப்படும். "விஞ்ஞானர் நால்வரும் மெய்ப்பிரளயாகலத் - தஞ்ஞானர் மூவரும் தாங்கு சகலத்தின் - அஞ்ஞானர் மூவருமாகும் பதின்மராம் - விஞ்ஞான ராதியர் வேற்றுமைதானே " என்பது திருமந்திரம். இம்முறையன்றி, வேறுவிதமாகக் கணக்கிட்டு ஒன்பதின்மர் என்பதும் உண்டு. "விஞ்ஞானராதிகள் ஒன்பான் வேறுயிர்களே" என்பது திருமந்திரம். மற்றும் விவரங்கள் பவுட்கரமுதலான நூல்களால் அறியலாகும்.

**தீவகமாம் என உருவாய் வந்து நாதன் - 1 திருநோக்கால், 2 பரிசத்தால், 3 திகழும்வாக்கால், 4 பாவனையால், 5 மிகு நூலால், 6 யோகப்**

**பண்பால், 7 பரவிவரும் அவுத்திரியால் - பாச நாசம் மேவ அருள் உதவும் :**

இறைவன், உயிர்கட்குச் செய்யும் உதவிகள் அனந்தமாயினும், அவ்வுதவிகள் யாவும், உயிர்களின் பாசத்தை நாசம் செய்வதற்கே காரணமாயிருப்பன வாகும். இந்தப் பாசநாசம் செய்யும் உதவியினை இறைவன், தனது அருள்தன்மையால் செய்கின்றான். எந்தவகை உயிருக்கும் இறைவனருளே முன்னின்று மலநீக்கம் செய்கின்றதாகும். ஆதலால், எந்த உயிரும் இந்தவிதமான இறையருளுக்கே எப்போதும் ஏங்கி அழவேண்டும். இதற்கு இறையுண்மையில் முழு நம் பிக்கையும் இறையருளில் முழுத்தாகமும் உயிர்கள் பெற்றிடவேண்டும். இவ்வகை நம்பிக்கையும் வேட் கையும் மீதூரப்பெற்று அழுதுகிடப்பதே சகலராகிய நாமும் செய்யற்பாலதாகும். ''அழுதால் உன்னைப் பெற லாமே'' என்ற வாசகம் இக்கருத்தை நமக்கு உணர்த் துவதேயாகும். நாம் மனமார விரும்பாத ஒன்றை இறைவன் ஒருபோதும் நம்மீது திணிப்பதில்லை. நாம் விரும்பும் ஒன்றை இறைவன் ஒருபோதும் நமக்கு உதவாமல் ஏமாற்றுவதுமிலன், ஆதலால், நாம் நம் பாசம் முற்றும் நீங்கி நலமுறவேண்டும் என நயப்போ மாயின் இறையருள் அதனை நிறைவேற்றிவைத்தே தீரும். இதனையே, **பாசநாசம் மேவ அருள் உதவும்** என்ற வாக்கியம் கூறுகின்றதாகும்.

பாசப்பிணிப்பு எல்லா உயிர்கட்கும் ஒரேவிதமாக இல்லை. அந்த அந்த உயிர்களின் அறிவுத்தகுதி, உறை விடம், விருப்பு வெறுப்பு, மற்றுமுள்ள சூழ்நிலைகள் ஆகிய இவைகட்கு ஏற்பப் பாசப்பிணிப்புப் பந்தம்

செய்கின்றது. குற்றம் ஒன்றேயாயினும், குற்றத்தை இழைத்தவருடைய வயது, மனப்பான்மை முதலான பல காரணங்கள்பற்றித் தண்டனையின் அளவு வேறு படுவதுபோலவே பாசபந்த அளவு வேறுபாடு நிகழ் கின்றது. இந்த நியாயத்தின்படி பார்ப்போமாயின், மேலே சொல்லப்பட்ட மூவகை உயிர்வர்க்கத்தா ருடைய பாசப்பிணிப்பின்தரத்தில் வேறுபாடு இருப் பதும், அந்தத் தரங்கட்கேற்பப் பாசநீக்கமுறைகளில் வேறுபாடு இருப்பதும் அவசியமே என்பது புலப் படாமற்போகாது.

இதன்படி மூன்று வகையான உயிர்வருக்கத்தில் ஒருசாரராகிய விஞ்ஞானகலர், ஏனைய உயிர்களினும் பெரிதும் சிறந்து விளங்குவதால் இவர்களுடைய பாச நீக்கமுறையில் இறைவன், அவர்களுடைய தேவைக் கேற்ப அருள்புரிகின்றானவன். இவர்களுக்கு உள்ள தீவிரதர சத்திநிபாதத்திற்கு ஏற்ப இறைவன் இவரறி வின் உள்ளீடாக நின்று உணர்த்தியருளுகின்றான். இங்ஙனம் உணர்த்துகையில் இறைவன், குருமூர்த் தத்தை ஆதாரமாகக்கொள்வதில்லை. தனது சொரூபத் திருமேனியாகிய ஞானசொரூபியாய் அறிவின் உள் நின்றே உணர்த்துகிறான். இங்ஙனம் ஏதொன்றையும் ஆதாரமாகக் கொள்ளாமல் இறைவன் விஞ்ஞானகல ருக்கு அருள்புரிதலை நிராதாரதீக்கை என்பர். நிராதார தீக்கையின் இரண்டுவகைகளில் இது, சொரூபத்திரு மேனியால் செய்தருள்வதாகும். பொன்னை நெருப்பி லிட்டுச் சூடேற்றுவதால் மாசு நீங்கப்பெற்று மாற் றுயர்ந்து விளங்கும். இரும்பைச் சூடேற்றினால் பொன்னாகிவிடாது. பொன்னையொத்த சிறப்புடைய ஞானமுடையோர் விஞ்ஞானகலராவர். ஆகையால்,

அத்தகையவர்களுடைய அறிவினுள் பிரகாசத்தைச் செய்தாலே அவர்களுக்குப் பதிஞானம் முழுவதாக ஏற்பட்டுவிடுகிறது; மலசத்தி முழுவதும் தேய்ந்து போகிறது. எனவே, விஞ்ஞானகலருக்குச் சிவம் அவர்களறிவினுள் நின்று பிரகாசமூட்டுவதனுலே மல வாசனையிருள் முற்றும் அற்றுப்போய்விடுகிறதென்பது தெரியலாம். இதனையே, **தீவகமாம் என வந்து பாச நாசம் மேவ அருள் உதவும்** என்ற வாக்கியம் புலப் படுத்துகின்றதென்னலாம். இதனால், சிவப்பிரகாசமே பவப்பேரிருளைப் போக்குகின்றதென நாம் தெரியலாம்.

விஞ்ஞானகலரை அடுத்து நிற்கும் உயிர்வருக்கத் தினர் பிரளயாகலர் ஆவர். இவர்கள் தீவிரம், தீவிர தரம் என்னும் இரண்டுவிதமான சத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியராவர். இவர்களுக்கு, இறைவன் மான்மழு சதுர்ப்புஜங்களோடு கூடிய திருமேனியுடன் தோன்றி முன்னின்று உணர்த்தியருளுவன். இங்ஙனம் செய்தற்கண், வேறொரு குருமூர்த்தத்தை இறைவன் ஆதாரமாகக்கொள்வதிலன். தன்னுடைய தடத்தத் திருமேனியோடு செய்தருளுவதனால் இது, நிராதார தீக்கையின் இரண்டாம் வகை ஆகும்; இதனை, **உருவாய் வந்து பாசநாசம் மேவ அருள் உதவும்** என்ற இடம் தெரிவிப்பதாகும்.

இனி, மூன்றும் வகையாகும் உயிர்வர்க்கத்தினரே சகலர் எனப்படுபவர் ஆவர். சகல வருக்கத்து ஆணவ மலம் கன்மமலம், மாயாமலம் இரண்டையும் கூட்டி நீக்குவதற்கான அத்துணை மறைப்புச் செய்வதாகும். அசுத்தமாயா காரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்துப் பிரகிருதி

மாயையில் இவ்வகை உயிர்களை வசிக்கச் செய்து, இறைவன், பக்குவம் உற்றபோது குருமூர்த்தியாய்த் தோன்றி நின்று அருள்செய்வன். இவர்கட்கு மாயா மலமும் இருத்தலால் மயக்கம்பற்றிப் பிரளயம் வரையில் இவ்வகை உயிர்கள் பல பிறவிகளை எடுக்கும். பிரளயத்தின்போது கலாதிகளுடன் ஒடுங்கிக்கிடந்து புனர் உற்பவம் ஆகும்போது மீளவும் தோன்றி இப்படியே பிறப்பிறப்புக்களிற்பட்டுச் சகலர் உழல்வர். இவர்கட்கு இறைவன் குருமூர்த்தியை ஆதாரமாகக் கொண்டு தீக்கை செய்தலால் இவர்கட்கியற்றப்படும் தீக்கை சாதார தீக்கை எனப்படும். சகலவர்க்கத்து உயிர்கள் பிரகிருதிமாயாபுவன வாசிகளாதலால், நால்வகைச் சத்திநிபாதத்தையும் இவர்கள் பொருந்துவதற்கு உரியவராவர். மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிர தரம் என்பன நால்வகைச் சத்திநிபாதங்களாம். இந்தப் பக்குவநிலைகட்கு ஏற்றவாறு திருவருட்சத்தி நான்கு கூறுபட்டுப் படிப்படியே மலவாதனை விடுதலைசெய்யும். "பூவலயந்தனில்நின்று நீங்காச் சகலர்க்கு அவர் போல முன்னின்று மும்மலம் தீர்த்து ஆட்கொள்கை அன்னவனுக்கு ஆதிகுணம்" என்பது போற்றிப் பஃறொடை மேற்கோளாம்.

இனிக் குருவாய்வந்து சகலர்க்கு அருள்செய்யும் தீக்கை முறைமைகளை ஏழுவிதமாக ஆசிரியர் குறித்துள்ளார். அவற்றுள் முதலாக நிற்பது நயனதீக்கை ஆகும். திருநோக்கால் என்பது இதனைக் குறிப்பதாம். மீனானது தன்னுடைய சினையைப் பார்த்து நிற்கும். அப்போது அந்தச்சினை அந்த மீனின் சொரூபம்பெறும். அப்படியே ஆசாரியன் உண்மையிலே சித்தத்தை வைத்து ஞானதிருட்டியாலே மாணாக்கனைப்பார்ப்பன்.

அப்போது அத்துவாக்களில் கட்டுப்பட்டிருந்த கன்மங்கள் தகிக்கப்படும், இராகுவினுல் விழுங்கப்பட்ட சந்திரன் பையப்பைய விடுதலை அடைந்து வெளிப்படுவதுபோல மலத்தின் மறைப்புண்டிருந்த ஆன்மா மலபந்தங்களின் நீங்கும். கண்ணுல் பார்த்தல் என்பது பொதுவாக மூன்று வகைப்படும். அவை அநுக்கிரகம், நிக்கிரகம், பொது என்பனவாம். அவற்றுள் இங்குச் சொல்லப்படுவது அநுக்கிரகம் எனப்படும் சட்சுதீக்ஷையாம்.

அடுத்துக் கூறப்பட்டுள்ளது பரிசதீக்ஷை ஆகும். அதாவது, ஆசிரியன் தனது வலதுகையில் சிவபெருமானைப் பாவனைசெய்து பூசித்து அந்தக் கையினுல் மாணுக்கன் தலையைப் பரிசித்தல் ஆகும். இதுவும் மலவாதனைபோக்குவதைப் பயனுக உடையது ஆகும்.

திகழும் வாக்கால் என்பது வாசகதீக்ஷை எனப்படும். பதி, பசு, பாசத்தின் உண்மைகளை விளக்குவதான பஞ்சாக்கர மந்திரத்தை மாணுக்கனுடைய வருணுச்சிரமத்துக்கு ஏற்றவாறு உபதேசித்தலே வாசக தீக்ஷை எனப்படும். இதனுல் முப்பொருள் உண்மை தெளிவுறுத்தப்படுவதாகும்.

பாவனையால் எனப்படுவது மானததீக்ஷை ஆகும். ஆசிரியன் தனது யோகாப்பியாசத்தாலே மாணுக்கனுடைய இதயத்திலே பிரவேசித்து, அம்மாணுக்கனுடைய அறிவில் சிவமாந்தன்மை விளங்கவைத்தல் இதுவாகும். இதனுல் பிரபஞ்சப்பற்றறுவது பலனும்.

மிகு நூலால்: இது சாஸ்திரதீக்ஷை எனப்படுவதாம். அதாவது ஞானசாத்திரப் பொருள்களையெல்லாம்

தொகுத்துப் பதிபசுபாச இலக்கணங்களையும் சிவசீவர்களுடைய ஐக்கியத்தையும் நூல்வழியாகப் போதித்தலாகும். இதனால் தெளிவுபிறத்தல் பயனும்.

யோகப்பண்பால் என்பது யோகதீக்ஷை என்று சொல்லப்படுவதாகும். சிவயோகத்தை அப்பியாசம் செய்யும்படி மாணாக்கனுக்கு உபதேசித்தல் இத்தீக்ஷையாகும். இதனால் மனோவிகாரம் அறும். இப்படிக் கூறப்பட்ட ஆறுவகைத் தீட்க்ஷைகளும் ஒருவகை. ஔத்திரி எனப்படும் தீக்ஷைக்கு உரியவரல்லாதவர்களுக்கு இந்த ஆறு தீக்ஷைகள்மட்டும் செய்யப்படும். இனி, மற்றொருவகையான தீக்ஷையாவது ஔத்திரி தீக்ஷையாகும். இது ஓமசகிதம் செய்யப்படுவதனால் ஔத்திரி எனப்படலானது.

இந்த ஔத்திரிதீக்ஷை இருதிறப்படும். அவை, ஞானவதி கிரியாவதி என்பனவாம். ஞானமார்க்கம், கிரியாமார்க்கம் என்பன அவற்றின் பொருளாகும். குண்டம், மண்டலம், அங்கி, நெய், சுருக்கு, சுருவம் முதலனவற்றை மனத்தால் கற்பித்துக்கொண்டு விதிப்படி ஆகுதி முதலான காரியங்களை மனத்தே செய்வது ஞானவதி ஆகும். அவையாவையும் புறத்தே அமைத்துக்கொண்டு அக்கிரியையைப் புறத்தே செய்வது கிரியாவதி எனப்படும். இன்னமும் இந்த ஔத்திரி தீக்ஷையில் உட்பிரிவுகள் உண்டு. இதனாலேயே பரவிவரும் ஔத்திரியால் எனப்பட்டது. இத்தீக்ஷைகளின் பலன் மும்மலங்களும் நாசமடையச் செய்வதாகும். மற்றும், பரவிவரும் என்பதனால் சத்தியோடுகூடிச் செய்யும் சாம்பவதீக்ஷையும் கொள்ளப்படும். இப்படி ஔத்திரிதீக்ஷை, ஞானமார்க்கம் கிரியாமார்க்கம் என

இரண்டு வகைப்படும் என்பதை ஒளத்திரி இரண்டு திறனும், வியன் கிரியை ஞானம் என விளம்புமாறே என்ற வாக்கியத்தால் நாம் அறியலாகும். பின்னதை நிர்வாண ஔத்திரிதீக்ஷை என்பர். மற்றும், இதன் விவரங்கள் அடுத்த செய்யுளிலும் கூறப்படும். இச்செய்யுளால் சிவப்பேற்றுக்குரிய உயிர்கள் இன்னவை என்பதும், சகலர்க்குப் பரமசிவன் எப்படி அனுக்கிரகம் பண்ணுகிறன் என்பதும் சொல்லப்பட்டன என்க. "பலவிதம் ஆசான் பாச மோசனம்தான் பண்ணும்" என்னும் சித்தியார்ச்செய்யுள் ஈண்டுக் காண்டல் நன்றும்.

## 9. ஔத்திரி தீட்சையின் முப்பகுதிகள்

*விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனுதி காரம்*
*மேவும்யோ காதிகாரம் எனச்சமய விசேடம்*
*வரும்பொருவில் நிருவாணம் மந்திரங்கள் பதங்கள்*
*வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்*
*இரங்குஅடைவில் தொகைபதினென்று என்பத்*
*[தொன்று ஐம்பத்தொன்று*
*இருநாற்ருேடு இருபத்து நால்ஆரு றுஐந்தில்*
*பரந்தநெறி அறுவகையும் ஒருவிநினை வரிதாம்*
*பரபதத்துள் உயிர்விரவப் பயிற்றும்அன்றே.*

### பொழிப்புரை

சமயம் விசேடம் ஆகிய தீட்சைகள் இரண்டும் விரும்பப்பட்ட மந்திரங்களுக்கு அதிகாரம் அர்ச்சனைக்கு அதிகாரம் அதற்கு இனமாகப் பொருந்தப்பட்ட யோகத்துக்கு அதிகாரம் என்று சொல்லப்பட்டு வரும்; ஒப்பற்ற நிருவாண தீட்சையானது மந்திரங்கள் முதலாகச் சொல்லப்பட்ட நிரல்நிறைத்

தொகையான பதினொன்று எண்பத்தொன்று ஐம்பத்தொன்று இருநூற்றிருபத்துநான்கு முப்பத்தாறு ஐந்து இவ்வெண்களையுடைய அத்துவா ஆறுகூற்றையும், மந்திரங்கள் பதங்களாலும், பதங்கள் வன்னங்களாலும், வன்னங்கள் புவனங்களாலும், புவனங்கள் தத்துவங்களாலும், தத்துவங்கள் கலைகளாலும் நீக்கி நினைத்தற்கு அரிய மேலான இலய தத்துவத்திலே ஆன்மாப் பொருந்தும்படிபண்ணும்.

இதனுல் சமயதீட்சை சரியாதிகாரத்தது. அதிகாரம் என்பது யோக்கியம் என்னும் பொருள் தருவது. விசேடதீட்சை கிரியை, யோகங்கட்கு அதிகாரமுடையது. நிருவாண தீட்சை ஞாஞதிகாரத்தது ஆகும். கிரியை யோகம் என்கிற இரண்டுக்கும் அதிகாரம் ஒன்றே. ஆகவே, அநுக்கிரகம் பண்ணுவதற்குக் கருவியாக உள்ள ஏழுவகையான மேலே கூறப்பட்ட தீக்ஷைகளில் வைத்து, அவுத்திரி தீட்சை மூன்று பகுதிகளையுடையது என்றும், மூன்ருவதான நிருவாணம் சாயுச்சியத்தை அடையச்செய்யும் என்றும் தெரிவிக்கின்றதாக உள்ளமை காணலாம்.

## விளக்கவுரை

ஒருபொருளைத் தூய்மை செய்வதாயிருந்தால், அப்பொருளிடமுள்ள குற்றத்தைப் போக்கவேண்டும். பிறகு குணத்தைப் பிரகாசிக்கச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் அப்பொருள் போக்கியத்துக்கு அநுகூலமாகும். மணியை மதிப்பேறச் செய்ய விரும்பினுல், அதனைச் சாணைபிடிக்கவேண்டியுள்ளது. ஆடையைத் தூய்தாக்கவிரும்பினுல் அழுக்குப்போக்க வேண்டியுள்ளது. இரும்பைப் பரிசவேதியால் பொன்ருக்கவேண்டியுள்ளது. மணிக்குப் பிரகாசிக்கின்ற

தன்மை இயல்பாயினும், ஆடைக்கு வெண்மை இயல்பாயினும், இரும்புக்குப் பொன்ருந்தன்மை உண்டாயினும் மேலே சொல்லப்பட்டவழிகளால் அவற்றைத் தூய்மைப்படுத்தவேண்டியுள்ளது. இப்படியே, மலம் என்கின்ற குற்றம் பொருந்தப்பெற்றுள்ள ஆன்மாவினையும் அம்மலங்கழீஇ அறிவுபிரகாசிக்கச் செய்ய வேண்டியுள்ளது. இங்ஙனம் மலங்கழூவுதலும், பிரகாசத்தைக் கொடுத்தலும் புரியும் சிகிச்சையே தீக்ஷை எனப்படும். பிரகாசத்தைக் கொடுப்பதும், குற்றத்தைக் கெடுப்பதும் என்பதே தீக்ஷை என்னும் சொல்லுக்குப் பொருளாம்.

இந்தத் தீக்ஷை எனப்படும் சிகிச்சை ஆசாரியனுல் செய்யப்படாவிடில் ஆன்மா மலினப்பட்டு உழன்று கொண்டே இருக்கவேண்டிவரும். ஆதலால் சகலராகிய நமக்குச் சாயுச்சியப்பேற்றில் விருப்பம் இருப்பின் முதற்கண் படிப்படியாகத் தீக்ஷைபுரியப்பெறல் முக்கியமாம். இதனை, ''குருவை நண்ணி நற்றீக்கையினுற் குலைந்து - ஒருவுபந்தமுடையவவனிவன் - மருவி நின் மலனுய்த் துயர் மாய்த்துறும் - திரிவறும் சிவ சாயுச்சியத்தையே'' என்னும் சுவாயம்புவ சூத்திரச் செய்தியால் தெரியலாகும். ஒருவனுக்கு, மருந்தினுடைய ஆற்றலால் நோயும் நீங்கி உடலில் வலிமையும் வருவதுபோலவே தீக்ஷையினுல் குற்றம்நீங்கிப் பிரகாசம் உண்டாகின்றதாகும் என்பர்.

நாம், முதற்கண் சற்சமயநெறியில் புகவேண்டும். பிறகு அச்சமயநெறிப்படி புற ஒழுக்கம் பூணவேண்டும்; அப்பால் அவ்வொழுக்கம் அகத்தும் இயல்பாக அமையப்பெறவேண்டும். இந்த நிலைகளை அடைந்தால்

பின்னர், சாயுச்சியப்பேறு எய்தப்பெறலாகும். இந்த முறைமைகளையே, சமயதீக்ஷை - விசேடதீக்ஷை - நிருவாணதீக்ஷை என்பன பயனுக விளைவிக்கின்றன. எந்த ஒரு உத்தியோகத்துக்கும் ஒரு யோக்கியதை வேண்டியுள்ளது. அப்படியே, சாயுச்சியப்பதவியை அடைவதற்கும் படிப்படியான சில தகுதிகள் நமக்கு வேண்டியுள்ளன. ஒரு கீழ்த்தர அதிகாரி, தனக்குத் தகுதிகளை ஏற்படுத்திக்கொள்ள ஏற்படுத்திக்கொள்ள அதிகாரங்களில் உயர்வு அடைந்து பிறகு மேலதிகாரி யாக ஆகிவிடுகிருன். அப்படியே, நாமும் சாயுச்சிய நிலை அடையவேண்டுமாகுல் அதற்குத் துணையாக இருக்கின்ற மந்திராதிகாரநிலை - அர்ச்சனுதிகாரநிலை களைப் படிப்படியாக அடைவிக்கப்பெற்று அநுபவம் பெறவேண்டும். இதற்கெல்லாம்முந்த, இப்படியடைய வேண்டுமென்கிற விருப்பம் நம் உள்ளத்தே மிக வேண்டும்; விருப்பமில்லாத கடமை பயனளியாது. தீக்ஷைபெறவேண்டும் என்கிற உண்மையான விருப் பம் உள்ளத்தே உண்டாகவேண்டும் என்பதையே விரும்பிய என்ற சொல் தெரிவித்து நிற்பதாகும்.

சிவநெறிக்கு உரியவர்கள் யாவரும் விரும்பி அந் நெறிக்குத் தம்மைத் தகுதிப்படுத்தும் சமயதீட்சை பெறவேண்டியவராவர். சரியை, கிரியை, யோகம் என்கிற மூன்றுவகை ஒழுக்கங்கள் - உண்மைத் தவ நெறிகள் - ஞானத்துக்கு அங்கங்களாயிருப்பனவாம். இவற்றுள் சரியை நெறிதான் ஒருவரைச் சமயநெறியுள் புகுத்தி நிறுத்துவதாகும். இத்தகுதியை உண்டாகச் செய்வதே சமயதீட்சை. எனவே, சமயதீட்சை பெற்ற வர்கள் சரியாதிகாரம் பெற்றவராவர். இச்சரியாதி காரத்துக்கு ஒருவர் ஞானவாகுக இருக்கவேண்டும்

என்பதில்லை. இது யாவருக்கும் உரியதாகும். இதனல், சமயதீக்ஷை எனப்படுவது சமயிக்குச் செய்யப்படுவதாகும். மந்ததரபக்குவமுடையார்க்குச் சமயதீக்ஷை ஒன்றே செய்யப்படும். இதனைப் "பாலரொடு வாலிசர்" என்னும் சித்தியார்ப் பாடலுரையால் அறியலாகும். நித்திய கன்மமாத்திரையில் இயன்றவாறு அநுட்டிக்கும் அதிகாரம் இவர்க்கு உண்டு. ஆதலின், இந்தத் தீக்கை நிரதிகாரம் எனவும் சொல்லப்படும். பீசாக்கரமின்றி மந்திரமட்டும் உபதேசிப்பது நிர்ப்பீசம் எனப்படும். பீசாக்கரத்தோடு மந்திரத்தை உபதேசிப்பது சபீசம் எனப்படும். மேலே குறிக்கப்பட்ட சித்தியார்ச் செய்யுள் நிர்ப்பீச தீக்கைபற்றிப் புகல்வதாகும். சபீச தீக்கை எனப்படுவது மலபரிபாகத்தோடுகூடக் கற்று அறிந்து ஒழுக்கவழியில் வழுவாதுநிற்கும் மனஉரன் மிகுந்தவர்க்குச் செய்யப்படும். சமயாசார கன்மமட்டில் அநுட்டிக்கும்படி நிறுத்தப்பட்டவர்கள் இதனில் சாதிகாரதிக்கை உடையவராவர். இவர்கள் சாதகர் எனப்படுவர். எனவே, சமயதீக்ஷையின் சக அதிகாரப் பகுதியில் சபீச தீட்சைக்கு உரிய சாதகரும் உண்டு என்பது தெரியலாகும். இவை யாவும் விரும்பிய மந்திராதிகாரம் என்ற தொடரில் உள்ள பொருள்களாகும் என்ப. சமயாசார கன்மம் என்பது சந்தியா வந்தன சிவபூசைமுதலிய கருமங்களாம்.

இனி, அர்ச்சனுதிகாரம் என்பது கிரியை நெறிக்குத் தகுதி தருவதாகும். பூசனைகளை அதிகரிக்கை என்பது இதன் கருத்தாம். சிவசமயத்தார்களுக்குரிய சிவபூசை குருபூசை மஹேசுவரபூசைகள் கிரியை நெறியாளர் மேற்கொண்டொழுகுவர். ஏனெனில் இவர்கள் விசேடதீக்ஷை பெற்றவராவர். மந்தபக்குவமுடையவர்

களுக்குச் சமயம் விசேடம் எனப்படும் இவ்விரண்டும் உரியவாம். இதிலும் உத்தமத்தில் உத்தமராகிய சாதகர் கட்கு விசேடதீக்கை உரியதாகும். இவ்விரிவெல்லாம், "ஒதியுணர்ந் தொழுக்கநெறி" என்னும் சித்தியார்ப் பாடலுரைகொண்டு அறியலாகும். பூசனைக்குரிய அதி காரம் இவர்கட்குண்மையின் இதனை அர்ச்சனுதிகாரம் எனலானுர் ஆசிரியர்.

மேவும் யோகாதிகாரம் என்பது தீவிரபக்குவம் உடையவர்கட்கு உரியதாகும். இவர்கட்கும் மேலே சொல்லப்பட்ட விசேட திட்சையே செய்யப்படும். அதனோடு யோகத்தின் அநுட்டிப்பும் பயிற்றப்படும். ஆதலின், இவர்கள் புறத்தே செய்யப்படும் பூசனைகளை அகத்தேயும் செய்யும் உரிமையுடையவராவர். எனவே இவர்கள் நித்திய சந்தியாவந்தனுதி கிரியைகளும் விசேடகால செப ஆராதனுதிகளும் சித்தி முதலான பயனுக்குரிய விசேடக் கிரியைகளும் புரிவர். கிரியை மார்க்கத்துக்கான விசேட தீக்கையே யோக மார்க்கத் துக்கும் உரித்தாதல்பற்றி ஆசிரியர், மேவும் யோகாதி காரம் எனலுற்ருர். ஆகவே, சமய விசேடம், விரும் பிய மந்திராதிகாரம், அர்ச்சனுதிகாரம் மேவும் யோகாதிகாரம் எனவரும் என்பதாக முதல் வாக்கி யத்தை அமைத்துக்கொள்ளல் அமைவுடையதாகிறது.

சமயதிட்சை ஒன்றே சரியாபாதத்துக்குரியதாக உள்ளது. ஆனல் விசேட திட்சை ஒன்றே கிரியா யோகபாதங்கள் இரண்டுக்கும் உரியதாயிருக்கின்றது. கிரியாபாதத்தினை மேற்கொள்ளும் பூசனுதிகாரிகள், பூசைகளை அதிகரித்துச் செய்கையில் அட்டாங்கயோக உறுப்பைச் சாரும் பிராணுயாமமும், அந்தர்யாக

உட்பூசையும் செய்யவேண்டி இருத்தலின் விசேட திட்சையொன்றே கிரியை யோகம் எனப்படும் இரண்டுக்கும் உரியதாயிற்றென்பர். "கிரியை பூசை மருவு பிராணுயாம மன்னிவளர் யோகம்" என்பதனுல் இக் கருத்து அறியப்படும்.

பொருவு இல் நிருவாணம் :

மூன்ருவதாகச் சொல்லப்படும் திட்சை நிருவாண திட்சை ஆகும். இந்தத் திட்சை சாயுச்சியத்துக்கு ஏதுவாக இருப்பதால் சிறப்புடையதாகும். ஆதலின், பொருவு இல் எனப்பட்டது. நிருவாண தீட்சை என்பது, பாசபந்தம் அனைத்தையும் நீக்கிச் சிவபிரான் திருவடியை அடையும்படிச் செய்வதாகும். தீவிரதர பக்குவர்கட்கு இத்திட்சை செய்யப்படும். இவர்கள் ஞானத்தை அநுட்டிப்பவர் ஆவர். சமயாசார சுத்தி இன்றிச் செய்யப்படும் நிர்வாணதீக்கையும் அதற்கு அங்கமாகச் செய்யப்படும் சமய விசேட திட்சைகளும் சபீச தீக்ஷை எனப்படும். தொகுத்துக் கூறினுல், திட்சை என்பது ஔத்திரி எனத் தொகையால் ஒன்று ஆகும். ஞானவதி கிரியாவதி என வகையால் இரண்டு ஆகும். ஞானவதிநிர்ப்பீசம் ஞானவதி சபீசம், கிரியா வதி நிர்ப்பீசம், கிரியாவதிசபீசம் என விரியால் நான்கு ஆகும்.

திட்சையைச் சிவபெருமான், குருமூர்த்தியை வாயிலாகக்கொண்டு நின்று செய்வன். இத்தீக்ஷை பெறும் மாணுக்கர் ஞானமார்க்கத்துக்கு உரியவர் என்றும், கிரியா மார்க்கத்துக்கு உரியவர் என்றும் இரண்டு வகைப்படுவர். இவர்கள் ஒவ்வொரு வகையினரும் உத்தமர் - மத்திமர் - அதமர் என மூன்று

வகைப்படுவர். கற்றறிந்து ஒழுக்கநெறியில் நிற்பவர் உத்தமர் ஆவர். கற்றறிந்து ஒழுக்கநெறியில் நில்லாதவர் மத்திமர் ஆவர். கற்றறியாமலும் ஒழுக்கநெறியில் நில்லாமலும் இருப்பவர் அதமர் ஆவர். ஒழுக்கநெறி என்பது இவ்விடத்தில் சரியை ஆதி ஒழுக்கங்களையே குறிப்பதாகும். இத்தகைய பக்குவர்கட்கு அவரவர் பக்குவத்துக்கு ஏற்ப ஞானதீட்சை அல்லது கிரியாதீட்சை என்ற இரண்டனுள் ஏற்ற ஒன்றை ஆசிரியர் செய்தருளுவர்.

**நிருவாணம், மந்திரங்கள் – பதங்கள் – வன்னங்கள் – புவனங்கள் – தத்துவங்கள் – கலைகள் – இரங்கு அடைவில் தொகை பதினொன்று - எண்பத்தொன்று - ஐம்பத்தொன்று - இருநூற்றோடு இருபத்துநால் - ஆறாறு - ஐந்தில் - பரந்தநெறி அறுவகையும் ஒருவி, நினைவு அரிதாம் பரபதத்துள் உயிர் விரவப் பயிற்றும்; அன்றே:**

ஒரு வேண்டாமரத்தை அடியோடு ஒழிக்கவேண்டினால், அதன் தழை கிளைகளை மாத்திரம் கழித்தால் போதாது. அல்லது அதன் அடிமரத்தை நிலமட்டத்துக்கு அறுத்துவிட்டாலும் போதாது. நிலத்தையும் அகழ்ந்து அம்மரத்தின் வளர்ச்சிக்கு மூலமாயிருக்கும் வேர்களைக் களைந்தொழிக்க வேண்டியுள்ளது. எத்தனையோ கோபுரங்களும் கட்டடங்களும் இவ்வாறு செய்யப்படாமையால் அழிந்தும் இடிந்தொழிந்தும் போவதை நாம் கண்டிருக்கிறோம். மரத்தைத் திரும்பத் துளிர்க்கவொட்டாமல் செய்வதற்கு வேரோடு கல்லி ஒழிப்பதுபோல்வது நிருவாணதீட்சை ஆகும்.

மரத்தின் வேர்கள் தரையை ஆதாரமாகக்கொண்டு அதனடியில் மறைந்திருந்து மறுபடியும் தளிர்த்துக் கட்டடத்தைத் தள்ளப் பார்க்கின்றன. இப்படியே, நம் ஆன்மாவினைப் பந்தப்படுத்தும் நல்வினை தீவினைகள் பிரபஞ்சத்தை ஆதாரமாகக்கொண்டு பல வழிகளில் பற்று ஏற்றிக் கெடுக்கின்றன. பிரபஞ்சம் என்பது, பொதுவாகக் கூறப்பட்டால் இரண்டு வகைப்படும். அவை, சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் என்பன வாகும். இவற்றுள், சொற்பிரபஞ்சம் என்பது மந்திரம் - பதம் - வன்னம் என்று மூன்றுவகைப்படும். இவற்றுள் மந்திரம் பதினொன்றாகும். பதம் என்பது எண்பத்தொன்று ஆகும். வன்னங்கள் அல்லது எழுத் துக்கள் ஐம்பத்தொன்று ஆகும்.

பொருட் பிரபஞ்சம் என்பதும் மூன்று வகைப் படும். அவை, புவனம் - தத்துவம் - கலை என்பன வாம். இவற்றுள் புவனம் இருநூற்று இருபத்து நான்கு ஆகும். தத்துவங்கள் முப்பத்தாறும். கலை என்பது ஐந்து பிரிவுடையதாம். எழுத்தும், எழுத்தால் பதமும், பதத்தால் மந்திரமும் என அமைவது சொற் பிரபஞ்சம். உடலும், உலகமும், அவற்றை ஆக்கும் சத்தியும் என மூன்றாகும் பொருட்பிரபஞ்சம். உடல் என்பது இந்திரியம் அந்தக்கரணம் ஆகிற தத்துவ வடிவாயிருப்பது. புவனம் என்பது பஞ்சபூத வடிவா யிருப்பது. சத்தி என்பது கலை வடிவாயிருப்பது. இப்படியாக இருக்கின்ற இவை ஆறும் (சொல் — 3 + பொருள் — 3) அத்துவாக்கள் என்று கூறப்படும். அத்துவா என்பது வழி என்று பொருள்தரும் பதமாம். இந்த ஆறு அத்துவாக்களும், ஆணவ கேவலத்திலே கிடந்து அறிவு விளங்காத ஆன்மாக்களுக்கு அறிவு

விளங்குவதற்கு வழியாயிருப்பனவாகும். இவற்றாலே தான் நமக்கு அறிவுவிளக்கம் உண்டாகிறது. ஆனால் இந்த அறிவுவிளக்கம் பூரணமானது அன்று; ஏகதேச மானதாகும். ஆகையினாலேதான், இந்த ஏகதேச அறிவால் விளைந்த வினையினை, ஆசிரியர் புரியும் அத்துவ சோதனை எனப்படும் செய்கையால் நீக்கப்பெற்றுப் பூரண அறிவுறுவதற்கு நாம் முயலவேண்டியுள்ளது.

மலர்த்தோட்டத்தே புகுந்த ஒருவன், கையிலே உடைவாளை உடையவனாக இருப்பானாயின், அந்த வாள் அவனைச் சும்மா இருக்கவிடாமையால், அவன் அம்மலர்ச்செடி கொடிகளை வெட்டித் தள்ளிக் கொண்டேதான் இருப்பான். தோட்டக்காரன், அந்தக் கத்தியை வாங்கி உறைக்குள்ளிட்டு மறைத்துவிட்டுக் கத்தி பிடித்திருந்த கையிலே நீர்சால் கரகமொன்றைத் தருவானாயின், அவன் அந்நீரைச் செடி கொடிகட்கு வார்த்து நறுமணமிக்க மலர்கள் மலர்ந்து கவின்செய்ய முகர்ந்தும் நுகர்ந்தும் களிப்புறுவான். அத்துவ வனத் திலே உழலும் நம்கதி, ஆசிரியரால் இப்படிப்போலத் தான் மாற்றி நலப்படுத்தப்படுகின்றது.

அத்துவசோதனைபுரிகையில் ஆசிரியன், தன் அரு ளால், அத்துவாக்களை ஒன்றின் ஒன்றாக ஒடுங்கச்செய் துதவுகிறான். ஒடுங்கும்போது, மந்திரம், பதத்திலே ஒடுங்கும். பதமானது எழுத்தில் ஒடுங்கும். மந்திரம், பதம், எழுத்து என்ற மூன்றும் சொல்லேயாதலால் பொருளில் ஒடுங்கும். அதாவது சொல்லானது வெளிப் படையாகக் காணப்படும் புவனத்தில் ஒடுங்கும். புவனம் தத்துவத்தையின்றி இல்லாமையால் புவனம் என்பது தத்துவத்தில் ஒடுங்கும். தத்துவம், கலையை

யின்றி இல்லாமையால் தத்துவம் கலையில் ஒடுங்கும். பஞ்சகலைகளும் திரோதான சத்தியை ஆதாரமாக உடையவை ஆகும். திரோதானம்தான் உயிருக்குப் போகத்திலே அமைவு ஏற்படுத்துகிறது. திரோதான சத்தி என்பது ஞானசொரூபமான சிவசத்தியானது பஞ்சகலைகளாக மாறுவதற்குரிய அவசர பேதமே யாகும். இங்குச் சொல்லப்பட்ட அத்துவ ஒடுக்க முறைமையினால் நாம் தெரியவேண்டிய கருத்து, பேச்சை நிறுத்தி - உலகத்தை வெறுத்து - உடலைத் தானன்று என அறிந்து - அருளால் தலைவனையும் தன்னையும் அறியப்பெறுவது என்பதாகும். எனவே, நிருவாணதீக்கைபுரிகையில் ஆசிரியர், மந்திரம் பதி னொன்றையும் பதங்கள் எண்பத்தொன்றிலும், அவற் றைப் பிறகு எழுத்துக்கள் ஐம்பத்தொன்றிலும், இக் கூடிய சொற்பிரபஞ்சத்தை இருநூற்றிருபத்து நான்கு புவனப் பகுதியிலும், இப்பகுதியை முப்பத்தாறு தத்துவத்திலும், அத்தத்துவ ஒடுக்க அடைவைப் பஞ்சகலைகளிலும், முடிவாகக்கருதப்படும் கலையைத் திரோதான சத்தியிலும், அத்திரோதான சத்தியைச் சிவத்திலும் அடங்குமாறு ஒடுக்குவர். இப்படிச் செய்வதனால், பிறவிக்குக் காரணமாகிய மலம் கெடும். எங்கணும் வியாபகமாகிய சிவம் பிரகாசிப்பதற்கு ஏது வாகிய ஞானம் உண்டாகும். இதன்பயனாகப் பிறவி ஒழியும். மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை இவ்வழிகளால் புண்ணியம் × பாவம் எனப் படும் இதம் × அகிதம் உயிர்கட்குண்டாகும் விவரங் களை இங்கு விவரிப்பதாயின் விளக்கவுரை அதிகப்படு மாதலால் உரிய நூல்களின் துணைகொண்டு இவ்விடத் தறிதல் நன்றாம். இவ்விரிவின் பெருக்கத்தையே ஆசிரியர் பரந்த நெறி அறுவகையும் என்றுள்ளார்.

அத்துவ ஒடுக்கத்தால் பிறவிக்கேதுவான வினைகள் ஒழிக்கப்படுதலை **ஒருவி** என்ற சொல் தெரிவிப்ப தாகும்.

பரமுத்தி எய்தும் பயனையே உண்மைச் சீவன் முத்தி உயிருக்குப் பழக்குகின்றதாகும். இத்தகைய சீவன்முத்திநிலையில் ஆன்மா, சிவத்தோடு ஒன்ருய் விரவியிருந்து பழகும்; இந்த இன்பநிலை எம்போலி யரால் மனத்தாலும் நினைத்துரை முடியாததாகும்; இது கற்பனைக்கு எட்டாதது. உடம்புள் இருக்கும் உயிர், அவ்விருப்பை மறந்து பரத்தின் பதத்திலே மருவியிருக்கப்பெறும். இவ் எல்லாக்கருத்துக்களையும், **நினைவரிதாம் பரபதத்துள் உயிர் விரவப் பயிற்றும்** என்ற வரியினுல் ஆசிரியர் உணர்த்துகின்ருராவர். இது வெறுங்கற்பனையோ, பாவனையோ அன்று; உண் மையே என்பதை அன்றே என்பது அறிவிப்பதாம்.

## 10. பதமுத்திகளும் இருதிற ஞானங்களும்

*கிரியைஎன மருவுமவை யாவும் ஞானம்*
*கிடைத்தற்கு நிமித்தம்எனக் கிளக்கும்; உண்மை;*
*சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்*
*சாலோக சாமீப சாரூ பங்கள்*
*மருவியிடும்; உயர்ஞானம் இரண்டாம்; மாரு*
*மலம்அகல அகலாத மன்னு போதத்*
*திருவருள்ஒன் று; ஒன்றுஅதனைத் தெளிய ஓதும்*
*சிவாகமம்என் று உலகுஅறியச் செப்பும் நூலே.*

### பொழிப்புரை

சரியையாதி மூன்று பாதத்தில் கிரியை என்று பொருந்தப்படும் அவை எல்லாம், ஞானம் உண்டா தற்குக் காரணம் என்று ஆகமங்கள் சொல்லும்;

இது சத்தியமே; அந்தச் சரியை கிரியை யோகங்களின் முறைமைகளிலே நின்றவர்கட்குச் சாலோகம் முதலிய மூன்றும் பொருந்தும்; ஞானபாதத்தில் உயர்ந்த ஞானமானது இருவகை ஆம்; அவை எங்ஙனம் என்னில், ஆன்மாக்களை விட்டுநீங்காத நிலைபெற்ற அறிவான திருவருள் ஒன்று; மற்றை ஒன்று அந்த ஞானத்தைத் தெளியச் சொல்லும் சிவாகமங்கள், இப்படி உயர்ந்தோர் அறியும்படி அவ்வாகமங்கள் சொல்லும்.

இச்செய்யுள், இதன் முன் கூறப்பட்ட தீக்ஷைகளில் சமயவிசேட தீக்ஷைகள் இரண்டுக்கும் பலனைச் சொல்லுவதுடன் ஞானத்தின் இருவகைகளை எடுத்துரைக்கின்றதாகும்.

### விளக்கவுரை

உலகத்தில் பிறந்துள்ள மக்கள் தம்வாழ்வுக்காகப் பலவிதமான தொழில்களைச் செய்கின்றனர். இந்தத் தொழில்களிற்பல, உலகசுகம் கருதிச் செய்யப்படுவன. இங்ஙனம் செய்யப்படும் நற்காரியங்கள் புண்ணியச் செயல்கள் எனப்படும். இதனைத் தவச்செயல் என்றும் இசைப்பர். இத்தகைய புண்ணியம், பசு புண்ணியம் என்றும், பதி புண்ணியம் என்றும் இரண்டு வகைப் படுவதாகும்.

சைவசமயநெறியிலே முத்திப்பேற்றுக்கு நான்கு வகை உபாயங்கள் கூறப்படும். அவை, சரியை - கிரியை - யோகமும் - ஞானமும் ஆம். இவைகளிலே, முன்னர்க் கூறப்பட்ட மூன்றும் ஞானத்துக்கு ஏதுவாகும் இயல்புடையன. இம் முதல் மூன்றின் கிரியைகளை உலகத்தை நோக்கிச் செய்வோமானல் அவை

உபாயச்சரியை, உபாயக்கிரியை முதலவாகக் கூறப் படும். மேற்குறிக்கப்பட்ட சரியை கிரியாயோகங்கள் முத்திப்பேற்றை நாடிச் செய்யப்படும்போது அவற்றை உண்மைச் சரியை முதலவாகக் கூறுவர். அங்ஙனம் செய்யப்படும் உண்மைச்சரியை முதலான மூன்று கிரியைகளும் ஞானத்தை விளைப்பதற்கு உதவுவன வாகும். தாமே ஞானத்தைப் பயப்பன ஆகா. ஞானமில்லாமல் முத்தி கிடைக்காது. இங்கு, "மேல் சரியை கிரியா யோகங்களைச்செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடா ஆகலான்" என்னும் சிவஞானபோத வாக்கியார்த்தம் காணத்தக்கதாகும். இதனையே, **கிரியை என மருவு மவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம் எனக் கிளக்கும்** என்றுள்ளார் ஆசிரியர்.

இங்ஙனம், நூல்களிற் கூறப்படுதல் மாத்திரமன்றி ஆசிரியர் உண்மையில் அநுபவிகள் செய்திகளை ஞான திருஷ்டியாலும் அறிந்துள்ள நீர்மையர் ஆதலால், நமக்கு உறுதி உண்டாக்கும் பொருட்டாக **உண்மை** என்று கூறியுள்ளார். இனி, உண்மை என்னும் சொல்லை, அடுத்துள்ள சரியையாதியுடன் கூட்டி உண்மைச் சரியை கிரியை எனவும்கொண்டு பொருள் செய்யலாகும்.

**சரியை கிரியாயோகத் தன்மையோர்க்குச்**
**சாலோக சாமீப சாரூபங்கள் மருவியிடும் :**

திருக்கோவில் அலகிடுதல் முதலாகச் சிவபெரு மான் உருவத்தியான உறைப்புக் கொண்டொழுகுதல் ஈறுக உள்ளவை **உண்மைச்சரியை** எனப்படும்.

இதுவே, உண்மைத்தவநெறியில் முதல் பாதமாகும். இந்த அளவுக்கு இப்பிறப்பிலே தம் வாழ்க்கையிலே சித்திபெற்றவர்கள் இறப்பின் பிறகு சாலோகம் எனப் படும் பதமுத்திகளில் முதலாவதாக உள்ளதை அடை வார்கள். சாலோகமாவது, புவனபதிகளின் உலகங் களை அடைந்து, ஒருவர்மனையில் பணிசெய்யும் அகத் தொண்டர்க்கு உள்ள உரிமைபோல், அவ்வுலகத்துள் எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்து, அங்குள்ள போகங்களை அநுபவித்து வாழ்தலாகும். புவனங்கள் எனப்படுபவை, இப்புவனம் முதல் சுத்தமாயாபுவனம் வரையிலுள்ள புவனங்களாம்.

உண்மைக்கிரியை எனப்படுவது, சிவபூசைக்கு வேண்டப்படுவனவெல்லாம் சேகரித்தல் முதலாக அந்தர்யாகபூசையுறைப்பநுபவம் வரையிலுள்ள தன் மைகள் ஆகும். இந்நெறியில் நின்று கழிந்தவர்கள் மறுமைக்கண் சாமீபம் எனப்படும் பதமுத்தி எய்தப் பெறுவர். சாமீபமாவது, புத்திரர்க்குளதாகிய உரிமை போல அப்புவனபதிகட்கு நெருங்கினவர்களாயிருந்து அவர்போகங்களை அநுபவித்து வாழ்தல் ஆகும்.

இனி உண்மை யோகநெறியாவது, இயம நியமங் களைப் பழகுதல் முதலாகச் சமாதிசெய்தல் இறுதியாக உள்ள தன்மைகள் ஆகும். இத்தகையோர், மறுமை யில் சாரூபமுத்தி பெறுவார்கள். சாரூபமாவது, தோழற்குள்ள உரிமைபோல அப்புவனபதிகளோடு ஒத்த வடிவமும் ஆபரணமும் போக அநுபவமும் பெற்று மறுமையில் வாழ்தலாம். மேற்கூறப்பட்ட சாலோகம் முதலானவைகள் உண்மை முத்தியாக மாட்டா. அவை, பதமுத்திகளே ஆகும். சாயுச்சியம்

எனப்படுவதே உண்மை முத்தியாகும்; மருவியிடும் என்பதனால் அந்த அந்தத்தகுதிக்கு ஏற்ற பதமுத்திகள் தட்டாமற்கிட்டும் என அறியலாம். "நாடு நகரமும் நற்றிருக்கோயிலும்" முதலிய திருமந்திரப்பாடல்களைத் தேர்ந்து இங்கு நாம் ஒப்பிட்டுக்கொள்ளல் தக்கதாம். மற்றும், 'தாத மார்க்கம்', 'புத்திர மார்க்கம்', 'சக மார்க்கம்' எனத்தொடங்கும் சித்தியார்ப்பாடல்களின் கருத்தும் தெரிதல் பயனுடைத்தாம்.

**உயர்ஞானம் இரண்டாம் :**

சாயுச்சியமே நம்வாழ்வின் முடிந்த குறிக்கோள் ஆகும்; அதற்குவகுக்கப்பட்ட வழிகள் சரியை-கிரியை-யோகம் - ஞானம் என்பன. இவற்றுள் சரியை முதலான மூன்றும் ஞானத்துக்கு ஏதுவாம். இவ்வாறு ஞானம் என்பது சாயுச்சியத்துக்கு ஆலயத்தின் சந்நிதி வீதி போல நேரே காரணமாய் இருத்தலால், அதன் பெருமை நம்மனோர் உணர்வுக்கு வரும்பொருட்டு உயர்ஞானம் என அடைமொழி தந்து ஆசிரியர் ஓதி யுள்ளார். இத்தகைய ஞானமும் இரண்டு வகைப் படும். எந்தவிதமான அறிவும் நூலாலடையப்படும் அறிவு எனவும், அநுபவத்தாலடையப்படும் அறிவு எனவும் இரண்டுவகைப்படுதல் இயல்பாம். அவ்வாறே உயர்ஞானமும் இயல்பிலே இரண்டு திறப்படும் என்க.

**மாறு மலம் அகல அகலாத மன்னு போதத் திரு அருள் ஒன்று :**

மேலே கூறப்பட்ட இருவகை ஞானங்களுள் அநுபவஞானமே முடிந்த ஞானமாகும். அநுபவம்

என்பது ஐயந்திரிபு அற்ற உண்மையாதலின் அஃது அத்துணைச் சிறப்பு உடையதாம். நமக்கு முடிவாகத் தேவைப்படுவது இந்த அநுபவஞானமே ஆகும். அநுபவ ஞானத்தை, அநுபவிகளே போதித்தற்கு உரியவராவர். வாசாஞானம் என்பது கற்றோர்களால் போதிக்கப்படும். நமக்குத் தேவைப்படும் அநுபவ ஞானமெனப்படுவது பதிஞானமாகும். இந்தப் பதி ஞானம் திருவருளால் நமக்குக் கிட்டுவதாகும். இந்த உண்மையைத்தான், திருஞானசம்பந்த சுவாமிகள் பாலுண்ட வரலாறு பகருகின்றதாகும். நாயனாருக்குத் தரப்பட்டது சிவஞானம் ஆகும். இந்தச் சிவஞானத் தைப் பரமசிவன், தாமே நேரில் நாயனார்க்கு அளித்து விடவில்லை. உமாதேவியாரே ஞானப்பாலை நாயனார்க்கு அளிக்கின்றார். உமாதேவியார் என்றால் சிவத்தின் திரு வருள் என்பதே கருதப்படவேண்டும். எனவே, சிவம், திருவருளால், ஞானமாகிய பாலை, ஞானசம்பந்தப் பெருமானார்க்கு அளித்துதவினார் என்பது தெரியப்பட லாகும்.

இந்தத் திருவருள் என்பது சிவத்தைவிட்டு நீங்கும் தன்மையதன்று. தாதான்மியமுடையது. இதனாலேயே உமாதேவியாரை இறைவனின் இடப்பாகத்தர் என்று நூல்கள் ஓதுகின்றன. இதுபற்றியே திருவருளைப் பற்றிக் கூறவந்த நம் ஆசிரியர், **அகலாத** என்றருளி யுள்ளார். எந்த அவதரத்திலும் இத்திருவருள், சிவத் தின் நீங்குவது இலதாய் அவன்பாலே மன்னியிருப்ப தாதலால், **மன்னு** என்றும் கூறியுள்ளாராவர். இத் தகைய திருவருளானது நமக்கு எந்தவடிவில் பயன் படுகிறதென்பதைப் **போதம்** என்ற சொல் குறிப்ப தாகும். இந்தச் சிறப்புடைய அருள் வேறெவராலும்

நமக்குக் கிடைப்பதில்லை. சிவமே ஆகிய ஆசாரிய ரொருவராலேயே அருளப்படுதலின் அதன் பெருமை புலப்படுமாறு **திரு அருள்** என்றுள்ளார் ஆசிரியர்.

இப்படிப்பட்ட சிவத்திருவருள் அடையப்பெருமல், நம்பால் உள்ள மலம் ஒழியாது. சூரியனுல் இருள் ஒழிவதுபோலவே, இத்திருவருட் பிரகாசத்தால் நம் மல இருள் ஒழியும். வேறு, எந்தவித உபாயத்தாலும், எவராலும் நம்மலம் ஒழியாத்தகைமைத்து ஆதலால் **மாரு மலம் அகல** என்று கூறித் திருவருட்பயனையும் குறித்திட்டார் ஆசிரியர் என்னலாம். இதனுல், நாம் திருவருளுக்கு ஏங்கிக்கிடப்பதே செய்யற்பாலதென்பது தெரியலாகும். திருக்கண்ணப்ப தேவநாயனுர் முதலியோருக்குக் கல்விமுதலான தகுதிகள் இம்மையில் இல்லாதிருந்தும் அவரது பழைய பக்குவத்துக் கேற்பத் திருவருளே சிவத்தால் முந்த அருளிச்செய்யப்பட்டது ஆதலினுலும், கலைஞான அறிவினும் இப்பதிஞானமே மேம்பாடு கொண்டது ஆதலானும் திருவருளே இங்கு முதலில் ஆசிரியரால் கிளந்து உரைக்கப்பட்டது என்க.

**ஒன்று அதனைத் தெளிய ஓதும் சிவாகமம் :**

சாயுச்சியமே யாவற்றினும் மேலானதும் முடிவானதும் ஆகுமென்பதை நாம் அறிந்துகொள்வதற்கு ஏனைய நூல்கள் அவ்வளவாகப் பயன் படுவனவல்ல; வேதங்களை ஓதுவதனுலும் அவ்வளவு தெளிவு ஏற்படாது. முப்பொருள் உண்மை சாதித்துப் பரம் பொருளை அடையும் வழிகளை விளக்கமாக அறிவிக்கும் திறத்தன ஆகமங்களே ஆகும்; இது கருதியே,

"கற்றவர் பேரின்பம் உற்று நின்றாரே" என்று பொதுப்படுத்தி உரைத்த திருமூலர், "அண்ணல் அருளால் அருளும் சிவாகமம் ... அறிவறியாவிடின் நீர்மேல் எழுத்தே" என்றுகூறி ஆகமச் சிறப்பினை எடுத்தோதுவாராயினர். நம்மனோர் மயக்கம் அறுப்பதற்கெனவே அண்ணல் சிவாகமங்களை அருளிச் செய்துள்ளார். சொல்லை முன்னே அறிந்து பின்னே அதன் பொருளை அடைந்தனுபவித்தல் முறையாம். அவ்வாறே, திருவருள்வாய்ப்புக்கு முந்தி ஆகம ஞான வாய்ப்பு இன்றியமையாததாகிறது. இதனாலேயே, திருவருளைப் பரஞானப்பேறு எனவும், ஆகமஅறிவினை அபரஞானப்பேறு எனவும் அறைகுவர் பெரியோர். காலைப்போதில், அருணோதயம் போல உதவுவது ஆகமஞானமாகும்; சூரியோதயம்போல உதவுவது திருவருள்.

என்று உலகு அறியச் செப்பும் நூலே :

ஆகமம் என்பது மோக்ஷஞானத்தை அடைய வேண்டிய அவசியத்தையும் படிமுறையான பாதங்களையும் ஐயமற அறிவிக்கும் நூல் ஆதலால் செப்பும் நூல் என்றார் ஆசிரியர். இங்ஙனம் கூறும் சிவாகமங்கள், சைவசமயத்தார்க்கு மட்டில் உரிமை உடையன என்றும் ஏனைச்சமயிகட்குப் பொருந்தாதன என்றும் சாமானியர் எண்ணுவர். உண்மை அவ்வாறன்று. உலகத்து மக்களாகப் பிறந்தோர் யாவர்க்குமே இவ்வாகமங்கள் கற்றுக்கேட்டுச் சிந்தித்துத் தெளிதற்கு உரியவையாகும் என்பதை உலகு அறிய என்ற தொடர் உணர்த்தி நிற்பதாகும். இவ்வாறன்றி, 'உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டே' என்னும் சூத்திரப்படி,

பொருள் கொள்ளுதலும் கூடும். அதாவது, கல்வி யறிவால்மேதைமை வாய்ந்தவர்களும், இந்த ஆகமங்களை ஓதிய பின்னர், தங்களுடைய உள்ளத்தே அது காறும் கிடந்த மலவுகள் யாவும் நீங்கப்பெறுவர் என்பதும், ஆதலால் அவர்களையும் உளப்படுத்திக் கூறுதல் அமையுமென்பதும் கருதி ஆசிரியர் இங்ஙனம் கூறினர் எனலும் பொருந்தும். இதனால், நாம் யாவரும் இம்மையில் வாழ்நாளை அவம்போகவிடாமல் ஆகம நூல்களை ஓதித்தெளிந்து மலபரிபாகத்துக்கு ஏதுவான திருவருளைச் சதாசாரியரால் பெற்று உய்தி யுறல் வேண்டுமெனத் தெரிதல் ஏற்புடைத்தாம். இவ்விரண்டு ஞானமும் பெறுமல் வாழ்நாளை வீணே கழித்தல் நம்பால் அறியாமை மலிந்திருத்தலைக்காட்டும் சான்ருகும் என்னலாம். "ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே" என்பது திருமூலர் தரும் மதிப்புரை ஆகும்.

## 11. நூல்மரபு முதலியன

*தெரிந்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்*
*செப்பினர்பின்பு அவர்புதல்வர் சிவஞான சித்தி*
*விரித்தனர்மற்று அவர்கள்திரு அடிகள் போற்றி*
*விளம்பிய நூல் அவைஇரண்டும் விரும்பி நோக்கிக்*
*கருத்தில்உறை திருவருளும் இறைவன் நூலும்*
*கலந்துபொது உண்மைஎனக் கருதி யானும்*
*அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்*
*ஆசு இல்சிவப் பிரகாசம் ஆகும் என்றே.*

### பொழிப்புரை

இந்தச் சம்பிரதாய உண்மையை முன்னம் விளக்கிய முதலாசிரியரான மெய்கண்டதேவ நாயனர்,

மேலான சிவஞானபோதம் என்னும் ஸ்ரீ நந்திகேசுவர வாக்கியத்தைத் தமிழாக அருளிச்செய்தார். பின்பு, அவர் புதல்வர் (சீடர்) அருணந்திதேவநாயனுர், அந் நூற்பொருளை விரித்துச் சிவஞானசித்தியாக அருளிச் செய்தார். அவ்விரண்டு நூலும் சுருங்கியும் விரிந் தும் இருக்கின்றமையின் அவ்விரண்டு நாயன்மா ருடைய ஸ்ரீபாதங்களை வணங்கி, அவர்கள் அருளிச் செய்த அந்நூல் இரண்டையும் விரும்பி ஆராய்ந்து பார்த்து, என்னுடைய கருத்திற்பதிந்த அவர்களு டைய திருவருளையும் சிவாகமங்களையும் கூட்டி, குற்ற மில்லாத *சிவப்பிரகாசம்* என்று பெயரிட்டு, வளர் கின்ற விருத்தச்செய்யுள் நூறையும், பொது என் றும் உண்மை என்றும் இரண்டாக விசாரித்து, ஒரு பொருளல்லாத யானும் புல்லறிவு ஆசைமிகுதலாலே சொல்வேன்.

## விளக்கவுரை

இந்தச் செய்யுள், அபரஞானமாகிய சிவாகமப் பொருளைத் தமிழால் ஆக்கிய முறைமையையும், இந் நூற்பெயரையும், இதன் உட்பிரிவு வகைகளையும், இதன் செய்யுள்தொகையையும் சொல்லும் நோக்கம் கொண்டதாகும்.

இதன் முந்திய செய்யுளிலே, அபரஞான பரஞான இயல்புகள் இன்னவிதமானவை என்பதை ஆசிரியர் தொகுத்துச் சொன்னுர். பரஞான விஷயம், பக்குவி கட்குக் குருவருளாலே அநுபவபூர்வகமாக விளங்கும் தன்மையதாதலால், அதனை நூலால் நுவலுதல் இயலாத தும் ஏலாததும் ஆகும். ஆனல், அபரஞானவிஷயம் ஞானவான்களால் சம்பிரதாயம் தவருவண்ணம் உல கத்து மக்கள் யாவருக்கும் அவர்கள் கடைத்தேறும்

பொருட்டாக எடுத்துரைக்கப்படுவதாகும். இந்த முறையில் நம் ஆசிரியர் இந்நூலைச் செய்தருளுகின்றார் ஆவர். உலகத்து மக்களாவார் மனோநிலை மாற்றங் களுக்கும், அறிவின் தரங்கட்கும், சூழ்நிலைத்தன்மை கட்கும், வசதிகளின் வகைகட்கும் ஏற்ப அவ்வப் போது இத்தகைய ஞானநூல்கள் குறிக்கோளிலும், மார்க்கத்திலும் இம்மியும் குற்றங்குறைகள் நேராதபடி ஞானிகளால் செய்யப்பட்டு வருதல் வழக்கமாகும். இத்தகைய ஞானநூல்கள் அடிக்கடி வெளிவந்துல வாமற்போனால், மக்களிற் பெரும்பாலார் மாக்கள் வாழ்க்கையிலே இறங்கிவிடநேரிடும்.

நிற்கும் வண்டியை ஓட்டுவதற்கும், ஓடும் வண்டியை வழிபிசகாமல் நடத்துவதற்கும் பாகன் முயலுவதுபோலவே, சம்பிரதாயம் தெரியச் செய்வ தற்கும், சம்பிரதாயம் பிசகிப் போகாமலிருக்கச் செய்ய வும் ஞானிகள், நல்ல ஞானநூல்களை ஆக்கி அளித்துப் போயுள்ளனர். அறநெறிக்கு வேலிபோல் அமையப் பெற்ற இந்நூல்களை நாம் தேர்ந்து ஓதியும் உணர்ந்தும் ஒழுகியும் நற்பேறு அடையவேண்டும். இவ்வகையில் இந்நூல் நமக்குப் பெரிதும் துணைபுரிகின்றமை காண லாகும். இதனால், இந்தநூல் ஆகமங்களின் அர்த்தத் துக்குச் சற்றும் மாறுபாடு இல்லாத தமிழாலியன்ற நூலாம் என்க. 'நல்லோர் சொல் உணரின் ஞானம் வந்துதோன்றும்' என்பது ஒரு பழமொழியாகும். அத் தகைய நல்லோர் வரிசையில் உள்ளவர் நமது இந்த நூலாசிரியர். “குறைவில் அருள் ஞானமுதல் கொற்றங் குடி அடிகள் - நறைமலர்த்தாட்கு அன்பு பெற்று நாமிருப்ப தெந்நாளோ” என்பது தாயுமானார் ஈடுபாடு ஆகும். இவ்வளவெல்லாம் பெருமை இருந்தாலும்,

புறச்சமயிகளாவாரும், நாத்திகரும், பொருமை மிக்காரும், ஞானமில்லாதவரும் இந்நூலாசிரியர் கூறுவதை மேற்கொள்ளத் தயக்கம்கொள்வர். "இவரும் நம்மைப்போன்ற மானிடர்தானே; நாம் ஏன் இவர் உரையை ஏற்றுக்கொள்ளவேண்டும்?" என்று வாதிப்பர். இப்படியெல்லாம் உலகம் மயக்கமுறுதலை - உறும் என்பதை - ஆசிரியர் நன்குணர்ந்தவரேயாவர். தாமாக, எந்தக் கருத்தையும் இட்டுக்கட்டிக் கூறித் திணிக்கவில்லை என்பதை இச்செய்யுளில் தாமே சொல்லிக் காட்டியிருக்கிறுர். இதனால், இந்த நூல் தற்போத முனைப்பாலியன்றதன்றென நாம் துணியலாம். இனி, இந்தச் சிவப்பிரகாச நூலில் தாம் கூறும் விஷயங்கள் யாவும், பரம்பரையாக வேதாகம விருத்தம் இன்றி இறைவனருளால் இயன்றவை என்பதைக்கூறி விளக்கலுறுகின்ருர் ஆசிரியர்.

### தெரித்த குருமுதல்வர் உயர் சிவஞான போதம் செப்பினர் :

இந்தப் பிராந்தியத்தில் நாமெல்லாரும் பேசுவது தமிழ்மொழி ஆகும். ஒருகாலத்தே ஆரிய வடமொழியும் சீரிய தமிழ்மொழியும் உலகத்தின் வடக்கிலும் தெற்கிலுமாக முறையே வழங்கி வந்தன என்பர். இவை இரண்டும் நாதம் எனப்படும் ஒரே தத்துவத்தாலமையப்பெற்றவையே. என்ருலும், தமக்குள் சிற்சில ஒலி வேறுபாடுகள், இலக்கண அமைதி வேறுபாடுகள் முதலியவற்றைத் தாம் பரவி வழங்கிய திசைக்கும், திசைமக்களியற்கைக்கும் ஏற்பக் கொண்டன. இவ்வாறு இருப்பினும், கருத்தால் வேறுபடாமல் அவை ஒற்றுமை உடையனவே. இதுபற்றியே,

“இருமொழிக்கும் கண்ணுதலார் முதற்குரவர்” என்ற பாடலைக் கூறிக்காட்டியுள்ளனர் பெரியோர்.

இப்போது, உலகில் பல்வேறு மொழிகள் வழங்கி வரினும், இவை யாவும் மேலே சொல்லப்பட்ட இரு திறந்து மொழிகளுள் அடங்கிவிட வல்லனவேயாம். தொன்றுதொட்டுத் தென்னகத்தார் தமிழையும் வட புலத்தார் ஆரியத்தையுமே பேசிவரலாயினர். இவ்விரு மொழிகளும் ஒருமுதலையும், ஒருமுடிவையுமே தாம் பெற்றவையாயினும் நாளேற ஏற இருவேறுபட்ட தன்மை உடையவைபோலாயின. இதனாலே, மூலப் பொருளாம் பரமன், அவரவர் விருப்பின்வண்ணம் ஒரே கொள்கையை இரு வேறுமொழிகளாலும் வெளி யிட்டருளினன். “வடமொழியைப் பாணினிக்கு வகுத் தருளி” என்னும் பாடல் இக்கருத்தினை உதாகரித் துணர்த்துவதேயாகும். ஆகவே, பரமசிவன் தன்னை உபதேசம் அடைய நாடினோர்க்கு அவர்தம் விருப்பின் வண்ணம் எம்மொழியாலும் போதனைசெய்தலாயினன். அங்ஙனம், நாடினோருள் ஸ்ரீ நந்திதேவர், பரம்பொரு ளிடமாகத் தமக்கு விருப்பமுள்ள வடமொழிவாயிலாக ஞானநெறியை அறியலுற்றார். இவர், வடமொழி வாயிலாக அறியலுற்றதனாலே, உண்மைப் பொரு ளொருமையில் மாறுபாடு ஏதும் ஏற்பட வழியில்லை. ஒரே பானையில் சமைந்த சோற்றில், ஒரு பாதியிலிருந்து எடுத்த சோற்றுத்திரளை அப்பாதியின் அருகில் நிற் போருக்கும், மறுபாதியிலிருந்து எடுத்த சோற்றுருண் டையை அப்பாதியின் அண்மையில் அமர்ந்திருப் போருக்கும் படைப்பதனாலே, சோற்றுச் சுவையிலோ அது உடம்புக்கு விளைக்கும் சத்துத்தன்மையிலோ வேறுபாடு எதுவுமே விளைந்துவிடாது. ஆனால்

அவரவரும் அந்தச் சோற்றுடன் கலந்துகொள்ளும் குழம்பு, கறி முதலியவற்றின் மாறுபாட்டால் சுவையிலும், சத்திலும் வித்தியாசம் காண்பது இயல்பேயாகும். இப்படிப்பட்டதே வடமொழி தென்மொழி விஷயம். ஆகவே, ஸ்ரீ நந்திதேவர் முதலாகப் பரஞ்சோதியார் வரையில் வழிவழியாக வந்த உபதேசத்தின் மொழியின் தன்மையால் கருத்து மாற்றம் ஏற்பட்டுவிட ஏது, ஏதும் இல்லையாம்.

முன்னமே சொல்லியுள்ளபடி நாம் யாவரும் தமிழ்மொழியையே பேசவும், உணரவும் பழக்கப்பட்டிருக்கிறோம். இந்தப் பழக்கம் நம்பால் உறைப்புண்டிருத்தலாலேதான், ஸ்ரீ பரஞ்சோதிமுனிவர் தாம் வழிவழியாக வடமொழிவாயிலாக அடைந்துவந்துள்ள உண்மை ஞானத்தைத் தமிழிலே எள்ளளவும் மாறுபாடு எய்தாதபடி ஆக்கியுதவவல்ல ஸ்ரீ மெய்கண்டதேவரைத் தமது ஞான புத்திரராகக் கொள்ளலுற்றார். எனவே, அதுகாறும் வடமொழி ஊர்தியிலேறிவந்த மெய்ஞ்ஞானபோதம், ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் முதலாகத் தமிழ்மொழியிலே வரலுற்றது. இங்ஙனம், தமிழ்மொழியிலே முதல்முதலாக நமக்கு மெய்ஞ்ஞான போதத்தை நூல்வடிவிலே ஆக்கியளித்த முதற்குரவர் ஸ்ரீ மெய்கண்டதேவர் ஆதலின் **தெரித்த குருமுதல்வர்** எனக் கூறி மகிழ்கின்றார் ஆசிரியர். ஆகவே, சிவஞான விஷயத்தைத் தமிழிலே சமைத்து முதன்முதலாக அளித்த பெருமை நம் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாருடையதேயாகும். **தெரித்த** எனும் சொல் இச்சிறப்பினை அறிவிப்பதாகக் கொள்ளப்படல் பொருந்தும். ஸ்ரீ மெய்கண்டதேவர், இவ்வாறு, தீந்தமிழ்மொழியாலே சுத்தாத்துவித சித்தாந்தக் கொள்கையினை

வேதாகம விருத்தமின்றி ஆக்கியுதவிய அந்நூலே சிவ ஞானபோதம் எனப்பட்டது. தமிழால் இயன்ற முதல் நூலாக இஃது உள்ளமையாலும், எல்லாவிதமான நியாயங்களும் பொருந்துமாறு அமைந்திருப்பதாலும் இதனை **உயர் சிவஞானபோதம்** என ஆசிரியர் சிறப்பித் துரைத்துள்ளார் ஆவர். **செப்பினர்** என இவ்வாக்கி யத்தை முடித்து, அடுத்த வாக்கியத்தை விரித்தனர் என்பதனுல், இந்நூல் சுருக்கமாக அமைந்துள்ளமை தெரியலாம். மற்றும், சிவஞானபோத நூலின் சிறப் புக்களை அந்த நூல் முகவுரையினுல் அறியலாகும். இதனுல் முதல்நூல் கூறப்பட்டது.

**பின்பு அவர் புதல்வர் சிவஞானசித்தி விரித்தனர் :**

பிறகு, ஸ்ரீ மெய்கண்டதேவராலே ஆட்கொள்ளப் பட்டு அவருடைய சீடராக விளங்கியவர் சகலாகம பண்டிதர் எனப்படும் ஸ்ரீ அருள்நந்தி தேவநாயனுர் ஆவர். இவர் சீடரான வரலாறுகளைச் சரித்திர வாயி லாகத் தெரிதல் தக்கதாகும். இங்ஙனம், குலாசாரிய ராக முதற்கண் விளங்கியவரே பின்பு சீடராக ஆயி னமை தோன்றும்வண்ணம் **அவர் புதல்வர்** என்று சொல்லி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். **புதல்வர்** என்பது ஞானோபதேசம்பெற்ற முறைமையை ஈண்டு உணர்த்திநிற்பதாகும்.

இந்த ஆசிரியர், வடமொழி வேதாகமங்களை முற்றக் கற்றவர்; தென்மொழியிலும் வல்லுநர். ஆத லால், இவர், தமது ஆசாரியராகிய ஸ்ரீ மெய்கண்ட தேவர் அருளிச்செய்துள்ள சிவஞானபோதம் என்னும் சாத்திரம், வடமொழி வேதாகமங்கட்குச் சாரமாகச்

சற்றும் மாறுபாடின்றி அமைந்துள்ள பெற்றியை நாமெல்லாரும் நன்கறியும்வண்ணம் தமிழிலே விருத்த யாப்பினுல் சிவஞானசித்தியார் என்னும் சாத்திர மாகப் பரபக்கம், சுபக்கம் என்னும் பாகுபாடமைய விரித்தருளிச் செய்துள்ளாராவர். "குவலயத்தினவ்வழி எங்குருநாதன்கொண்டு திதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தி என்றே" என இவ்வாசிரியர் கூறுவதனுல் இவ்விஷயம் தெரியப் படும். மற்றும் இந்தச் சிவஞானசித்தியார் என்னும் சாத்திர நூலின் சிறப்பினை, "பாதி விருத்தத்தால் இப் பார் விருத்தமாக உண்மை - சாதித்தார்" என்று தாயு மானவர் போற்றுதலினுலும் நாம் அறியக்கூடும்.

மற்று அவர்கள் திருவடிகள் போற்றி :

திருக்கயிலையிலே ஸ்ரீகண்டசிவமும், ஸ்ரீ நந்தி தேவரும்போல, இந்தப் பூவுலகிலே தமிழகத்திலே ஸ்ரீ மெய்கண்ட சிவமும், ஸ்ரீ அருள் நந்திதேவரும் விளங்கியுள்ளமையினுலும், பரமன் பகர்ந்தருளிய உப தேசத்தை நந்தியெம்பெருமான் விளங்க விரித்துச் சொல்லியருளியவாறுபோன்று, ஸ்ரீ மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோதத்தை ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரியர் விரித்துச் சித்தியார்ப் பெயரிட்டுச் செய் தருளியமையாலும் நம் ஆசிரியர் அவ்விருவருடைய திருவடிகளையும் ஆர்த்தியோடு தாம் வழிபடுநெறியினை நாமுணருமாறு இங்ஙனம் கூறியுள்ளார். இதனுல் நாமும் மேற்கூறப்பட்ட இருவரையும் கண்காண எழுந்தருளியுள்ள சிவமும் நந்திதேவருமாகக்கொண்டு அன்னூடம் வழிபடல் ஆன்மலாபம் பயக்கும் என்னலாம்.

**விளம்பிய நூல் அவை இரண்டும் விரும்பிநோக்கி :**

சுருக்கமாகவும் விரிவாகவும் உள்ள அந்த இரண்டு நூல்களையும் நம் ஆசிரியர் உபதேசவழியாலே பெற்றவராவர். அங்ஙனம் கேட்டமையோடு அமையாமல், சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடவும் பெற்றவராவர். இதனால் உபதேசநெறியும் அநுபவஞானமும் ஒன்றுபட்டிருத்தலை நம் ஆசிரியர் உவகையோடும் கண்டருளினர். இங்ஙனம், தாம் அவ்விரு நூல்களிலும் அழுந்தியறிந்து அனுபவமுற்ற தகைமையினை விரும்பி நோக்கி என்றுரைத்துக் காட்டியுள்ளார் என்னலாம். மற்றும், இந்நூற்பாக்கள் போதமும் சித்தியுமாகிய இருநூல்களின் போக்கிலேயே சென்றுள்ளன என்பது கருத்தாமென்க.

**கருத்தில் உறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து :**

இறைவன், பொதுவாக யாவருள்ளத்தும் மேவியிருப்பவன் ஆவன். என்றாலும், பக்குவிகள் உள்ளத்தே தயிரில் நெய்போலத் தெளிய இருப்பன். நம் ஆசிரியர் சிறந்த அநுபூதியாளர். ஆசாரிய உபதேசமுறையாலே பக்குவப்பட்டவர். இங்ஙனமான இவரது கருத்திலே அந்நியமிலாமையாலே இறைவன் உள் நின்று உணர்த்துவன். இதனாலே அருள் வெளியுள் ஆசிரியர் அழுந்தியிருக்கும் தன்மையராவர். அதாவது திருவருள் செலுத்துமுறைமையிலே செல்லுபவராவர். ஆகவே, தாம் அருளிச்செய்யுமவை ஆசாரியராம் சிவத்தினது திருவருளால் நிகழ்பவை என்று நமக்கு உறுதியுரைக்கும்பொருட்டுக் கருத்தில் உறை திரு

வருளும் என்றுராவர். இது ஆசிரியர், முன்னே கூறப்பட்ட இருவகை ஞானங்களுள் பதிஞான வாய்ப்புப் பெற்றுள்ள தன்மையை நமக்குக் காட்டும். அபர ஞான வாய்ப்பிருத்தலை இறைவன் நூலும் கலந்து என்று இவர் கூறுவதனுல் அறியலாம். இறைவன் நூல் என்பது சிவாகமங்களைக் குறிக்கும். கலந்து என்பதனுலே சிவப்பிரகாசம் எனப்படும் இந்நூல் ஆகம நெறிக்கு மாறுபாடில்லாமல் செய்யப்பட்டுள்ளதென நாம் அறியலாம். எனவே அபரஞான பரஞானத்துணை கொண்டும், ஆசாரியர்களுடைய அநுபவ உபதேசத் தெளிவை அநுபவித்தும் தாம் இந்தச் சாத்திரத்தைச் சமைத்தருளுவதாக ஆசிரியர் சொல்லுதல் காணலாம். இதனுல், இவ்வொருநூலை உண்மைப் பொருளறிந்து ஓதினுலே வேதாகம சாத்திரக்கருத்துக்களை எல்லாம் தெளிவாக உணரப்பெறலாம் என்று தெரிகின்றது.

பொது உண்மை எனக்கருதி :

இந்தச் சிவப்பிரகாசம் என்னும் நூல் பொது அதிகாரம் உண்மை அதிகாரம் என்ற இரண்டு பகுப்பினைக் கொண்டது. சிறந்த அறிவுபெறக் கருதுபவர் யாரும் கற்றல்மட்டில் மேற்கொண்டால் போதாது; கற்றபடி நிற்றலும் செய்யவேண்டும். அப்போதுதான் தெளிந்த ஞானம் ஏற்படும். இதுபற்றியே திருவள்ளுவரும் கற்க எனவும் நிற்க எனவும் ஒரே குறளில் கூறிப்போந்துள்ளனர். ஆகவே, பதி பசு பாசப் பொருள்களைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டிய கருத்துக்களையெல்லாம் சாமானியர்க்கும் விளங்கும்படி இந்த நூலின் பொது அதிகாரத்தில் ஆசிரியர் கூறுகின்றுராவர்.

இப்பால், விலக்க வேண்டியவைகளை விலக்கிக் கொள்ள வேண்டியவைகளைக்கொண்டு பதியோடு ஒன்றும் தன்மையினை அனுபவிக்கும் முறைமையை ஆசிரியர், தாம்கண்ட நெறிப்படி உண்மை அதிகாரத்தில் நம்மனோர்க்கு எடுத்துச் சொல்லியுள்ளாராவர். சாத்திர நூல்கள் எல்லாம் பொதுவும் உண்மையுமாகப் பகுத்துரைக்கப்படுவதே மரபு. ஆதலின், மரபுநெறி தவறாமல் இங்ஙனம் நம் ஆசிரியர் மொழிந்துள்ளமை, **எனக்கருதி** என்ற சொற்றொடரால் அறியப்படும்.

**அருத்தி மிக உரைப்பன் :**

மக்களாவார்க்கு எப்படியாவது சன்மார்க்கத்தின் பெருமையை உபதேசித்துவிடவேண்டும் என்னும் ஆசை நம் ஆசிரியர்க்கு உண்டு. அந்த ஆசை நாட்கு நாள் அதிகரித்த காரணத்தாலே இந்நூலாகத் தாம் செய்ய நேரிட்டதை ஆசிரியர் இங்ஙனம் சொல்லிக் காட்டியுள்ளார். தமது ஆசாரியர்கள் சிறந்த நூல்களைச் செய்தளித்திருப்பவும், தாமும் ஒருநூல் செய்தல் மிகையாம் என உலகம் கருதக்கூடுமாதலால், இவ்வாறு காரணங்காட்டிக் கூறலாயினர் என்னலாம். அன்றியும், இந்நூலை ஒரு சிறிது கற்போர்க்கும் இறையன்பு மிகவேண்டுமென்னுங் கருத்துடன் இப்படிச் செய்யப்பட்டது என நாம் கருதவும் இவ்வாக்கியம் இடந்தரும்.

**வளர் விருத்தம் நூறும் :**

பாயிரம் கூறும் முறைப்படி, இந்த நூலானது விருத்தயாப்பால் பாடப்பட்டது என்பதை இவ்வரியால் நாம் தெரியலாம்; இந்த நூல் சிவஞானபோதம்

போன்று மிகச் சுருக்கமானதுமன்று; சித்தியார் நூல் போன்று மிகவிரிவானதுமன்று என்று நாம் தெரியும் வண்ணம் விருத்தங்களின் எண்ணிக்கையை நூறும் எனத் தெரிவித்துள்ளார் ஆசிரியர். மற்றும், வளர் விருத்தம் என்பதனாலே நாம், இந்நூலிலுள்ள செய்யுட்களைச் சிந்தை செய்யச்செய்ய அரும்பொருட்கள் அளப்பிலவாய் விளங்கிக்கொண்டேயிருக்கும் என்றும் உணரலாம்.

**ஆசு இல் சிவப்பிரகாசம் ஆகும் :**

இவ்வரி இந்த நூற்பெயரைத் தெரிவிப்பதாகும். எச்சமயத்தாரும், எக்கருத்து மாறுபாடுகொண்டு நோக்கினாலும் இந்நூலிற் குறை சிறிதும் காணமுடியாதென்பார் ஆசு இல் என்றார். மற்றும், ஆசாரியர்களின் உபதேச விசேடங்கொண்டும், ஆகமநூல்களின் துணைகொண்டும், இறையருள் உள்நின்று உணர்த்தும் உதவிகொண்டும் இந்நூல் இயற்றப்படுதலால், இதனிடம் குற்றம் குடிபுகக் காரணமில்லை என்கிற துணிவுகொண்டு இங்ஙனம் ஆசு இல் எனக் கூறியுள்ளார் எனலும் பொருந்துவதேயாம்.

நாம் அடையவேண்டுவது சிவஞானமே ஆகும். அந்தச் சிவஞானத்தை அடைவிக்கின்ற நெறிகளை இந்தச் சிவப்பிரகாச நூல் இனிதெடுத்தோதுதலின் இப்பெயரால் இயற்றப்பட்டது என்கிறார் ஆசிரியர். ஆகவே, குற்றமும் குறையுமுள்ள நூல்களை வறிதே ஓதி மயக்கமடைந்து பிறவிக்கு வழிகோலிக்கொள்ளாமல், நாம் இந்நூலை ஓதிச் சிவப்பிரகாசத்திலே இலயிப்புறலாம் என்க!

## 12. அவை அடக்கம்

தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா; இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா; துணிந்த
நன்மையினார் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர்; நடுவாம்
தன்மையினார் பழமைஅழ(கு) ஆராய்ந்து தரிப்பர்;
தவறுநலம் பொருளின்கண் சார்வார்ஆய்ந் தறிதல்
இன்மையினார் பலர்புகழில் ஏத்துவர் ஏதிலருற்(று)
இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனஒன்
[றிலரே.

## பொழிப்புரை

பழையன ஆகும் என்று சொல்லப்படும் எத்துணைச் சிறப்புடைய நூல்களும் பதி பசு பாசங்களை விளங்கச் சொல்லாவாயின், நன்மை ஆகா; இப்பொழுது உண்டான நூல் என்று சொல்லப்படும் எத்துணைச்சொல் இழிவு உடைத்தாயினும், அவைகளை விளங்கச்சொல்லுமாயின் தீமை ஆகா; தெளிந்த உத்தமரானவர்கள், நல்ல குணத்தைக் கொண்டிருக்கிற மணியைப் பொதியும் குற்றம் பொதியப்படும் மணியின் குற்றம் ஆகாதென்று கருதி அப்பொருளின் உண்மைத்தன்மையை விரும்புவார்கள்; அதுபோல இந்த நூலும் திரிபதார்த்தத்தைச் சொல்லுவதனாலே சொற்குற்றமும் புதுமையும் கொள்ளாது பொருள் உண்மையையே கொள்வர். இனி, மத்திமமான முறைமை உடையவர்கள் உத்தமரைப்போலப் பொருளின்மை தீமை கேட்ட மாத்திரத்திலேயே அறுதியிடமாட்டார்; ஆகையாலே, பண்டுள்ள நூல்களின் அழகைப்பார்த்து அவை இரண்டும் ஒப்பின் கொள்வர்; உத்தமரைப்போலக் குணமும் குற்றமும்

பொருளினிடத்துச் சார்தலை ஆராய்ந்து அறிதலும், மத்திமரைப்போல ஒப்புமை நோக்கி அறிதலும் இல்லாத அதமர்கள், இந்நூலை அறிவுடையோர் பலரும் இருந்துகொண்டாடின் தாமும் கூடியிருந்து கொண்டாடுவர்; இதனைப் பரசமயிகள் இகழ்ந்துரைக்கில் தாமும் கூடியிருந்து இகழ்ந்து உரைப்பார்கள். இவர்கள் தமக்கென ஓர் அறிவில்லாதவர் ஆவர்.

## விளக்கவுரை

மக்கட்குச் சிறந்தது கல்வி; கல்வியிற் சிறந்தது கற்ற விஷயத்தை அறிதல்; அறிவுக்குப்பயனாயிருப்பது, ஒழுக்கமாகும். அவ்வொழுக்கங்கள் பலவற்றுள்ளும் மேலானது அடக்கமுடைமை ஆகும். இதனாலேயே 'கற்றறிந்தார் கண்டது அடக்கம்' என்றனர் சான்றோர். 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' எனச் சான்றோரியல்பு கூறவந்த இடத்தும் புறநானூறு அடக்கத்தை வலியுறுத்திருப்பதைக் காணலாம். மேரு மலைக்கும் வளைவு வந்தது. மகாவித்துவானையும் சிறு பிள்ளை வெல்வான். காரெருமை மேய்க்கும் காளையர்க்கு ஒளவையார் தோற்றார். பொய்யாமொழிப் புலவர், வேடன் சொற்குக் கட்டுப்பட்டு வாய்மடங்கினர். இப்படிப்பட்ட சொற்களும் நிகழ்ச்சிகளும் எவருக்கும் கல்விச் செருக்கு இருத்தல் ஆகாது என்பதையே சொல்லுகின்றன.

நம் ஆசிரியர் சிறந்த ஞானி ஆவர். என்றாலும், தம் அறிவின் துலக்கமெல்லாம் ஆசாரியர் திருவருளாலே வாய்த்தது என்ற திடசித்தம் படைத்தவர். பொதுவாகவே, ஒரு நூலாசிரியர் ஒரு நூலை இயற்றினால், அந்த நூலைத் தம்மின் மேலோரும் பார்ப்பர்

எனவும், தம்மையொத்தாரும் காண்பர் எனவும், தம்மின் குறைவுடையாரும் படிப்பர் எனவும் கருதக் கடமைப்பட்டுள்ளார் ஆவர். இந்த மூன்று திறத்தா ருள்ளும் மேலோர், தம்மினும் அறிவு ஆற்றல் அநுபவங்களில் மிகுதிப்பட்டவராதலால் தமது நூலில் குற்றமிருப்பின் பொறுத்துக்கொள்ளுமாறு வேண் டிடுவர். இங்ஙனம், தம்மினும் அறிவு சான்றவர்கள் இருத்தலை நினையுங்கால் ஓர் அடக்கம் உள்ளத்தே உதிக்கும். அத்தகைய அடக்கத்தோடு கூறிக்கொள் ளப்படும் பணிவுரையே நூலில் 'அவையடக்கம்' எனப்படும். மேடையேறிப் பேசுவோர் விஷயத்திலும் இந்த நியதி பொருந்துவதாகும். இந்த முறைமைபற்றி நம் நூலாசிரியர் தாம் இயற்றும் இந்த நூலுக்கு அவை யடக்கம் இப்பாடலில் கூறுகின்றார்.

நூல்கள் இயற்றப்படும் காலவேறுபாட்டினால் இரண்டு பிரிவுபடும். சில நூல்கள் பழமையானவை ஆகும். வேறு சில புதுமையானவை ஆகும். காலம் செல்லச்செல்ல மக்களின் மனவளர்ச்சிப்பாங்கில் மாறு பாடு காணப்படுவது இயல்பே. இதனாலேயே, பழைய நூல்கள் இருப்பவும் அதே பொருளைக் கூறும் புது நூல்கள் இயற்றப்படுகின்றன. இந்த வகையில் சிவ ஞானபோதமும், சிவஞானசித்தியாரும் இவ்வாசிரியர் காலத்துக்கு முந்தியே இயற்றப்பட்ட பழமையான நூல்கள் ஆகும். இவ்வாசிரியர் இதுபோது இயற்றும் இந்நூல் புதுமையானதாகும். பொதுவாக உலகம் பழமையையே சிறந்ததெனப் பாராட்டும் இயல்புடை யது. "பழங்கதைகள் பேசுவதில் ஓர் பெருமையில்லை" என்பர் பாரதியார். சீர்திருத்தவாதிகட்கு இந்தப்பழமை பாராட்டல் பிடிக்காது. இவர்கள் புதுமையேபோற்று

பவராவர். இப்படி இருதிறத்தினர் இருத்தலாலேதான் பழையநூல்களும், புதியநூல்களும் ஆகிய இரண்டு வகை நூல்களும் உலகுக்குத் தேவையாகின்றன. எனவே, உண்மையைக் காய்தலும் உவத்தலுமின்றி ஆராய்பவர்கள் நூலினது காலப்பழமைபற்றியோ, புதுமைபற்றியோ கருதலாகாது. அந்நூல் கூறுகின்ற பொருளைப்பற்றியே கருதவேண்டும். பழைய நூல் களாயிருந்து அவற்றில் நன்மை இல்லாதிருக்கலாம்; புதிய நூல்களாயிருந்தும் அவற்றில் தீமை இல்லா திருக்கலாம். ஆகையால், இந்த நூல்ஆசிரியர், தாம் இயற்றும் இந்தச் சிவப்பிரகாசம் எனப்படும் நூல் புதிய நூலாயிற்றே என்று காலம்பற்றி ஆராய்ச்சி நிகழ்த்தாதிருக்கும்படி முதலில் கோருகின்றாராவர். இதனைத் **தொன்மையவாம் எனும் எவையும் நன்று ஆகா; இன்று தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா** என ஆசிரியர் கூறியுள்ள பகுதியால் உணர லாகும். இதனால் காலத்தைக் கருத்துட்கொண்டு நூலின் குணதோஷங்களை ஆராய்தல் கூடாதென்பது பெற்றாம். இன்னம் நுணுகி நோக்கினால், பழைய நூல்களில் குற்றம் குறைவாயிருப்பதுண்டு எனவும், புதிய நூல்களில் நன்மை குறைவாயிருப்பதுண்டு எனவும் நாம் கருதுதற்கும் இடமுண்டு. இதன்படிக் கொண்டால், தம்முடைய நூலில் நன்மைக்குறை பாடு இருப்பினும் ஆன்றோரால் கொள்ளப்படும் என ஆசிரியர் கருதுகின்றார் என்பது புலப்படும்.

**நலம்கொள் மணி பொதியும் அதன் களங்கம் நவை ஆகாது :**

உடம்பு, உயிர் என்ற இரண்டில் உயிர் சிறந்தது. ஒருவனுடைய குணம் குற்றம் என்பன அவனுடைய

உடம்பைச் சார்ந்தன ஆகா; அவனுடைய உயிரைச் சார்ந்தன ஆகும். "புறம் தூய்மை நீரான் அமையும்" என்னும் குறட்பாவும் இக்கருத்துக்கு உறுதிதருவதே யாகும். இதனால் குணதோஷங்கள் எனப்படுவன உயிரின் இயற்கையே எனவும், உடம்பின் இயல்பன்று எனவும் நாம் துணியலாம். இப்படிக் கொள்வோமாயின், ஒருநூலுக்கு உடம்பென்பது அதன் எழுத்தும் சொல்லுமாம்; உயிர் என்பது அந்நூல் நுவலும் பொருளேயாம். இதுபற்றியே கருவிநூலாசிரியர்கள் எழுத்து, சொல், பொருள் என நூலின்பகுப்பை விதந்தோதலாயினர்.

எழுத்து சொல் ஆகிய இரண்டும் தெரிந்து பயன் இல்லை; பொருள்தெரிதலே பயனும் என்பதை இறையனார் அகப்பொருள் உரை வரலாற்று வாசகத்தாலும் நாம் அறியலாகும். இதனால், ஒரு நூலுக்கு அதன் எழுத்தும் சொல்லும் உடல் எனவும், அதன் பொருள் உயிர் எனவும் நாம் கோடல் தக்கதென்க. ஆதலால், ஒரு நூலை ஆராயப்புகுமவர்கள், அந்நூலின் எழுத்து சொல் என்கின்றவற்றின் குற்றங்களை ஆராய்ந்து பொருளை ஆராயாது முடிவுகட்டிவிடக் கூடாதென்பது புலப்படும். ஆகவே, பொருளாராய்ச்சியே இன்றியமையாததாகும். இந்த முறையைக்கொண்டு பார்த்தால் சிவப்பிரகாசநூலை ஆராயப்புகுபவர்கள் அதன் எழுத்துக்குற்றம் சொற்குற்றங்களைமாத்திரம் ஆய்ந்து நூல் குற்றமுடையதென்று தீர்மானித்துவிடக்கூடாது என்பது ஏற்படும். எதுபோல எனில்,

நவமணிகளுக்குக் கூறப்பட்ட சகல லக்ஷணங்களும் ஒன்றுலொன்று குறையாதபடிப் பெற்றுள்ள

மும்மணிகள் உள்ளன என்று வைத்துக்கொள்வோம். (நவமணிகளின் குணதோஷ விவரங்களை இவ்வாதீனத்து 128 ஆம் வெளியீட்டால் அறியலாகும்) இந்த மூன்று மணிகளும் ஓர் இரும்புப் பேழைக்குள் ஓர் அழுக்குத் துணிக்குள்ளே பொதிந்து வைக்கப்பட்டு உள்ளன. வெளித்தோற்றத்தே இரும்புப் பேழையையும் அதனைத் திறந்து காண்கையில் ஒரழுக்கேறிய துணியையும் நாம் காணலாம். ஆனால் உள்ளே உள்ள மணிகளின் அளவையோ அழகையோ நாம் காண முடியாது. அழுக்குத்துணி கறுப்பாக இருப்பதனால் உள்ளே உள்ள மணி அழுக்கேறிய கறுப்புநிறமுடையதாகிவிடாது. அன்றி, இரும்புப் பேழைக்குப் பூசப்பட்டுள்ள நிறத்தை அந்த மணியானது ஒருபோதும் ஏற்றுக்கொண்டுவிடாது.

மணிகளின் இருப்புக்குமட்டில் இடம் தந்துகொண்டிருப்பன துணியும் பேழைகளுமாம். துணி, பேழை ஆகிய இரண்டினும் மதிக்கத்தக்கது அவற்றினுள் உள்ள மணிகளேயாகும். ஆதலால், மணிகொள்ளும் நாட்டமுடையோர் யாரும் அதனிருப்பிடமாக உள்ளவையான துணி, பேழைகளின் குணதோஷங்களைப்பற்றிச் சிந்திக்கவே மாட்டார்கள். மணிகளின் அளவும் மதிப்பும் குணமும்பற்றிச்சிந்தித்துக் கொள்ள முடிவுசெய்வர். அங்ஙனம் வாங்கிக்கொள்ள முடிவு செய்தவர்கள், வாங்கும்போது, துணியையும் பேழையையும் வாங்கார். வாங்கின பின்பும் அவற்றைப்பற்றி எண்ணமிடார். இதனால், துணி பேழைகளின் குற்றம், மணிகளின் குற்றமாகாதென நாம் தெரியலாம். இந்த உவமானமே இந்தப் பொதியுமதன் களங்கம், நலங்கொள் மணி நவை ஆகாது என்பது. இவ்வாறே

"நீக்குபவர் யார் அரவின் பருமணி கண்டு என்றும் கவரார் கடலின் கடு" என்ற உவமை இருத்தலை நன்னெறிப் பாட்டும் பகரும்.

**துணிந்த நன்மையினுர் உண்மை நயந்திடுவர் :**

சொல்லும் எழுத்தும்பற்றிய குற்றங்கள், பொருள் சிறப்பு உடையதாயின் அதனைச் சாரா என்பதை நிச்சயமாக அறிந்த உறுதிப்பாடுடையவர்கள் துணிந்த நன்மையினுர் எனப்படுவர். இவர்கள், இந்தச் சிவப் பிரகாசம் என்னும் நூல் சொல்லும் பொருளையே மதிப்பர். நூல் நுவலும்பொருள் பதி பசு பாச உண்மை நுண்மைகள் ஆகும். இந்த முப்பொரு ளறிவைவிட மேலான அறிவு எதும் இல்லை. எனவே, இந்நூலால் கூறப்படும் பொருள் மேலானதாக இருத் தல்பற்றி அதனையே கொள்வார்கள் மேலோர்கள். அல் லாமல் இந்நூலின் சொல்லும் எழுத்தும்பற்றிய குற்றங் களைக் கருதிப் பார்க்கமாட்டார்கள். இப்படி ஒரு நூலை ஆய்ந்து உண்மை காண்போர் உத்தமர்கள் ஆவர். இவர்கள் இந்நூலுக்குள்ள பொருட்சிறப்புப் பற்றி ஒருகுறையும் கூறமாட்டார்கள் என ஆசிரியர் இவ்வாக்கியத்தால் நமக்குப் புலப்படுத்துகின்ருராவர்.

**நடுவாம் தன்மையினுர் பழமை அழகு ஆராய்ந்து தரிப்பர் :**

இனி, நடுத்தரமான ஆய்வாளர்கள், பழம்பொரு ளின் சிரேட்டத்தையே பெரிதும் மதிப்பவராதலால், இந்த நூலினிடத்தே கூறப்பட்டுள்ள பழம்பொருளின் அளவையும் அழகையும் கண்டு இந்நூலை ஏற்றுக் கொள்வாரேயல்லாமல் மறுக்கமாட்டார்கள். பதி பசு

பாசம் என்பன நித்தியப் பொருள்களாதலால் பழம் பொருள்கள் என்பதில் மாறுபாடு இல்லையாம். இவ் வொவ்வொன்றும், தடத்தம் சொரூபம் எனப்படும் லக்ஷணமுறையிலே இந்நூலிலும் சொல்லப்படுதலால் பழமை அழகு ஆராய்ந்து தரிப்பர் என்கிறூர் ஆசிரியர். ஆகவே உத்தமர் மத்திமர் என்னும் இருதிறத்து ஆய் வாளர்களும் பொருட்சிறப்பையே பெரிதும் மதிப்பவ ராதலால் இவர்கள் இந்நூலுக்குக் குறை ஏதும் கூற மாட்டார்கள் என்பது துணியப்பட்டது.

**தவறு நலம் பொருளின்கண் சார்வு ஆராய்ந்து அறிதல் இன்மையினுர் பலர் புகழில் ஏத்துவர்; ஏதிலர் உற்று இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்; தமக்கு என ஒன்று இலர்:**

இனி, அதமராவார், குற்றமும் குணமும் பொரு ளின்கண்ணவை என்று தாமாகவும் தெரிந்திலர்; ஆராய்ந்தும் தெரிவதிலர். ஆதலால், இவர்கள் உண்மை அறியும் அறிவில்லாதவராவர். கைகளில்லாதவன் கட்டிப்பிடிக்கக் கருதுவதுபோலத்தான் இவர்கள் ஆராய்ச்சி இருப்பது. இன்மையினுர் என்பது இத் தகையினரைக் குறிக்கும் சொல்லாகும்.

தமக்கெனச் சுய அறிவும், ஆய்வறிவும் இவர் களிடம் இல்லாமையால் இவர்கள் சும்மா இருந்து விடமாட்டார்கள். சைவசமய அறிவுடையோர் பலர் கூடி இந்நூலை மதிப்பார்களானுல் அதனைக்கண்டு தாமும் இந்நூல் சிறப்புடையதெனப் புகழ்வர். இவர் கள் தரும் புகழ் இரவல்வாங்கி வழங்கும் புகழாம். ஆதலின், இவர்தம் புகழுரை பொருளுடைத்தன்ரும்.

இவ்வாறன்றிச் சைவசமய உண்மை அறியாத பிறர் பலரும் இந்நூலை இகழ்வாராயின் அவர்கள் பக்கம் கூடிக்கொண்டு இவ்வதமர்கள் தாமும் இகழ்ந்திடு வார்கள். புறச்சமயிகள் இழிபுரை, அறியாமையோடு அழுக்காறும் கொண்டது. அறியாமை, அழுக்காறு என்னும் இவ்விரண்டும் உண்மையை ஒருபோதும் காணமாட்டா. ஆதலால், இவ்விரண்டும் உடையார் கூற்று உண்மையுடைத்தன்றாம். ஆகலின், இவர்கள் வழி யொழுகும் அதமர் கூற்றும் உண்மை உடைத் தாகாதென்பது தேற்றம். சாயும் பக்கமே சாயும் இயல்புடைய இவர்கள் சுய அறிவில்லாதவராவர். ஆதலின், சுதந்தரமற்ற இவர்களை ஆசிரியர், தமக்கென ஒன்று இலர் எனலானார். ஒன்று - என்றதனால் இப் பிறப்பில் அறிவடைதற்கான முன்னைத்தவமும் இலர் என்பது பெறப்படும். எனவே, இவர்கள் உரை ஒரு போதும் எவராலும் மதிக்கத்தக்கதன்றாம் என்க.



இங்ஙனம் உத்தமர்கள் பொருட்சிறப்பு இந்த நூல் உடைமைபற்றி இகழாராவர். அதமர்கள் தமக்கென அறிவில்லாததனால் இவர்கள் கூற்றில் உண்மை இல்லையாயிற்று. ஆதலின் இந்நூலை எவர் ஏற்பரோ, எவர் மறுப்பரோ என அஞ்சிக் கூறவேண்டிய அவசிய மில்லையாயிற்று நம் ஆசிரியர்க்கு என நாம் தெரியலாம். இதனால் உத்தமர்க்கு அடங்குதலும், அதமரை அடக் குதலும் ஆகிய இருதிறத்து அவையடக்கமும் இச் செய்யுளால் கூறப்பட்டதாயிற்றென்க. இந்தக் கட் டுரைக்கும், இவ்வாசிரியர் கூறியுள்ள இந்த அவை யடக்கமே மேற்கொள்ளப்படுகின்றது.

மங்கலவாழ்த்துப்பகுதி முற்றிற்று.